# சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்

## (SANGA AGAMARAPUK KURUKALUM PERUNKATAIYUM)

(புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு)

ஆய்வாளர்

ஆ. சரோஜினி

**A. SAROJINI**

பதிவெண் : 20161125011

நெறியாளர்

முனைவர் சிவ. மாதவன்

இணைப்பேராசிரியர் (ப.நி)




தமிழியல் துறை

காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்

(தன்னாட்சி)

புதுச்சேரி - 605 008.

செப்டம்பர் - 2021

# சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்

**(SANGA AGAMARAPUK KURUKALUM PERUNKATAIYUM)**

(புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு)

ஆய்வாளர்

ஆ. சரோஜினி

**A. SAROJINI**

பதிவெண் : 20161125011

நெறியாளர்

முனைவர் சிவ. மாதவன்

இணைப்பேராசிரியர் (ப.நி)




தமிழியல் துறை

காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்

(தன்னாட்சி)

புதுச்சேரி - 605 008.

செப்டம்பர் - 2021

முனைவர் சிவ. மாதவன்
இணைப்பேராசிரியர் (ப.நி) & நெறியாளர்,
காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்ட மேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனம் (தன்னாட்சி),
இலாசுப்பேட்டை,
புதுச்சேரி – 605 008.

# நெறியாளர் சான்றிதழ்

"சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்" என்னும் பொருளில் புதுவைப் பல்கலைக்கழக முனைவர் பட்டப்பேற்றிற்காக புதுச்சேரி காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனத் தமிழ்த் துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர் ஆ. சரோஜினி (பதிவெண் : 20161125011) பிப்ரவரி 2017 முதல் செப்டம்பர் 2021 வரை என் நெறிகாட்டுதலின் கீழ் ஆய்வு நிகழ்த்தியுள்ளார். இதற்கு முன் இவ் ஆய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும், ஆய்வு அரங்கிற்கும் அனுப்பப்படவில்லை. இஃது இவரின் சொந்த முயற்சியால் உருவானது என்று சான்றளிக்கிறேன்.

துறைத்தலைவர் மேலொப்பம்

நெறியாளர் கையொப்பம்

(முனைவர் சிவ. மாதவன்)

இயக்குநர் மேலொப்பம்

இடம்: புதுச்சேரி
நாள்:

ஆ. சரோஜினி
(பதிவெண் : 20161125011)
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனம் (தன்னாட்சி),
புதுச்சேரி – 605 008.

## ஆய்வாளர் உறுதிமொழி

“சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்” என்னும் பொருளில் முனைவர் பட்டப்பேற்றிற்காக ஆக்கப்பட்டுள்ள இவ் ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் இவ் ஆய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும், ஆய்வு அரங்கத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதி கூறுகிறேன்.

நெறியாளர் மேலொப்பம் — ஆய்வாளர் கையொப்பம்

(முனைவர் சிவ. மாதவன்) — (ஆ. சரோஜினி)

துறைத்தலைவர் மேலாப்பம்

இடம்: புதுச்சேரி

நாள்:

# நன்றியுரை

காஞ்சிமாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனத் தமிழ்த் துறையில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பு அளித்த புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

காஞ்சிமாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வினை மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய முன்னாள் இயக்குநர்கள் **முனைவர் தமிழரசி தமிழ்மணி**, **முனைவர் இரா. வசந்தகுமாரி**, **முனைவர் அறவாழி இரிசப்பன், முனைவர் மு. சங்கரராஜி** ஆகியோர்க்கும், இன்றைய இயக்குநர் **முனைவர் மு. செல்வராசு** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வுத் தொடர்பாகப் பல்வேறு கருத்துக்களை வழங்கியுதவிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் இரா. நிர்மலா** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**“சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்”** என்னும் தலைப்பில் ஆய்வினைச் செய்வதற்கும் இவ் ஆய்வேடு செம்மையுற அமைவதற்கும் உறுதுணையாக இருந்து என்னை நெறிப்படுத்திய எனது நெறியாளர் **முனைவர் சிவ. மாதவன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

மேலும் என் ஆய்வு விரைவாக நடைபெறுவதற்கு உதவிய நெறியாளுகைக் குழு உறுப்பினரான புதுவைப் பல்கலைக்கழக சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம், பேராசிரியர் **முனைவர் இரா. ஸ்ரீவித்யா** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ் ஆய்வினை மேற்கொள்ளத் தொடங்கிய காலம் முதல் ஆய்வேடு அளிக்கும் காலம் வரையிலும் பல்வேறு அறிவுரைகளையும், வழி காட்டுதலையும் நல்கி, ஆய்வு செம்மையுற உதவிய குழுவின் மற்றொரு உறுப்பினரான காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறைப் பேராசிரியர், **முனைவர் ப. கொழந்தசாமி** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்விற்கு உதவி புரிந்த எங்கள் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **முனைவர் மா. சுஜாதா, முனைவர் மு. இளங்கோவன், முனைவர் வேல். கார்த்திகேயன், முனைவர் ம.ஏ. கிருட்டினக்குமார்** ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வை மேற்கொள்ள ஓராண்டிற்கான ஆய்வு உதவித்தொகை வழங்கிய புதுவை அரசிற்கும் உயர் மற்றும் தொழில்நுட்பக் கல்வி இயக்குநருக்கும் என் மனமார்ந்த நன்றி உரியது.

ஆய்வு சிறப்பாக நடைபெறுவதற்கும், தரவுகளைத் திரட்டவும் பற்பல நூல்களைக் கொடுத்துதவிய காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்ட மேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவன நூலகம் (புதுச்சேரி), ரோமன் ரோலண்ட் நூலகம் (புதுச்சேரி), புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவன நூலகம் (புதுச்சேரி), பிரெஞ்ச் நூலகம் (புதுச்சேரி) ஆகிய நூலகங்களுக்கும் அங்குப் பணியாற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்விற்கு ஒத்துழைப்பு நல்கிய **மா. உமாபார்வதி** அம்மையாருக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

பல்வேறு வகையிலும் உதவி புரிந்து எனது ஆய்வு சிறக்க உறுதுணை செய்த **என் தாய் ஆ. ஜெயந்தி அவர்களுக்கும் என் மாமனார் ஐ. ரவிச்சந்திரன் அவர்களுக்கும் மாமியார் ர. ரேவதி அவர்களுக்கும் என் கணவர் ர. வினோத் அவர்களுக்கும் என் குழந்தை வி. நித்திஷ்க்கும் என் சகோதரி ஆ. சசிகலா அவர்களுக்கும்** என் நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

என் ஆய்விற்கு உதவிய முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கு என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

**(ஆ. சரோஜினி)**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத் | - | அகத்திணையியல் |
| அக. | - | அகநானூறு |
| இலக்க.விளக் | - | இலக்கண விளக்கம் |
| இளம் | - | இளம்பூரணர் |
| இறைய.அகப் | - | இறையனார் அகப்பொருள் |
| உதயணகுமார | - | உதயணகுமார காவியம் |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| உவமை | - | உவமையியல் |
| எழுத் | - | எழுத்ததிகாரம் |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| கடிமணப் | - | கடிமணப்படலம் |
| கம்ப | - | கம்பராமாயணம் |
| கலித் | - | கலித்தொகை |
| களவு | - | களவியல் |
| கற் | - | கற்பியல் |
| குறள் | - | திருக்குறள் |
| குறிஞ் | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலப் | - | சிலப்பதிகாரம் |
| சீவக | - | சீவகசிந்தாமணி |

| | | |
|---|---|---|
| சுவாமி.நா | - | சுவாமிநாதம் |
| சூளா | - | சூளாமணி |
| செய்யு | - | செய்யுளியல் |
| தமிழ்.விளக் | - | தமிழ்நெறி விளக்கம் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொ | - | தொகுதி |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| தொன்.விளக் | - | தொன்னூல் விளக்கம் |
| நம்பிய | - | நம்பியகப்பொருள் |
| நற்றி | - | நற்றிணை |
| நன் | - | நன்னூல் |
| நாச்சி. திரு | - | நாச்சியார் திருமொழி |
| நூ | - | நூற்பா |
| நெடு | - | நெடுநல்வாடை |
| பட்டின | - | பட்டினப்பாலை |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பதிற் | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| பால | - | பாலகாண்டம் |
| புறநா | - | புறநானூறு |
| பெருங் | - | பெருங்கதை |
| பொது | - | பொதுப்பாயிரம் |
| பொருள் | - | பொருளதிகாரம் |

| | | |
|---|---|---|
| பொருளி | - | பொருளியல் |
| மணி | - | மணிமேகலை |
| மது | - | மதுரைக்காஞ்சி |
| மர | - | மரபியல் |
| மலை | - | மலைபடுகடாம் |
| முல் | - | முல்லைப்பாட்டு |
| மெய்ப் | - | மெய்ப்பாட்டியல் |
| யசோதர | - | யசோதரகாவியம் |

# பொருளடக்கம்

## முன்னுரை

உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்றாகிய தமிழ்மொழி நீண்ட இலக்கிய வரலாற்றைக் கொண்டது. பிற இந்திய மொழிகளில் தோன்றிய அல்லது படைக்கப்பட்ட முதல் இலக்கியமாக இதிகாசங்கள் அமைகின்றன. ஆயின் தமிழ்மொழியில் மக்கள் வாழ்க்கையை மையமிட்ட இலக்கியங்களே முதலில் படைக்கப்பட்டன என்பது வரலாற்றின் வழி அறியப்பெறும் உண்மையாகும். இத்தகு சிறப்பு இந்திய மொழிகளுள் தமிழுக்கு மட்டுமே உண்டு என்பதும் அறிஞர்களின் ஒப்பமுடிந்த கருத்தாகும். தமிழில் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் படைக்கப்பட்ட பிறகே மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் தோன்றின என்பது எண்ணிப்பார்க்க வேண்டிய ஒன்று. இதனால் தனக்கெனத் தனித்ததொரு இலக்கிய மரபை உருவாக்கிப் பேணிக்காத்த சிறப்பு தமிழ் இலக்கிய வாணர்க்குரியது என்பது உணரப்படுகிறது. பிறமொழிகளில் படைக்கப்பெற்ற இலக்கியங்களைத் தமிழில் பெயர்த்து எழுதுவது தமிழ்மொழியின் வளத்தை மேம்படுத்தும் செயலாகும். அத்துடன் பிறமொழி மக்களின் வாழ்வியல் கருத்துகளைத் தமிழர்கள் அறிந்து கொள்ளவும் அது பேருதவி புரிகிறது. இவ்வாறு மொழிபெயர்ப்பு நூல்களை உருவாக்கும் போது, படைப்பாளர்கள் தத்தம் தாய்மொழிச் சூழலில் நிலவும் பண்பாட்டிற்கும் பின்னணிகளுக்கும் தக்கவாறு மொழிபெயர்ப்புக் கருத்துகளை மாற்றி அமைப்பது தவிர்க்க முடியாததாகும். தமிழில் எழுதப்பட்ட மொழிபெயர்ப்பு நூல்களை ஊன்றிக் கவனித்தால் இவ்வுண்மை நன்கு அறியலாகும். சீவகசிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம் போன்ற தழுவல்/மொழிபெயர்ப்பு நூல்களில் தமிழ் இலக்கியமரபின் சாயல் படிந்துள்ளதை அறிஞர்கள் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளனர். தமிழில் படைக்கப்பட்ட மொழிபெயர்ப்பு நூல்களுள் ஒன்றாகிய பெருங்கதைக் காப்பியமும் தமிழின் தொன்மை வாய்ந்த அகமரபுக் கூறுகளை உள்வாங்கிக் கொண்டு உருவாகியுள்ளதைக் காணமுடிகிறது. தழுவல் நூலாயினும் தமிழ்ப்பண்பாட்டின் சுவடுகளைத் தடம்மாறாமல் பதித்துள்ள பெருங்கதைக் காப்பியம் இந்த ஆய்வின் முதன்மை நூலாக அமைகிறது. அக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள அகமரபுக் கூறுகளை இனங்கண்டு, அதன்வழித் தமிழின் ‘அகப்பொருள் கொள்கை’

ஏற்படுத்தியுள்ள தாக்கம் வண்மையும் வன்மையும் மிக்கதாய் விளங்குவதை எடுத்துக்காட்டும் வகையில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பெறுகின்றது. தொல்காப்பியர் உருவாக்கிய அகக்கோட்பாடு சங்க நூல்களில் வழிமொழியப்படுகின்றது. அவ்வகக் கோட்பாட்டுக் கூறுகள் பெருங்கதையில் அதிலும் குறிப்பாக தழுவல் இலக்கியமாகிய அந்நூலில் பரவலாக இடம்பெற்றிருப்பதை கண்டறியும் முயற்சி, தொன்மை வாய்ந்த தமிழ் அகப்பொருள் மரபின் செல்வாக்கை நன்குஉணர உதவும் என்பதில் ஐயமில்லை எனலாம்.

## ஆய்வுத்தலைப்பு

சங்க இலக்கிய அக மரபுக்கூறுகள் பிற்காலத்தில் தோன்றிய தழுவல் இலக்கியமாகிய பெருங்கதைக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன என்பதனை வெளிக்கொணரும் வகையில் **சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்** என்பது ஆய்வுத் தலைப்பாகத் தெரிவு செய்யப்பட்டது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகையுள் அகப்பொருள் பற்றிய பாக்களே மிகுந்துள்ளன. அத்தகைய சிறப்புமிக்க சங்க இலக்கிய அகமரபுக் கூறுகளை, தழுவல் இலக்கியமாகிய பெருங்கதைக் காப்பியம் எவ்வாறு பின்பற்றியுள்ளது என்பதனை ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

பத்துப்பாட்டினுள் குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய அகப்பொருள் நூல்களும், எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய அகப்பொருள் நூல்களும், பெருங்கதை நூலும் இவ் ஆய்விற்குரிய எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு கருதுகோள்

பெருங்கதை பிறமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாயினும் அந்நூல் தமிழ் இலக்கிய மரபுகளைப் பெரிதும் தழுவியுள்ளது என்பது இவ் ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

## ஆய்வு மூலங்கள்

### முதன்மை மூலங்கள்

சங்க இலக்கிய அகத்திணை நூல்களும், பெருங்கதை நூலும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### துணைமை மூலங்கள்

சங்க இலக்கிய அகநூல்கள், பெருங்கதை குறித்து வெளிவந்த திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள், களஞ்சியங்கள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கிய அக நூல்களையும், பெருங்கதைக் காப்பியத்தினையும் ஒப்பிடும் நோக்கில் ஒப்பியல் அணுகுமுறையும் தேவைப்படும் இடங்களில் விளக்கமுறை அணுகுமுறையும் இவ் ஆய்வில் கையாளப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

| | | |
|---|---|---|
| **சிலம்பொலி செல்லப்பன்** | - | **பெருங்கதை ஆராய்ச்சி**<br>நூல் (1976) |
| **பா. நீலாவதி** | - | **பெருங்கதை மகளிர்**<br>தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி<br>பேரூர், கோவை.<br>முனைவர் பட்ட ஆய்வேடு (1992) |
| **நா. தனலட்சுமி** | - | **பெருங்கதையில் பாத்திரப்படைப்பு**<br>நிர்மலா மகளிர் கல்லூரி<br>கோயம்புத்தூர்.<br>முனைவர் பட்ட ஆய்வேடு (2009) |
| **இரா. பொன்னுத்தாய்** | - | **பெருங்கதையில் பெண்மை**<br>காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம்<br>புதுச்சேரி. முனைவர் பட்ட ஆய்வேடு (1999) |

**ப. கோடித்துரை** - **பெருங்கதை - இலக்கிய மதிப்பீடு**
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக்
கலைக்கல்லூரி, தஞ்சாவூர்.
முனைவர் பட்ட ஆய்வேடு (2005)

**க. காயத்ரி** - **பெருங்கதையில் இலக்கியக் கொள்கை**
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.
முனைவர் பட்ட ஆய்வேடு. (2008)

போன்ற ஆய்வுகள் இவ் ஆய்விற்கு முன்னோடிகளாக இருக்கின்றன. இவ் ஆய்வுகள் பெருங்கதையை மையமாகக் கொண்டுள்ளன. சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் பல ஆய்வுகள் தனித்தனியே மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால், **சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்** என்ற இவ் ஆய்வு சங்க இலக்கியம் பெருங்கதைக் காப்பியம் இவ் இரண்டையும் அகப்பொருள் மரபுகள் அடிப்படையில் ஒப்பிட்டு ஆராய்வதாக உள்ளது. அவ்வகையில், இந்த ஆய்வு இத்தலைப்பில் நிகழ்த்தப்படும் முதல் ஆய்வாக அமைகிறது.

## ஆய்வேட்டின் அமைப்பு

**சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்** என்னும் தலைப்பில் அமையும் இவ் ஆய்வு முன்னுரை முடிவுரை உட்பட ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

**இயல் 1:** **முன்னுரை**
**இயல் 2:** **தழுவல் இலக்கியமும் தமிழர் மரபும்**
**இயல் 3:** **பெருங்கதையில் சங்க அக இலக்கிய மரபுக்கூறுகள்**
**இயல் 4:** **பெருங்கதையில் மணம்**
**இயல் 5:** **பெருங்கதையில் அகமரபுக் கூறுகளின் வெளிப்பாட்டு உத்திகள்**
**இயல் 6:** **முடிவுரை**

என்பவனவாகும்.

**இயல் - ஒன்று**

**ஆய்வு முன்னுரை**

ஆய்வு முன்னுரையில் முன்னுரை, ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு கருதுகோள், ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்பு, இயல் விளக்கம் போன்ற செய்திகள் இடம்பெறுகின்றன.

**இயல் - இரண்டு**

**தழுவல் இலக்கியமும் தமிழர் மரபும்**

- **காப்பியத் தழுவல்**
- **நாடகத் தழுவல்**
- **சிறுகதைத் தழுவல்**
- **புதினம் தழுவல்**

போன்ற தழுவல் இலக்கியங்கள் பற்றிய கருத்துகள் தொகுத்தும் பகுத்தும் விளக்கப்படவுள்ளன. பெருங்கதையின் மூல நூலாகிய பிரகத்கதா, அதன் ஆசிரியர், அந்நூலின் காலம், அந்நூலின் மொழிபெயர்ப்பு விவரங்கள், தமிழில் அந்நூல் மொழிபெயர்க்கப்பட்டதன் பின்னணி போன்றவை இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

தழுவல் இலக்கியங்களான பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி போன்ற காப்பியங்களில் கூறப்பட்டுள்ள தமிழரின் மரபுகளான திருமணமரபு (நன்நாள் அறிவித்தல், முரசறைதல், வேள்வித்தீ, விருந்தளிக்கும் மரபு, சீர் செய்தல் மரபு, தாலி அணியும் மரபு), தூது மரபு, நிமித்தம் பார்க்கும் மரபு, கலை மரபு (இசைக்கலை, நடனக்கலை, ஓவியக்கலை. சிற்பக்கலை. கட்டிடக்கலை. சுண்ணப் பொடிக்கலை), மணம் (களவு, கற்பு), போர் மரபு (ஒற்றறியும் மரபு) போன்ற மரபுகள் இவ்வியலில் விளக்கியுரைக்கப்படுகின்றன.

**இயல் - மூன்று**

**பெருங்கதையில் சங்க அக இலக்கிய மரபுக் கூறுகள்**

அகம் என்பதற்கு உரையாசிரியர்கள், அறிஞர்கள் தரும் விளக்கமும், இலக்கண நூல்கள் தரும் விளக்கத்துள் தொல்காப்பியம், தமிழ் நெறிவிளக்கம்,

வீரசோழியம், நம்பியகப்பொருள், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் போன்ற நூல்களில் அமையும் விளக்கங்களும் குறிப்பிடப்படுகின்றன. தொல்காப்பியம், சங்க இலக்கியம், பெருங்கதை இவைகள் கூறும் முதல், கரு, உரிப்பொருள் பற்றியும் இடந்தலைப்பாடு, நீராடல், பெண்ணின் குணநலன், தலைவனும் தலைவியும் கண்டுகாதல் வயப்படல், ஐயமும் தெளிவும், குறிப்பறிதல், தோழி கூட்டுவித்தல், நலம்பாராட்டி இன்புறல், மாலைத்துன்பம், இரவுக்குறி, அலருக்குப் பயப்படுதல், அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரைவு, வரைவு கடாதல், உடன்போக்கு, செவிலி நிலை, நற்றாய் நிலை, பிரிவுத்துயர் முதலான அகப்பொருள் துறை குறித்த விளக்கங்களும் விரிவாக ஆராயப்படுகின்றன.

மேலும், காதலர் மனம், தலைமை மாந்தரின் அழகு, அணிகலன்கள், ஒப்பனை, விளையாட்டு, இசை, திருமணச் சடங்குகள், பரத்தமை போன்ற அகப்பொருள் கூறுகளை பெருங்கதையுடன் இயையுபடுத்தி விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் - நான்கு**

**பெருங்கதையில் மணம்**

திருமணம் சொற்பொருள் வரையறை, தொல்காப்பியத்தில் வரைதல், வரைவு, வதுவை, கரணம், மன்றல் என்ற சொற்களாட்சி, தொல்காப்பியம் கூறும் மணம் என்பவற்றுள் களவு மணம், கற்பு மணம் பற்றியும் திருமணம் தோன்றக் காரணம், சங்க இலக்கியத்தில் திருமணம் குறித்து வருமிடங்கள், திருமணம் பற்றிய அறிஞர்களின் கருத்து களவு, கற்பு அறிஞர்களின் வரையறை முதலானவற்றை ஆராய்ந்து கூறும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்பெறுகிறது. அத்துடன் பெருங்கதையில் நிகழ்ந்துள்ள திருமணங்கள் - குறிப்பாக, உதயணனுடன் வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை, விரிசிகை ஆகிய நால்வருக்கும் நடைபெற்ற திருமணங்கள் விளக்கப்படுகின்றன. மேலும் பிறமாந்தர்களின் திருமணச் சடங்குகள் குறித்த செய்தியும் இவ்வியலில் தொகுத்தும் பகுத்தும் உரைக்கப்படுகின்றன.

## இயல் - ஐந்து

## பெருங்கதையில் அகமரபுக் கூறுகளின் வெளிப்பாட்டு உத்திகள்

இவ் ஆய்வின் ஐந்தாம் இயலாகிய இதன்கண் உத்தி என்பதற்கு சொற்பொருள் வரையறை, உத்தி வகைகளான உவமை, வருணனை, குறியீடு, உளவியல், கடிதம், கற்பனை, பின்னோக்கு முதலானவை குறித்த விளக்கங்கள் ஏற்ற எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. சங்க அகமரபுக் கூறுகளில் அமையும் உத்திமுறைகளும் பெருங்கதை உத்திமுறைகளும் ஆங்காங்கே ஒப்பிடப்பட்டு அவற்றிடையே காணப்பெறும் வேறுபாடுகள் இவ்வியலில் சுட்டப்படுகின்றன.

## இயல் - ஆறு

## முடிவுரை

இவ் ஆய்வேட்டின் இறுதி இயல் முடிவுரை ஆகும். இவ்வியலில் முன்குறித்த நான்கு இயல்களிலும் ஆய்ந்து கண்ட முடிவுகள் முடிவுரையாகத் தொகுத்துரைக்கப்படுகின்றன. அத்துடன் இப்பொருண்மை குறித்த மேலாய்வுக் களங்களும் சுட்டப்பெறுகின்றன.

## துணை நூற்பட்டியல்

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள், துணைமை நூல்கள், இதழ்கள், ஆய்வேடுகள், அகராதி, கலைக்களஞ்சியம், நிகண்டு ஆகியவற்றின் பட்டியல்கள் துணை நூற்பட்டியலில் இடம்பெறுகின்றன.

தழுவல் இலக்கியங்களான பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி போன்ற காப்பியங்களில் கூறப்பட்டுள்ள தமிழரின் மரபுகளான திருமணமரபு (நன்நாள் அறிவித்தல், முரசறைதல், வேள்வித்தீ, விருந்தளிக்கும் மரபு, சீர் செய்தல் மரபு, தாலி அணியும் மரபு), தூது மரபு, நிமித்தம் பார்க்கும் மரபு, கலை மரபு (இசைக்கலை, நடனக்கலை, ஓவியக்கலை. சிற்பக்கலை. கட்டிடக்கலை. சுண்ணப் பொடிக்கலை), மணம் (களவு, கற்பு), போர் மரபு (ஒற்றறியும் மரபு) போன்ற மரபுகள் இவ்வியலில் கூறப்படவுள்ளது.

## தழுவல் (Adaptation)

ஒரு படைப்பை சற்று மாற்றி மற்றொன்றை உருவாக்குவது தழுவல் எனலாம்.

மூலப்படைப்பின் மையக்கருத்தினை மட்டும் உள்வாங்கிக் கொண்டு கதைப்போக்கு, கதைப்பின்னல், கதை மாந்தர் படைப்பு போன்றவற்றை மொழிபெயர்ப்பாளர் தனது விருப்பத்திற்கேற்ப அமைத்துக் கொள்ளுதல் ‘தழுவல்’ எனப்படும்.

மூலப்படைப்பாளரின் புலமையைவிடப் பெயர்ப்பாளரின் மேதைமை இவ்வகை மொழிபெயர்ப்பில் வெளிப்படும்.

வெளிப்படையாகத் தழுவல் என்பது புலப்படாத நிலையினதாக இருக்கும். தமிழ்மொழியுடன் நெடுங்காலம் தொடர்பு கொண்ட சமஸ்கிருத மொழியாகிய வடமொழியிலிருந்து தமிழுக்குத் தழுவலாக வந்த நூல்கள் பல உள்ளன. தமிழ் மொழியிலிருந்தும் பிறமொழிக்குத் தழுவலாக நூல்கள் பல சென்றிருக்கின்றன.[1]

தமிழரின் நெடிய இலக்கியப் பாரம்பரியத்தில் தொன்றுதொட்டே, மொழிபெயர்ப்பின் ஒரு வகையாகக் கருதப்படும் தழுவல் ஓர் அங்கமாக இருந்து வந்திருக்கிறது.[2]

நேர்மொழிபெயர்ப்பு, சுருக்கம், மொழிபெயர்ப்பாளர் இடையீடு, தழுவல், மொழி மறுபடைப்பு என்று ஐந்து நிலைகளில் மொழிபெயர்ப்பு மரபு அமைகின்றது.[3]

## தழுவல் - அறிஞர்கள் கருத்து

மொழிபெயர்ப்பாளர் தம் விருப்பத்திற்கேற்பச் சுருக்கியும் விரித்தும் தேவையான இடங்களில் கருத்துகளை மாற்றியும் தருதல் காணப்படுகிறது. இவற்றைத் தழுவல்கள் எனலாம் என்கிறார் க. சிவகாமி.[4]

சுருங்கச் சொன்னால், மூலநூலை நேரடியாகப் பெயர்த்து எழுதுவது மொழிபெயர்ப்பு. அதை தேவைக்கேற்ப ஏற்றும், மாற்றியும் எழுதுவது தழுவல் என்று திறன்வாய்ந்த சில மொழிபெயர்ப்பாளர் கருதுவர்.[5]

மொழிபெயர்ப்பைப் பொறுத்தவரையில் தமிழ் மொழிபெயர்ப்பு வரலாறு 'தழுவல்' தான் தொடக்கக் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது. மொழிபெயர்ப்பின் வரலாற்று வளர்ச்சியில் 'சொல்' என்பதை வைத்தே முதலில் மொழிபெயர்புத் தோன்றியிருக்க வேண்டும் என எண்ணுவது, இரண்டின் வளர்ச்சி வரலாறு வெவ்வேறாயிருக்குமென்ற குழப்பத்தைக் காட்டுகிறது. ஆனால், மொழிபெயர்ப்பும் தழுவலும் ஒரு நாணயத்தின் இருபக்கங்கள்; முட்டையும் கோழியும் போன்ற, அவற்றின் தோற்ற வரலாற்றை அறுதியிட முடியாது என்ற கூற்றை முன்னாள் சட்டத்தமிழ்ப்பிரிவு இயக்குநர் தி.வ. தெய்வசிகாமணி போன்றோர் ஏற்பது இல்லை.[6]

ஒரு மொழியில் அமைந்துள்ள கருத்தினை முழுமையாகவோ அல்லது சரியாகவோ இன்னொரு மொழியில் மாற்றி அமைக்காவிட்டால் அது தழுவல் என்ற குறிப்புத் தொனிக்கிறது. பண்டைக்காலத்தில் சைகை, ஒலி அளவே தொடங்கிக் கதைகள் அளவிலே தழுவல் வளர்ச்சியுற்றது. இதை 'மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச்சங்கம் வைத்தும்' என்னும் சொற்றொடரால் உய்த்துணர வாய்ப்புண்டு. இருப்பினும், மொழிபெயர்ப்பாகவோ, தழுவல் என்ற வகையிலோ, குறிப்பிட்டுச் சொல்லும்படி எந்த நூலும் பெருங்கதையின் காலம் வரை வெளிவரவில்லை என்பார் கூற்று முரணாக உள்ளது.[7]

வடமொழிச் சார்பு அளவிற்கு காணப்படுகின்றது என்று இலங்கைத் தமிழ்ப் பேராசிரியர்கள் ஆ. வேலுப்பிள்ளை தமது 'காலமும் கருத்தும்' என்ற நூலில் கூறுவதால் வடமொழித் தழுவல் தமிழ்இலக்கியங்களில் பரவலாக உள்ளதை உணரலாம் என்கிறார்.[8]

தருமொழியில் எழுந்த இலக்கியத்தைக் கற்று, அதே கதையமைப்பினைப் பெறுமொழியில் அதன் தன்மைக்கேற்ப அப்பெயர்களையும் இடங்களையும் மாற்றிக் கட்டமைப்பது தழுவல் ஆகும். வெளிப்படையாகத் தழுவல் என்பது புலப்படாத நிலையினதாக இருக்கும்.[9]

## தழுவல் இலக்கியம்

### 1. காப்பியத் தழுவல்

தழுவல் இலக்கியம் காப்பியத்துள் ஊடுருவி தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. தமிழில் தோன்றியுள்ள காப்பியங்களுள் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம் ஆகிய மூன்றும் தமிழ் நாட்டுக்கதைகளை மையக்கருவாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன. மற்றவை எல்லாம் பிராகிருதம், சமஸ்கிருதம் மொழிகளின் தழுவல்களாக அல்லது தமிழாக்கங்களாக உள்ளன.

தமிழில் கொங்குவேளிரால் இயற்றப்பட்ட பெருங்கதை என்னும் காப்பியநூல், சிறப்புமிக்க காப்பியமாகும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டு அளவில், 'பைசாசம்' என்னும் பிராகிருத மொழியில் குணாட்டியர் என்பவர் உதயணன் சரித்திரத்தைப் 'பிருகத்கதா' என்னும் பெயரால் காப்பியமாக இயற்றினார். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் கங்கநாட்டின் அரசனாக விளங்கிய 'துர்விநீதன்' என்னும் அரசன் சமஸ்கிருத மொழியில் குணாட்டியரைத் தழுவி பெருங்காப்பியத்தை இயற்றினார். இந்த வடமொழி நூலைத் தழுவியே கொங்குவேளிர் பெருங்கதையினைத் தமிழில் இயற்றியுள்ளார் என்பது உ.வே. சாமிநாதையர் போன்ற அறிஞர்களின் கருத்தாகும். முதன் முதலில் தழுவி இயற்றப்பட்டக் காப்பியமாகவும் பெருங்கதையைக் கூறலாம்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு அளவில் திருத்தக்கத்தேவரால் தமிழில் இயற்றப்பட்டது 'சீவகசிந்தாமணி' என்னும் காப்பியமாகும். இது சமஸ்கிருத மொழியின் தழுவலாகத் தோன்றியுள்ளது. இந்த நூலுக்கு மூலமாகக் கருதப்படுபவை 'ஷத்திரசூடாமணி', 'கந்திய சிந்தாமணி', 'ஜீவாதாரசம்பு', 'ஸ்ரீபுராணம்' போன்ற நூல்களாகும்.

கம்பராமாயணம் எனும் நூல் குலோத்துங்க சோழனின் ஆணைப்படி கம்பர் எனும் பெரும் புலவரால் இயற்றப்பட்ட தமிழ் நூலாகும். கம்பரால் இயற்றப்பட்ட கம்பராமாயணம் ஒரு வழி நூலாகும். இது வடமொழியில் வால்மீகி என்பவர் இயற்றிய இராமாயணத்தைத் தழுவி எழுதப்பட்ட நூலாகும். இந்நூல் தமிழரின் மரபுக்கு ஏற்றார் போல கம்பர் அமைத்துள்ளார்.

கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் தோலாமொழித்தேவர் என்னும் புலவரால் ‘சூளாமணி’ என்னும் காப்பியம் இயற்றப்பட்டது. இந்தக் காப்பியத்திற்கும் வடமொழி நூல்களே மூலமாக அமைந்துள்ளன.

ஐஞ்சிறுகாப்பியங்களுள் யசோதர காவியத்திற்கு ‘புஷ்பதந்தா’ என்பவரால் சமஸ்கிருத மொழியில் இயற்றப்பட்ட ‘யசோதரக் காவிய’ என்னும் படைப்பே மூலநூலாக அமைந்துள்ளது.

இன்றைக்குத் தமிழில் உள்ள காப்பியங்களுள் பெரும்பாலான நூல்களுக்கு வடமொழி அல்லது பிராகிருத மொழியில் உள்ள நூல்களே மூலமாக உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு கர்நாடக நாட்டில் வீரசைவம் சிறப்புற்றிருந்தது. அந்தச் சமயகுருமார்களின் கதைகள் ‘பிரபுலிங்க லீலா’ என்கிற காப்பியமாக கன்னடமொழியில் பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இதனைப் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் ‘பிரபுலிங்க லீலை’ என்னும் நூலாகத் தமிழாக்கம் செய்துள்ளார்.

பௌத்த சமயப்புலவர் சீத்தலைச் சாத்தனார் இயற்றியுள்ள மணிமேகலை என்னும் காப்பியத்தில் ‘பாலிமொழியில்’ உள்ள புத்தசாதகக் கதைகள் பல தமிழாக்கம் செய்யப்பட்டு, மணிமேகலையின் வாழ்க்கை வரலாற்றோடு சேர்க்கப்பட்டுள்ளது. அதில் சாவகநாட்டு அரசனான பூமிச்சந்திரனைப் பற்றியும், ஆபுத்திரனைப் பற்றியும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இவ்விருவர் வரலாற்றினையும் ஒன்றாக இணைத்து மணிமேகலையின் மூன்று காதைகளில் சீத்தலைச்சாத்தனார் விளக்கியுள்ளார். அவை ‘ஆபுத்திரன் திறன் அறிவித்த காதை’ (13), ‘ஆபுத்திரன் நாடு அடைந்த காதை (24), ‘ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை’ (25) என்னும் பகுதிகள் புத்த சாதகக்கதையினைத் தழுவி தமிழ் மொழியில் எழுதப்பட்டவையாகும்.

மூன்றாம் நந்திவர்மன் காலத்தில் பெருந்தேவனார் என்னும் புலவர் வடமொழியைத் தழுவி ‘பாரத வெண்பா’ என்னும் நூலைத் தமிழில் இயற்றியுள்ளார்.

இந்நூலின் சில பகுதிகளே தற்போது கிடைக்கின்றன. இவை உரைநடை கலந்த மொழிப்பெயர்ப்பாகும்.

வடமொழியில் வால்மீகி இயற்றிய இராமாயணத்தை தழுவி தமிழில் கம்பரால் கம்பராமாயணமாக உருவானது. இந்நூல் தமிழரின் மரபுக்கு ஏற்றார் போல கம்பர் அமைத்துள்ளார்.

கம்பர் இயற்றிய கம்பராமாயணத்தைத் தொடர்ந்து வந்த இராமாயணக் கதைகள் அனைத்தும் தழுவல்களாகவே அமைந்துள்ளன.

'குணாதித்தன் சேய்' என்பவரால் பதினைந்தாம் நூற்றாண்டில் 'இராமாயண வெண்பா' என்னும் நூல் இயற்றப்பட்டது. இந்நூல் தற்போது கிடைப்பதில்லை.

கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில், 'வில்லிபுத்தூரார்' வடமொழி மகாபாரதத்தை தழுவி, தமிழில் இலக்கியமாக இயற்றியுள்ளார். இந்நூல் 10 பருவங்கள் 4375 பாடல்களைக் கொண்டதாகும்.

இதன்பிறகு பதினாறாம் நூற்றாண்டில் 'தக்கை இராமாயணம்' என்னும் நூல் இயற்றப்பட்டது. இதனைக் 'கோகுல இராமாயணம்' என்றும் கூறுவர். இதன் ஒவ்வொரு பாடலும் 'கூவாய் குயிலே' என்று முடிவடைவதனைக் காணலாம்.

பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் இராமாயணம் பலவாறு உருவானது. அகவல் வெண்பா, கீர்த்தனை வடிவங்களில் அது பாடப்பெற்றது.

நாட்டுப்புற இலக்கியமாகவும் இயற்றப்பட்டது. 'இராமாயண ஓடம்', 'இராமாயண ஏலப்பாட்டு', 'இராமாயணச்சிந்து' முதலானவை ஆகும்.

இராமாயணம் பல நாடக வடிவத்திலும் உருவானது. 'இராம நாடகக் கீர்த்தனை' என்னும் நூல் அருணாச்சலக் கவிராயரால் இயற்றப்பட்டது.

மகாபாரதக் கதையை பெண்ணுரிமைக் காப்பியமாகத் தமிழில் சுப்பிரமணிய பாரதியார் இயற்றியதே 'பாஞ்சாலி சபதம்' ஆகும். இ∴து 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டது.

பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த ‘பில்ஹனர்’ என்ற கவிஞர் இயற்றிய ‘பில்கஹனீயம்’ என்னும் வடமொழிக் காப்பியக் கதையினைத் தழுவி பாவேந்தர் பாரதிதாசன் தமிழில் ‘புரட்சிக்கவி’ என்னும் காவியத்தைப் படைத்துள்ளார்.

ஆசிய ஜோதி என்ற நூல் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையால் இயற்றப்பட்டது. இது புத்தரின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறுகிறது. எட்வின் அர்னால்டு என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய (The Light of Asia) என்ற நூலின் தழுவல் ஆகும்.

கவிஞர் முடியரசன் ‘வீரகாவியம்’ என்னும் சிறுகாவியத்தைப் படைத்தார். இந்நூல் மேத்யு ஆர்னால்டின், ஷோரபும் ருஸ்தமும் (Sherab and Rustum) என்னும் நூலினைத் தழுவி இயற்றியதாகும். தமிழில் இவ்வாறு தழுவல் இலக்கியங்கள் தோற்றம் பெற்றுள்ள பாங்கினை ஓரளவு அறியமுடிகிறது. இவ் ஆய்வுப் பொருளான ‘பெருங்கதை’ நூல் எவ்வாறு சிறந்த தழுவல் இலக்கியமாக அமைகிறது என்பதை உணர்ந்துகொள்ள அந்நூல் குறித்த செய்திகளை அறிந்துகொள்வது பயனுடையதாகும்.

### பெருங்கதை நூல் குறித்த வரலாறு

**பெருங்கதையென்பது** கவிஞர் பெருமானாகிய **கொங்குவேளிர்** என்பவரால் இயற்றப்பட்ட ஒரு தொடர்நிலைச் செய்யுள். இவர் **கொங்குவேளெனவும் கொங்கவேளெனவும்** வழங்கப்பெறுவார்.

இவர் எழுதிய நூலாகிய பெருங்கதை, **கொங்குவேண்மாக்கதை** எனவும் அடைமொழியின்றிக் **கதையெனவும்** கதாநாயகன் பெயருடன் சேர்ந்து **உதயணன் கதையெனவும்** பழைய உரைகளில் வழங்கப்படுகின்றது.

கொங்குவேளிர் சைனராதலின், இந்நூலின்பாலுள்ள சமயக்கொள்கைகள் சைனமாகவே காணப்படுகின்றது.

**குணாட்டியர்** இயற்றிய **பிருகத்கதா** நரவாணதத்தனுடைய வரலாற்றினைக் கூறும் நோக்கத்தோடே இயற்றப்பெற்றதென்பதும் இதன் முதனூலும் இதுவும் அவன்

தந்தை உதயணனது வரலாற்றைக் கூறும் நோக்கத்தோடே இயற்றப்பட்டனவென்பதும் தெரிய வருகின்றன.

**பேராசிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார், மயிலைநாதர், நேமிநாத வுரையாசிரியர், யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர், வீரசோழிய வுரையாசிரியர், தக்கயாகப்பரணி யுரையாசிரியர், இலக்கண விளக்கவுரையாசிரியர்** முதலியோர்களுடைய உரைகளில் இந்நூல் எடுத்தாளப்பட்டுள்ளது.

பெருங்கதை காண்டங்கள் ஐந்தாகும். அவற்றுள் முதலாவது உஞ்சைக்காண்டம் - 58 காதையினையும், இரண்டாவது இலாவண காண்டம் - 20 காதையினையும், மூன்றாவது மகதகாண்டம் - 27 காதையினையும், நான்காவது வத்தவ காண்டம் - 17 காதையினையும், ஐந்தாவது நரவாண காண்டம் - 9 காதையினையும் உடையன.

உஞ்சைக்காண்டத்தின் முதல் 31 காதைகளும், 32ஆவதன் முதற்பகுதியும், மகதகாண்டத்தில் 11ஆவது காதையும், 12,17 இவற்றின் முற்பகுதிகளும், 10,16 இவற்றின் பிற்பகுதிகளும், நரவாண காண்டத்தில் 9ஆவது காதையின் பிற்பகுதி முதலியனவும் காணப்படவில்லை.

இப்போது இதன் காதைகளின் மொத்ததொகை 99. 35 அடிச் சிற்றெல்லையையும், 390 அடிப் பேரெல்லையையும் உடையனவாக இக்காதைகள் பாடப்பெற்றுள்ளன.

உதிதோதய காவ்யத்தின் பகுப்பையும் உதயணகுமார காவியத்தின் பகுப்பையும் நோக்குங்கால், நரவாண காண்டத்தின் பின்பு ஆறாவதாகத் துறவுக் காண்டமொன்று இருப்பது தெரியவருகின்றது என்கிறார் உ.வே. சாமிநாதையர்.

வடமொழியில் ஸ்ரீ காளிதாஸ மகாகவியாலும் தென்மொழியின் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர்ராலும் திருமங்கையாழ்வாராலும் இந்நூற்கதை எடுத்தாளப்பட்டுள்ளது. அவை வருமாறு:

“மேகமே! உதயணனது சரிதையைக் கூறுவதில் ஆற்றல் வாய்ந்த முதியோர்களை யுடையதான அவந்தி தேயத்தை அடைவாய்” (மேகசந்தேசம், சுலோ.30)

“கொடிகோ சம்பிக் கோமகனாகிய, வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை, வஞ்சஞ் செய்துழி வான்றனை விடீஇய, உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன், உருவுக் கொவ்வாவுறு நோய் கண்டு, பரிவுறு மாக்களின்” (மணி. 15:61-6)

“வாரார் வனமுலை வாசவதத்தையென், றாரானுஞ் சொல்லப்படுவாளவளுந்தன், பேராய மெல்லா மொழியப் பெருந்தெருவே, தாரார் தடந்தோட் டளைக்காலன் பின் போனாள், ஊரா ரிகழ்ந்திடப்பட்டாளே” (இயற்பா, சிறிய திருமடல். கண்ணி,66-8).

இன்னும் வடநூல்களிலும் தமிழ் நூல்களிலும் இக்கதையை எடுத்தாண்டோர் பலராவர்.

உ.வே. சாமிநாதய்யர் பத்துப்பாட்டுச் சுவடி தேடப்போன பொழுது அதிற்சில பகுதிகளுள் பெருங்கதை நூலும் அவருக்குக் கிடைத்துள்ளது. அதன் பிரதி வேறெங்காவது இருக்கின்றதா என்று அவர் பலவாறு அலைந்துள்ளார். பெருங்கதைப் பிரதிகள் அங்குள்ளன. இங்குள்ளன, பெருங்கதை முழுதுமுள்ள பிரதி இங்குள்ளது, மூலமும் உரையும் உள்ள பிரதி இங்கிருக்கிறது என்று சிலர் எழுப்பிவிட்ட செய்திகளைக் கேட்டு அலைந்து முயன்று பார்த்ததுமுண்டு, பயன்படவில்லை. இப்படியே இன்னும் இந்நூலின் சம்பந்தமாக நிகழ்ந்த செய்திகளை எடுத்து எழுதுவதென்றால் அதுவே ஒரு பெருங்கதையாகும்[10] என்று உ.வே.சா அவர்கள் பெருங்கதை முகவுரையில் கூறுவதிலிருந்து அவர் இந்நூலுக்காக உழைத்த அருமை தெரியவருகின்றது.

## நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியராகிய கொங்குவேளிரென்பார், கொங்குநாட்டு வேளாள வகுப்பினரைச் சார்ந்த சிற்றரசர்களுள் ஒருவர். இவருக்குரிய வேளிரென்னும் பட்டப்பெயரும் இக்கருத்தை வலியுறுத்தும். இவரிருந்த ஊர், கொங்கு நாட்டிலுள்ள

ஸ்ரீ சந்திரப்பிரப தீர்த்தங்கரருடைய ஆலயத்தையுடையதும் தமிழ்ப் புலவர்கள் சிலர் வாழ்ந்து வந்ததுமான விசயமங்கலமென்று தெரிகின்றது.

இவர் பல தமிழ்ப்புலவர்களை ஆதரித்து அவர்களுக்கு வேண்டியவற்றைச் செய்து அவர்களோடு தாமும் பழைய நூல்களை ஆராய்ச்சி செய்து வந்தவர்.

கொங்குவேளிர் இந்நூல் இயற்றி வருகையில் தம் அகால மரணத்தைச் சோதிடரால் அறிந்து எப்படியேனும் அதனை மாற்றிக் கொண்டு இந்நூலைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று கவலையுற்று இல்லறத்தினின்றும் நீங்கி வானப்பிரத்தமும் பின் அதனினின்றும் நீங்கித் துறவறமும் பூண்டு இந்நூலைப் பூர்த்தி செய்திருக்கலாமென்றும் தெரிய வருகின்றது.

**நூலைப் பற்றிய குறிப்புகள் (குணாட்டியர் பிருகத்கதையை இயற்றிய வரலாறு)**

ஸுப்பிரதிஷ்டா நகரத்தில் அரசனாக இருந்த சாதவாகனன் என்பவரிடம் மந்திரியாக இருந்தவர் குணாட்டியர். அவ்வரசனை, கல்வியறிவில்லாதவனே என்று அவன் மனைவி அவமதிக்க, அதனால் மனம் வருந்தினான். நான் மகா பண்டிதனாக எத்தனை காலம் ஆகும் என்று அவர் கேட்க, குணாட்டியர் அதற்கு பன்னிரண்டு வருடம் ஆகும். ஆனால் நான் ஆறு வருடத்திற்குள் நீங்கள் கற்றுக்கொள்ள யான் செய்வேன் என்றார். அதுகேட்ட மற்றொரு மந்திரி சர்வவர்மா ஆறு மாதத்தில் நான் கற்றுக் கொடுப்பேன் என்றார். அவ்வாறு செய்வது யாராலும் இயலாது என்றும் அவ்வாறு செய்தால் சமஸ்கிருதம், பிராகிருதம், தேசபாஷை என'ற மூன்றையும் அறவே துறப்பேன் என்று சூளுரைத்தார் குணாட்டியர். கூறியபடி யான் செய்யவில்லை என்றால் உம்முடைய பாதுகையைப் பன்னிரண்டு வருடம் தலைமேற் சுமந்து திரிவேன் என்று சர்வவர்மா மாற்றுச் சூளுரைத்தார். பிறகு சர்வவர்மா முருகக்கடவுளை வழிபட்டு அவருடைய திருவருளைப் பெற்று அரசருக்குத் தான் கூறியபடி ஆறுமாதத்தில் பூர்ண பண்டிதனாக்கினார். மிக்க மகிழ்ச்சி உற்ற அரசன் சர்வவர்மாவிற்குச் சிறந்த உபசாரங்களைச் செய்து ஒரு தேசத்திற்கும் அரசராக்கினார்.

குணாட்டியர் தம்முடைய சபதத்தின்படி மும்மொழிகளையும் அறவே துறந்து அரசனை விட்டு நீங்கி விந்தியமலையடைந்து அங்கு பைசாச மொழி பயிற்சி பெற்று துர்க்காதேவியை வழிபட்டு, அங்கே ஒரு சாபத்தால் பிசாச வடிவத்தோடிருந்த காணபூதி என்பவரை அத்தேவியின் கட்டளைப்படி கண்டார். உடனே குணாட்டியருக்குப் பழம் பிறப்புணர்ச்சி உண்டாயிற்று. பின்பு பைசாச மொழியில் வித்தியாதரர் கூறியபடி எழுவருடைய சரித்திரங்களை ஏழு வருடங்களில் குணாட்டியர் இயற்றி முடித்தார். அந்நூல் 'பிருஹத்கதா' என்னும் பெயரால் வழங்கலாயிற்று.

## பெருங்கதை சம்பந்தமான வடமொழி நூல்கள்

1. பிருகத்கதாசுலோகஸங்கிரகம்
2. பிருகத்கதா மஞ்சரி
3. பிருகத்கதா ஸரித்ஸாகரம்
4. உதிதோதய காவ்யம்
5. ரத்னாவளி
6. பிரியதர்சிகா
7. சொப்பன வாஸவதத்தம்
8. பிரதிஞ்ஞாயௌகந்தராயணம்
9. வாஸவதத்தா
10. மிருச்சகடிகை
11. கற்பூரமஞ்சரி
12. காதம்பரி

போன்றவையாகும்.

இவற்றில் உதிதோதய காவியம் இந்நூல் கதைப்போக்கைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது. ஏனையவை ஒருவாறு ஒத்தனவும், சிலபகுதி ஒத்தனவும், சில பகுதியை இதன் சாயையாகப் பெற்றனவும், இதிலுள்ள பெயர்களை மட்டும் எடுத்தாண்டனவுமாகவே தெரியவந்தன என்று உ.வே.சா அவர்கள் கூறுகின்றார்.

## இதன் முதல்நூல்

உ.வே.சா அவர்கள் தன் நூலின் முகவுரையில், இதன் முதல்நூல் குறித்து சில அன்பர்களைக் கேட்டுக் கொண்டபொழுது பிரஹ்மஸ்ரீ எம்.இராமகிருஷ்ண கவியவர்கள், எம்.ஏ., ஆராய்ந்து எழுதி அனுப்பியதாக கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்.

"ப்ருஹத்கதை: முதலில் ஸுபந்து என்னும் கவியால் வாஸவதத்தையென்னும் பெயரால் எழுதப்பட்டதென்று வேறு நூல்களிலுள்ள உதாரணங்களால் தெரியவருகிறது. (கி.பி.300); ஸுபந்து சந்திரகுப்தன் மகனான பிந்துஸாரனுக்கு மந்திரி. இப்பொழுது வழக்கத்திலுள்ள வாசவதத்தை யென்பது அஃதன்று. சூத்திரகன் வீணாவாஸவதத்தமென்று ஒரு நாடகஞ் செய்திருக்கிறான். இதிற் கிடைத்த பாகம் முதல் மூன்றங்கமே. இந்தச் சூத்திரகன் உச்சைனியை ஆண்ட ஓரரசன்; மிருச்சகடிக நாடக நூலாசிரியன்; பத்மப் பிராப்ருதகமும் இவன் செய்த நாடகமே (கி.மு. 56); சாலிவாஹனன் அல்லது சாதவாஹனனுடைய ஸபையிலிருந்த குணாட்டிய ரென்பவர் பைசாச பாஷையில் 'பிருகத்கதா' என்னும் பெயரால் ஒருநூல் எழுதினார். (கி.பி. 78); இந்நூற் பகுதிகள் காவ்யாதர்ச வ்யாக்கியானத்தில் மேற்கோள்களாக வந்துள்ளன. பாஸனென்னுங்கவி ஸ்வப்ந வாஸவதத்தமென்றும் பிரதிஞ்ஞாயௌகந்தராயணமென்றும் கூறப்படும் நாடகங்களில் உதயணனுடைய சரிதத்தைச் சொல்லியிருக்கிறார் (கி.பி.100-150); பிறகு கி.பி.570-80 இல் கங்கராசனான துர்விநீதனென்பவன் பிருஹத்கதையை முற்றும் ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்தான்; பின்பு உந்மாதவாஸவதத்தமென்னும் பெயராற் சத்திபத்திரரென்னும் கவி ஸம்ஸ்கிருத பாஷையில் நாடகமாக எழுதியிருக்கிறார். இதன்பின் 'உதயநோதயகதா' என்னும் பெயரால் ஒரு வசனநூல் ஸம்ஸ்கிருதத்திலிருந்ததென்று தெரிகிறது. கி.பி.1030 ஆம் வருஷத்தில் க்ஷேமேந்திரர் பிருகத்கதையைச் சுருக்கி, 'பிருகத்கதாமஞ்சரி' என்னும் பெயரால் எழுதினார். கி.பி.1120 ஆம் வருஷத்தில் ஸோமதேவபட்டர் கதாஸரித் ஸாகர மென்றபெயரால் பிருகத்கதை முழுவதையும் ஸம்ஸ்கிருதத்தில் எழுதியிருக்கிறார். கி.பி.1400- ஆம் வருஷத்தில் வாமன பட்டபாணர் பிருகத்கதாமஞ்சரியென்ற பெயரால் எழுதியிருக்கிறார். இவைகளெல்லாம் ஸம்ஸ்கிருதமே. கி.பி.1300-இல் 'ஸுரந்த'

என்னும் கவியால் தெலுங்கு பாஷையில் உதயநோதயமென்னும் பெயரால் பிருகத்கதை பத்யகாவ்யமாக மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது; அது முற்றுங் கிடைக்கவில்லை. வாஸவதத்தை விவாஹ பரியந்தமே கிடைத்திருக்கிறது. ஸ்ரீஹர்ஷர் செய்த ரத்நாவளீ, பிரியதர்சிகா என்ற இரண்டு நாடகங்களும் வத்ஸராஜசரிதமே. இவர் காலம் சற்றேறக்குறைய கி.பி.450; சிலர் 620 என்பர்.”

மேலே காட்டியவற்றைப் பார்க்கையில், துர்விநீதனென்னுங் கங்கராசன் இயற்றிய வடநூலே இதற்கு முதனூலாக இருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது என்று உ.வே. சாமிநாதையர் பெருங்கதை முகவுரையில் கூறியுள்ளார்.

### 2. நாடகத்தழுவல்

உலகப்புகழ் பெற்ற ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் தமிழில் பலரால் மொழிபெயர்க்கப்பட்டன. சில தழுவல் நூலாகவும் அமைந்தன. எடுத்துக்காட்டாக பம்மல் சம்பந்த முதலியாருடைய ‘அமலாதித்தன்’ என்னும் நாடகம் ஹாம்லெட் கதைக் கருவைத் தழுவி இயற்றப்பட்டதாகும். இவரே ‘மனோகரா’ என்னும் தழுவல் நாடகத்தையும் உருவாக்கியுள்ளார். இதே ஆசிரியர் ‘ஜீலியட் சீசர்’ என்னும் நூலை ‘சிம்மபுரி வீரன்’ என்னும் பெயரினில் தழுவலாக உருவாக்கினார்.

பிரெஞ்சு மொழியை வளப்படுத்திய நாடக ஆசிரியர்களுள் ‘மோலியர்’ முதன்மை வாய்ந்தவர் ஆவார். அவருடைய நாடகங்கள் பல தமிழ் மொழியில் மொழிபெயர்ப்பாகவும் தழுவல்களாகவும் வெளியிடப்பட்டுள்ளன. ‘காளப்பன் கள்ளத்தனம்’ என்னும் பெயரினில் ‘தி நேவரி ஆ.்.ப் ஸ்கால்பின்’ என்னும் மோலியருடைய படைப்பினை பம்பல் சம்பந்த முதலியார் தழுவலாக இயற்றியுள்ளார்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் லிட்டன்பிரபு படைத்த ‘The secret way’ எனும் கவிதையைக் கருவாகக் கொண்டு ‘மனோன்மணீயம்’ நாடகத்தைப் படைத்துள்ளார். இந்நாடகத்தில் இடம்பெற்றுள்ள ‘சிவகாமியின் சபதம்’ என்னும் கிளைக்கதை, சிறந்ததொரு காதற்காப்பியமாகும். இது ஆலிவர் கோல்டு ஸ்மித் எழுதிய ‘The vicar of the wake field’ என்னும் புதினத்தில் ‘இளநிலை பாதிரி’ என்ற தலைப்பில் உள்ள கதையைத் தழுவி எழுதப்பட்டதாகும்.

அறிஞர் அண்ணாவின் நாடகங்களில் சில இப்சனின் நாடகங்கள் சிலவற்றைத் தழுவியதாக அமைந்துள்ளன.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் தமிழ் மக்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தவை. ஏறத்தாழ 20-க்கு மேற்பட்ட ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ன. சில தழுவல்களாக அமைந்துள்ளன. சில நாடகங்களாகவும், திரைப்படங்களாகவும் வெளிவந்துள்ளன. வில்லியம் ஷேக்ஸ்பியர் எழுதிய ஹேம்லெட், ரோமியோ ஜீலியட் மற்றும் ஒத்தெல்லோ உள்ளிட்ட பல நாடங்கள் திரைப்படங்களில் தழுவப்பட்டுள்ளன. ஷேக்ஸ்பியரின் பின்வரும் ஆங்கில நாடகங்களை அவைகளின் சுவையோ நயமோ குறையாமல் தமிழ் நாடகங்களாக பம்பல் சம்பந்த முதலியார் மொழிபெயர்த்துள்ளார்.

**Hamlet - அமலாதித்யன்**

**As you like it - நீ விரும்பிய படியே**

**Macbeth - மகபதி**

**Cymbeline - சிம்மளநாதன்**

**Merchant of venice - வணிபுர வானிகன்**

### 3. சிறுகதைத் தழுவல்

தமிழில் சிறுகதை என்னும் இலக்கியவகை புதியதொரு மாற்றத்தினை ஏற்படுத்தியுள்ளது. இந்த இலக்கிய வகையைத் தமிழில் தொடங்கி வைத்தவர் வ.வே.சு. அய்யர் என்பவராவார். அவருடைய ‘மங்கையர்க்கரசியின் காதல்’ என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சில கதைகள் ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிக்கதைகளைத் தழுவியதாக அமைந்துள்ளன. மகாகவி பாரதியார் தாகூரின் கதைகளை மொழிபெயர்த்துள்ளார்.

இவரைத் தொடர்ந்து கு.ப. இராஜகோபாலன், புதமைப்பித்தன் முதலியோர் தமிழில் நூற்றுக்கணக்கான சிறுகதைகளைப் படைத்துள்ளனர். தொடக்கால சிறுகதைகளில் பல ஐரோப்பிய இலக்கியங்களைத் தழுவியும், கவியரசர் தாகூரின் வங்காள சிறுகதைகளைத் தழுவியும் அமைந்துள்ளன.

பிரெஞ்சு நாட்டு சிறுகதை மன்னன் மாபசானின் பல சிறுகதைகளை புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பாகவும், தழுவலாகவும் படைத்துள்ளார். புதுமைப்பித்தனின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய தொ.மு. சிதம்பர ரகுநாதன் சமாதி, நொண்டி, பயம், கொலைகாரன் கதை, நல்ல வேலைக்காரன், அந்தமுட்டாள் வேணு ஆகிய கதைகள் மாப்பசான் கதைகளின் தழுவல்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். தமிழ்படித்த பொண்டாட்டி என்ற கதையைப் புதுமைப்பித்தன் தானே வெளியிட்டுள்ளார். அதன் முன்னுரையில் அது மாப்பசான் கதையின் தழுவல் என்பதையும் குறிப்பிட்டுள்ளார்.

## 4. புதினம் தழுவல்

புதுமைப்பித்தன் எழுதிய ‘பிரேத மனிதன்’ என்னும் புதினம் ஆங்கிலக் கதையின் தழுவலாகும். ‘போரே நீ போ’ என்னும் புதினம் ‘A farewell to arms’ எனும் ஹெமிங்வேயின் புதினத்தைத் தழுவியதாகும்.

ஆரணி குப்புசாமி முதலியோர், வடுவூர் துரைசாமி அய்யங்கார் ஆகிய இருவரும் ரேனால்ட்ஸ் நாவல்களைப் பலவகையான தழுவல் கதைகளாகத் தமிழில் வெளியிட்டுள்ளனர். ‘குமுதவல்லி’ அல்லது ‘நாக நாட்டரசி’ என்ற மறைமலையடிகளின் புதினம் ரேனால்ட்ஸ் படைத்த ‘லைலை’ என்னும் ஆங்கிலக் கதையின் தழுவலாகும்.

ஜேன் அயரின் ‘அபலைப்பெண்’, மார்க்ட்வைனின் ‘அரசனும் ஆண்டியும்’, ஆஸ்கர் ஒயில்டின் ‘அழியா ஓவியம்’ என்னும் நாவல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன.

‘குங்போதங்’ என்னும் சீனர் எழுதிய நாவலைத் தழுவி ‘கிழக்கோடும் நதி’ என த.நா. குமாரசாமி இயற்றியுள்ளார்.

சாதவாகன பேரரசன், ஹாலா தொகுப்பித்த ‘காதா சப்த சதி’ எனும் பிராகிருத மொழி நூல் ஆகும். இதனை இரா. மதிவாணன், ‘ஆந்திர நாட்டு அகநானூறு’ என்னும் தழுவல் நூலாகத் தமிழில் வெளியிட்டுள்ளார். இதனை, காதா சப்த சதி என்ற தலைப்பிலேயே பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாதராஜா தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## தழுவல் இலக்கியமும் தமிழ் மரபும்

தழுவல் இலக்கியங்கள் மண்ணின் மரபுக்கேற்பப் படைக்கப்படுகின்றன. படைப்புகளில் அமையும் இடப்பின்னணி, சமுதாயப் பின்னணி, வாழ்வியல் நெறிகள், மக்களின் நம்பிக்கைகள் போன்றவற்றை தழுவல் படைப்பாளர்கள் தமது மரபிற்கேற்பக் கையாளுவது வாசகருக்குப் படைப்பினிடத்தில் நெருக்கத்தை ஏற்படுத்தும் இப்போக்கினை தழுவல் படைப்பாளர்கள் நன்கு உணர்ந்துள்ளனர்.

பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி, யசோதரகாவியம், உதயணகுமாரகாவியம் ஆகிய தழுவல் இலக்கியங்களில் காணலாகும் தமிழ் மரபுகளை இவ்வியல் ஆய்வதாக அமைந்துள்ளது.

### திருமண மரபு

#### நன்நாள் அறிவித்தல்

திருமணத்திற்கான நல்ல நாளினைக் கணியர் கணித்துத் தர, அதனை வள்ளுவன் முரசறைந்து ஊராருக்குத் தெரிவித்தான் இதனை,

**வாசவ தத்தையோடு வதுவை கூடி**
**கோல நீள்மதில் கொடிக்கோ சம்பி**
**மாலை மன்னவன் மணமகன் ஆகும்**
**காலை, இதுஎன. (பெருங். 2:2: 49-52)**

என்ற பாடலின் வழி அறியலாம்..

உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் திருமணம் செய்வதற்கு நல்ல நாள் பார்க்கப்பட்டதனை,

**இடிஉறழ் முரசின் ஏயர்பெரும் மகற்கும்**
**பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்**
**வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்**
**ஓர்உயிர்க் கிழமை ஓரை அளக்கும்**
**பேரிய லாளர். (பெருங். 2:3: 2-6)**

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

குணமாலையார், பதுமையார், கேமசரியார் ஆகியோரது திருமணத்தின் போது நல்லநாள், நல்லநேரம் பார்த்து திருமணம் நடைபெற்ற செய்தியை,

**பெருகும் கணியில் கணிபேசிய பேதில் நாளால்**

**(சீவக. 4:1062: 3)**

**கணி புனைந்துரைத்த நாளால் கண்ணிய கோயில்தன்னுள்**

**(சீவக. 5:1344: 1)**

**கடிமணம் இயற்றினார் கடவுள் நாளினால் (சீவக. 6:1490: 3)**

இப்பாடல் வரிகளின் மூலமாக அறியமுடிகின்றது.

**முரசறைதல்**

திருமணச் செய்தியினை முரசறைந்து தெரிவிக்கும் மரபினைக் காணமுடிகின்றது.

வண்டுகள் விரும்பும் கூந்தலை உடைய சானகியின் திருமணத்தினை முரசறிந்து சொல்லுமாறு சனகன் ஆணையிடுகின்றான். இதனை,

**தேன் அமர் குழலாள்தன்**
**திருமணவினை நாளை (கம்ப. 1:1178: 3-4)**

இப்பாடலின் வழி அறிய இயலும்.

களிற்றியானைப் படைகளை உடைய பெரிய மன்னனாகிய பிரச்சோதனனுடைய குலமகளாகிய மென்மையையும், அணிகலன்களையும், சீறடியினையும், புருவத்தினையும், கண்ணையும், இனிய நகையையும், பவழம் போன்ற வாயையும் உடைய வாசவதத்தையோடு கோசம்பி மன்னனாகிய உதயணன் மணம் புரிந்து கொள்ளும் காலம் இதுவாகும் என்று வள்ளுவன் முரசறைந்து தெரிவித்தான். இச்செய்தியை,

**பல்களிற் றியானைப் படைப்பெரு வேந்தன்**
**மெல்லியற் குலமகள் மிடைமணிப் பைம்பூண்**
**சிலம்பொலிச் சீறடிச் சென்றேந்து புருவத்**
**திலங்கொளி வாட்கண் இன்னகைத் துவர்வாய்**
**வாசவ தத்தையொடு வதுவை கூடிக்**
**கோல நீள்மதிற் கொடிக்கோ சம்பி**
**மாலை மன்னவன் மணமகன் ஆகும்**
**காலை இதுவெனக் கதிர்மணிக் கடிப்பிற்**

**கண்அதிர்ந் தியம்ப இன்மொழி பயிற்றிக்**

**கல்லென அறையும் ஒல்லென் கம்பலை**

**அறைந்தறி வுறீஇய பின்றை. (2:2: 45-55)**

என்ற பெருங்கதைப் பாடலின்வழி இச்செய்தியினைக் கொங்குவேளிர் கூறுகின்றார்.

**வேள்வித்தீ**

சங்க இலக்கியம் கலித்தொகையில் வேள்வி குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது. அது உவமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கேள்வி அந்தணர் கடவும்**

**வேள்வி யாவியின் உயிர்க்கும் என்நெஞ்சே. (கலித். 36: 25-26)**

வேள்வி செய்யும் அந்தணர் வேள்விக் குண்டத்தில் புகை எழும்புவது போல என் நெஞ்சு பெருமூச்சு விடுகிறது என்று தோழி தலைவியிடம் சொல்வதாக இப்பாடல் அமைந்துள்ளது.

வீடுபேற்றினை விரும்பும் கொள்கையினையும் இரண்டு பிறப்பினையும் உடையராகிய மூன்று வகைப்பட்ட தீயை வளர்க்கும் செல்வத்தோடே, நான்கு மறைகளையும் முற்ற அறிந்து ஐந்தாகிய பெருமையுடைய வேள்விகளைச் செய்தலாகிய தொழிலையும் பேணும் ஆறு தொழிலினையுடைய அந்தணர் பெறுகின்ற முறையை அப்பிராசரனுக்கு கூறினர் என்ற செய்தியின் வழி வேள்விச்சடங்கு வெளிப்படுகின்றது.

ஒன்று (வீடு), இருபிறப்பு (உபநயனத்திற்கு முன்னர் ஒருபிறப்பும் பின்னர் ஒரு பிறப்பும்), முத்தீ (ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி), ஐம்பெரு வேள்வி (கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி, மானிட வேள்வி, தென் புலத்தார் வேள்வி), அறுதொழில் (ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்) என்பனவாகும். இச்செய்தியை,

**ஒன்றுபுரி கொள்கை இருபிறப் பாளர்**

**முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி**

**ஐம்பெரும் வேள்வியுந் செய்தொழில் ஓம்பும்**

**அறுதொழில் அந்தணர் பெறுமுறை வகுக்க. (சிலப்.23: 67-70)**

என்ற பாடலின் வழி புலனாகின்றது.

சாலி என்றும் அருந்ததி என்றும் கூறப்படும் வடமீனாகிய துருவமீன் போன்ற கற்புடைய கண்ணகியைக் கைப்பற்றிக் கொண்டு கோவலன் திருமண வேள்வித் தீயைச் சுற்றி வலன் வந்தான். இந்தக் காட்சியைக் கண்டவர்கள் எத்தகைய தவம் செய்தவர்களோ அறியேன் என்று இளங்கோவடிகள் கூற்றாக உள்ளதை,

**சாலி ஒரு மீன் தகையாளைக் கோவலன்**
**மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்**
**தீ வலம் செய்வது காண்பார் கண் நோன்பு என்னை.**

**(சிலப்.1:1: 51-53)**

என்ற பாடலடின் வழி அறியலாம்.

ஓமமும் விழவும் நாள்தோறும் வகைபெறச் செய்து என்பதன் மூலமும் சிலப்பதிகாரத்தில் வேள்விச் சடங்கு செய்தமை புலப்படுகின்றது. இதனை,

**வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்து. (சிலப்.3:28: 232)**

இப்பாடல் வரிகளின் வழி உணரலாம்.

அந்தணர் திருமணப்பந்தலில் நல்லிலக்கணம் பொருந்திய இடத்தினை ஆராய்ந்து, அங்கு மணலைப் பரப்பி, முக்குழி அமைத்து, அவற்றில் சமிதைகளையிட்டு வேள்வித்தீயை வளர்த்தான். இதில் வேள்வித்தீ திருமணத்தின் போது செய்தற்குரியது என்னும் மரபானது வெளிப்படுகின்றது. இதனை,

**அறுதொழில் முத்தீ அருந்துறை போகிய**
**மறை நவில் நாவின் மரபியல் அந்தணன்**
**பல்பூம் பந்தருள் செல்வம் சிறக்கும்**
**இருநிலத்து இலக்கணம் இயற்பட நாடி**
**வெண்மணல் நிரப்பம் கொளீஇக் கண்ணுறப்**
**புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை**
**முக்குழிக் கூட்டத் துட்பட ஒக்கி**
**ஆற்றாச் செந்தீ அமைத்தனன் மேற்கொள. (பெருங். 2:3: 9-16)**

என்ற பாடல் அடிகளால் தெளியலாம்.

கம்பராமாயணத்தில் வேள்விச் சடங்குகளை முறைப்படி நடத்தினர் என்பதற்கு,

**நீந்த அருங்கடல் எனநிறைந்த வேதியர்**

**தோய்ந்த நூல் மார்பினர் சுற்ற தொல்நெறி**

**வாய்ந்த நல்வேள்விக்கு வசிட்டன் மைஅற**

**ஏய்ந்தன கலப்பையோடு இனிதின் எய்தினான்.**

**(கம்ப. 1:22: 1242)**

இப்பாடல் சான்றாகும்.

யசோதரன் அரசர்களுக்குரிய வளமும் பெற்று வந்து அமிர்தமதியை மணவேள்வி முன்னர் திருமணம் செய்து கொண்டான் என்பதனை,

**இளங்களி றுழுவையி னேத மின்றியே**

**வளங்கெழு குமரனும் வளர்ந்து மன்னனாய்**

**விளங்கிழை யமிழ்தமுன் மதியை வேள்வியால்**

**உளங்கொளப் புணர்ந்துட னுவகை யெய்தினான்.**

**(யசோதர. 76)**

இப்பாடலின் வழி அறியலாம்.

உதயணன் வாசவதத்தையின் மீது காதல் கொண்டு, அவளை திருமண வேள்வி முன் மணந்து கொண்டான். அவன் இன்பமுற்று மகிழ்ந்த செய்தியினை,

**இலங்கிழைநன் மாதரை**

**யினிமைவேள்வித் தன்மையால்**

**நலங்கொளப்பு ணர்ந்தனன். (உதயணகுமார.2: 122)**

இப்பாடல் வழி கூறுகின்றார் ஆசிரியர்.

செல்வம் மிக்க மணவேள்வியில் செல்வச் சிறப்புமிக்க உதயணனுக்கு தன் தங்கை பதுமாபதியை மணம் செய்து கொடுத்தான் தருசகன் என்பதனை,

**திருநிறைநல் வேள்வியாற்**

**செல்வற்கே யளித்தனன். (உதயணகுமார.3: 173)**

இப்பாடலடிகள் வழி தெளியலாம்.

காந்தருவதத்தையின் திருமணமானது சடங்குடன் நடைபெற்றது என்பதனை,

**இன்னியம் முழங்கி யார்ப்ப வீண்டெரி திகழ வேதம்**

**துன்னினர் பலாசிற் செய்த துடுப்பி னெய் சொரிந்து வேட்ப.**

**(சீவக. 834)**

இப்பாடலின் வழி அறியமுடிகின்றது.

பார்ப்பனர் எரியூட்டிட அதனை வலம் வந்து சீவகன் திருமணம் செய்து கொண்டான் என்பதனை,

**வளரெரி வலங்கொண் டாய்பொற் கட்டில்தான் ஏறினானே**

**(சீவக. 12: 2468)**

இப்பாடல் அடி உணர்த்துகின்றன.

இராமன் சீதையின் கரம்பிடித்து தீவலம் வரும் செய்தியினை,

**வெய்ய கனல்தலை வீரனும் அந்நாள்**

**மைஅறு மந்திரம் மும்மை வழங்கா**

**நெய்அமை ஆவுதி யாயையும் நேர்ந்தான்**

**தையல் தளிர்க் கைதடக்கை பிடித்தான். (கம்ப. 1:22: 1248)**

இப்பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

**விருந்தளிக்கும் மரபு**

திருமணத்தின் போது விருந்தளிக்கும் மரபானது சங்க காலம் முதல் தற்காலம் வரை நடைமுறையில் இருப்பதனை அறியலாம்.

திருமணத்தின் போது உளுந்தும் களியும் பெருஞ்சோறும் விருந்தாக அளிக்கப்பட்டதை,

**உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**

**பெருஞ்சோற்று அமலை நிற்ப. (அக: 86: 1-2)**

என்ற பாடல் வரிகளால் உணரலாம்.

திருமணத்தின் போது ஐவகை உணவினை (கடிப்பன, நக்குவன, பருகுவன, மெல்லுவன, விழுங்குவன) சமைத்து வந்தோர்க்கெல்லாம் விருந்தளிக்கப்பட்டது என்ற செய்தியினை,

**ஐஇய வாசஆன் நெய்யொடு கலந்த,**

**ஐவகை உணவொடு, குய்வளங் கொளீஇ**

**நறிய ஆகிய அறுசுவை அடிசில். (பெருங். 2:3: 22-24)**

என்ற பெருங்கதை பாடல் வரிகளின்வழி அறியமுடிகின்றது.

**சீா் செய்தல் மரபு**

சங்க அகப்பொருள் இலக்கியத்தில் கூறப்படுகின்ற 'களவு' மணத்தில் சீர் கொடுக்கின்ற மரபு இல்லை.

முன்பு வாழ்ந்த இல்லற வாழ்வில் நாளடைவில் 'பொய்' 'வழு' இவை தோன்றின. எனவே, சமூகத்தில் அவை ஏற்படாமல் இருக்க சாட்சியோடு பலர் கூடித் திருமணம் செய்து சீர்கள் கொடுத்தனர்.

சங்க இலக்கியங்கள் வாயிலாகத் தமிழரின் மணமாக மரபுவழி மணம், சேவை மணம், போர் நிகழ்த்தி மணம், துணங்கையாடி மணம், பரிசம் கொடுத்து மணம், ஏறு தழுவிய மணம், மடலேறிய மணம் ஆகிய மணமுறைகளைக் காணமுடிகின்றது.

பண்டைய தமிழ் மரபில் பெண்ணுக்கு ஆண் சீதனம் தருவது வழக்கம். பின்னர் இதுமாறி ஆணுக்கு பெண்வீட்டார் சீதனம் அளிப்பதாக மாறிவிட்டது.

மணமகன் பரிசம் கொடுத்து மணமகளின் பெற்றோர் ஒப்புதலுடன் மணத்தல் பரிசம் கொடுத்தல் எனப்படும். இப்பரிசம் அணிகலன், பணம், நிலம் போன்ற சொத்துக்களாக வழங்கப்பெறும். சிலசமயம் ஏதேனும் காரணத்தால் மணமகன் தரும் சீரினை மணமகளின் பெற்றோர் ஏற்றுக்கொள்ளாமல் மகளைக் கொடுக்கவும் மறுப்பர்.

ஆரியர் மணமுறைகளில் மணமகனுக்குப் பரிசுத்தொகை என்னும் வரதட்சனைப் பொருள்கள் கொடுத்துப் பெண்வீட்டார் மணம் முடித்தனர். தற்போது அவர்களின் பழக்கவழக்கமே நடைமுறையில் உள்ளது.

நந்தகோன் தன் மகள் கோவிந்தையாருக்கு திருமணத்தின் போது பொன்னால் செய்யப்பட்ட பாவைகள் ஏழுடன், நல்ல இளம் பசுக்கள் இரண்டாயிரமும் சீதனமாகக் கொடுத்தான் என்பதனை,

**நலத்தகை அவட்கு நாகான் ஆயிரத்து இரட்டி நன்பொன்**

**இலக்கணப் பாவை ஏழும் கொடுத்தனன் போக இப்பால்**

**அலைத்தது காமன்சேனை அருநுனை அம்புமூழ்க**

**முலைக் குவட்டிடைப் பட்டு ஆற்றான் முத்துஉக முயங்கினானே.**

**(சீவக.2: 490)**

இப்பாடலின் வழி புலனாகின்றது.

கோடிபொன்னும், இனிய தேனையுடைய முற்றிய கருப்பங்கழிகளையுடைய கழனி சூழ்ந்த ஐந்து பழம்பதிகளும் ஆகிய இவற்றை குணமாலைக்கு குபேரமித்திரன் சீதனமாகக் கொடுத்தான் என்பதனை,

**மழை முக்குள் அன்ன வருமென்முலை மாதர்நல்லார்**

**இழை முற்று அணிந்தார் எழுநூற்றுவர் கோடிச்செம்பொன்**

**கழைமுற்று தீந்தேன் கரும்பார் வயல் ஐந்து மூதூர்**

**குழைமுற்று காதின் மணிக்கொம்பொடு நாயகன் ஈந்தான்.**

**(சீவக.4: 1064)**

இப்பாடலின் வழி அறியலாம்.

மதனமஞ்சியைத் தன் மகனுக்கு மனைவியாக்க உதயணன் ஒரு கோடி சிறந்த பொன்னைச் சீராக கொடுத்தனுப்பியதை காணமுடிகின்றது. இதனை,

**அன்றுகை நில்லாது சென்ற வுள்ளமொடு**

**பகன்மதி போலப் பசந்த குமரன்**

**இகன்மிசை யுள்ளத் தெவ்வங் கேட்டுத்**

**தலைப்பெருந் தேவியுந் தந்தையுங் கூடிக்**

**குலப்பெருந் தேவியாக் கோடி விழுநிதி**

**சிறப்பின்விட் டிருந்து நலத்தகு கிழமைக்**

**கியாவரு முரியோ ரிவளி னில்லெனக்**

**காவல் வேந்தன் காணங் காண்டலின். (பெருங்:5:8: 145-152)**

என்ற பெருங்கதைப் பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

பெண்களை திருமணம் செய்து வைக்கும்போது சீதனம் அனுப்பி வைக்கின்ற மரபானது இதில் தெரிகின்றது.

### தாலி அணியும் மரபு

பெண்கள் தாலி அணிகின்ற மரபானது பண்டைய காலம் முதல் தற்காலம் வரை நடைமுறையிலுள்ளது. இதனை சீவகசிந்தாமணியில்,

**நாணுள் இட்டுச் சுடர்வீசு நன்மா ணிக்கம் நகுதாலி**
**பேணி நல்லார் கழுத்தணிந்து. (சீவக.13: 2697)**

என்ற பாடலின் வழி தெளியலாம்.

### தூது மரபு

தூது மரபானது அக, புற இலக்கியங்களில் காணமுடிகின்றது. மனிதரையோ அல்லது அ∴றிணையையோ தூது அனுப்புவதனை சங்க காலம் முதலே அறியமுடிகின்றது.

உதயணனிடமிருந்து பிரித்து வைத்திருந்த வாசவதத்தையை மீண்டும் அவனிடம் சேர்த்து வைக்க விரும்பினான் யூகி. அதனை ஓர் ஓலையில் எழுதி உருமண்ணுவாவிடம் சேர்க்குமாறு சாதகனை அனுப்பினான். சாதகன் உருமண்ணுவாவிடம் சென்று பேசியது தூது செல்கின்ற மரபில் அமைந்தது. இதனை,

**தூதுசெல் ஒழுக்கின் சாதகன் உரைப்ப. (பெருங். 4:4 84)**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

குணமாலை சீவகன் மீது கொண்ட காதலை அவனிடம் தெரிவித்து வா என்று கிளியைத் தூதுவிட்ட மரபு காணப்படுகின்றது. அக்கிளி தூது சென்றதுடன் மட்டில்லாமல், தலைவனிடத்தில் பேசுவது போலவும், அவன் கொடுத்த கணையாழியையும், ஓலையையும் பெற்று வந்ததாகவும் கூறப்படுகின்றது. இதனை,

**கண்டாள் நெடிதுயிர்த்தாள் கைதொழுதாள் கையகத்தே**
**கொண்டாள் தினைக்குரல் தான்சூடினாள் தாழ்குழன்மேல்**
**நுண்தார்ப் பசுங்கிளியை நோவ அகட் டொடுக்கி**
**வண்தாரான் செவ்விவாய்க் கேட்டாள்தன் மெய்மகிழ்ந்தாள்.**

**(சீவக. 4: 1039)**

என்ற இப்பாடலடிளில் காண்கிறோம்.

## நிமித்தம் பார்க்கும் மரபு

சங்க இலக்கியத்தில் ‘புள்’ என்ற சொல் பறவை என்ற பொருளையும், நிமித்தம் என்ற பொருளையும் குறிக்கும். புள் நிமித்தம் என்பது பறவை நிமித்தமாகவும் மாறும்.

முல்லைப்பாட்டில் பெண்டிருடைய நற்சொல் புள் நிமித்தமாகக் கூறப்படுகின்றது. இதனை,

**நல்ல நல்லோர் வாய்ப்புள்**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

புள் நிமித்தம் நன்நிமித்தமாகவும், தீநிமித்தமாகவும் கூறப்படும். தீமை விளைவிக்கும் புள் நிமித்தத்தைப் புட்பகை என்று கூறுவர்.

புதுப்புள்ளின் வருகையும் பழம்புள்ளின் செல்கையும் தீ நிமித்தத்தைக் குறிக்கும் என்பதனை,

**புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்**

**விதுப்புற வறியா ஏமக் காப்பினை. (புறநா. 20: 18-19)**

என்ற பாடலின் வழி உணரலாம்.

போருக்குப் புறப்படுவதற்கு முன்னர் ‘புள் நிமித்தம்’ பார்ப்பதனை,

**உட்பகை யொரு திறம் பட்டெனப் புட்பகைக்**

**கேவா னாகலிற் சாவேம் யாமென. (புறநா. 68: 11-12)**

என்ற புறநானூற்று பாடலடிகள் வழி அறிந்துகொள்ளலாம்.

உதயணன், மரங்கொத்தி பறவை ஒன்று ஒரு வற்றல் மரத்தின் உச்சியில் இருந்து நெடுநேரம் ஒலிக்க கேட்டான். இதன் வழி பகைபடை வருமென முன்கூட்டியே அறிவித்தது போல அப்பறவை ஒலி எழுப்பியது. என்பதனை,

**வல்வாய் வயவன் வறள்மரத்து உச்சிப்**

**பல்கால் குரைத்தது பகல்படை தரும்என**

**பாட்டில் கூறக் கேட்டான் ஆகி. (பெரு.1:55: 21-23)**

இப்பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

முன்பு கூறியபடி பறவை நிமித்தம் கண்டு உதயணன் பகைப்படை வரப்போவதனை அறிந்தது போன்று இப்போதும் அப்பறவை நிமித்தம் கண்டு பகைப்படை வருகின்றதனை அறிந்து கொண்டான். இதனை,

**அன்றவண் பாடிய அணிவரி வயவன்**

**இன்றுஇவண் இன்னே இகல்படை தருதல்**

**பொய்த்தல் இன்றி மெய்த்தது ஆம்என. (பெரு.1:55: 34-36)**

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

முதியவேடன் ஏனைய வேடர்களுக்கு பறவையொலி கொண்டு நிமித்தமாகக் கூறியதை,

**வாய்ச்சிறு புதுப்புள் வீச்சறு விழுக்குரல்**

**கேட்டுப்பொரு டெரியுமோர் வேட்டுவ முதுமகன்.**

**(பெரு.1:55: 89-90)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

உதயணன் வாசவதத்தையை பிரியப்போவதனை உணர்த்தும் வகையில் அவனுடைய இடக்கண்ணும் தோளும் துடித்தன. பறவைகள் தீமை தோன்றக் குரலெடுத்துக் கூறின என்பதனை,

**இடக்கண் ஆடலுந் தொடித்தோள் துளங்கலும்**

**ஆருயிர்க் கிழத்தி அகன்றனம் இவணிலள்**

**நீர்மலர்ப் படலை நெடுந்தகையாள**

**…………**

**ஒழுக்கும் புட்குரல் உட்படக் கூறிய**

**நிமித்தமுஞ் சகுனமு நயக்குணம் இன்மையும். (பெரு.1:18: 33-39)**

இப்பாடல் வரிகளின் வழி அறியலாம்.

**கதிரகத் திருந்த முதிர்குரல் பறவை**

**போமின் வல்லே, போதீராயினும்**

**உயிர்த்தவ லுரைக்கு மென்பதை உணர்ந்து**

**முந்துபுள் ளுரைத்த முதுமகன் கூற. (பெரு.1:56: 231-234)**

என்ற பாடல் வேட்டுவர்க்கு மீண்டும் நிமித்திகன் கூறுவதாக அமைந்துள்ளது.

உதயணன் போர்தொடுத்து வெல்லப்போகின்றான் என்பதை ஆருணி அரசனுக்கு தீயநிமித்தங்கள் தோன்றி அறிவுறித்தின என்பதனை,

**ஒழுக்கும் புட்குரலும் படக் கூறிய**

**நிமித்தமுஞ் சகுனமும் நயக்குண மின்மையும்**

**நினைத்தனன்.** **(பெரு.1:56: 235-237)**

இப்பாடல் வரிகள் கூறுகின்றது.

ஆண்களுக்கு வலக்கண் துடித்தலும் பெண்களுக்கு இடக்கண் துடித்தலும் நன்மை பயக்கும் என்கின்ற நம்பிக்கை வழக்கத்தில் உள்ளது.

கலித்தொகையில் தலைவியின் இடக்கண் துடித்தலின் பொருள்வயின் பிரிந்த தலைவன் விரைவில் மீள்வான் என்ற நம்பிக்கை,

**நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே.**

**(கலித். 11: 22)**

என்னும் அடியால் புலப்படுகின்றது.

சிலப்பதிகாரத்தில் கண்துடித்தலை,

**கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**

**உள்நிறை கரந்து அகத்து ஒளித்து நீர் உகுத்தன**

**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன.**

**(சிலப். 1:5: 237-239)**

என்ற வரிகளில் பிரிந்திருந்த கண்ணகியின் கண்களும் கூடியிருந்த மாதவியின் கண்களும் கண்ணீர் சிந்தின. ஆனால் துடிக்கும் போது கண்ணகிக்கு இடக்கண்ணும் மாதவிக்கு வலக்கண்ணும் துடித்தன. இக்கண் துடிப்புகள் முறையே நன்மை, தீமை நேரப் போகின்றன எனக் குறிக்கும் சகுனங்கள் என்பது நம்பிக்கை. கண்ணகி தன் கணவனை மாதவியிடமிருந்து பெறப் போகின்றாள். மாதவி கோவலனிடமிருந்து பிரியப் போகிறாள் என்பதை இவ்வாறு குறிப்பால் உணர்த்துகின்றார் இளங்கோவடிகள்.

விசயை தன்னுடைய இடக்கண் துடித்ததால் பிரிந்திருந்த தன்னுடைய மகன் சீவகன் தன்னைக் காண வருவான் என்று நம்பினாள். இதனை,

**எல்லிருட் கனவில் கண்டேன் கண்இடம் ஆடுமின்னே**

**பல்லியும் பட்ட பாங்கர் வருங்கொலோ நம்பிஎன்று**

**சொல்லினள் தேவிநிற்பப் பதுமுகன் தொழுது சேர்ந்து**

**நல்லடி பணிந்து நம்பி வந்தனன் அடிகள் என்றான்.**

**(சீவக.7: 1909)**

என்ற பாடலின் வழி அறியலாம். இதில், விடியற்காலைக் கனவும், இடக்கண் துடிப்பும், பல்லியின் ஒலியும் நல்லவை நடக்கும் என்று நம்புகின்ற தன்மையைக் குறிப்பிடக் காணலாம். விசயை இத்தகைய நிமித்தத்தினால் சீவகன் வரக்கண்டாள்.

கட்டியங்காரனின் காமக்கிழத்தியாரின் வலக்கண் துடித்தது. தீக்கனாக்கள் கண்டனர், கட்டியங்காரனின் உடல்அழகு குலைந்தது. கோட்டான் பகலிலே கூவியது. முரசுஒலி அவிந்தது என்பது போன்ற தீயநிமித்தங்கள் நிகழ்ந்தது என்பதனை,

**போக மகளிர் வலக்கண்கள் துடித்த பொல்லாக் கனாக்கண்டார்**

**ஆக மன்னற்க்கு ஒளி மழுங்கிற்று அஞ்சத் தக்க குரலினால்**

**கூகை கோயில் பகல் குழறக் கொற்ற முரசம் பாடவிந்து**

**மாக நெய்த்தோர் சொரிந்தெங்கும் மண்ணும் விண்ணும் அதிர்ந்தவே.**

**(சீவக.10: 2173)**

இப்பாடலின் வழி அறியலாம்.

கோவிந்தன் போருக்குப் புறப்படுகின்ற போது நல்நிமித்தமாக வலக்கண் துடித்தது என்று கூறப்படுகின்றது. இதன்மூலம் கட்டியங்காரனின் தோல்வியையும், கோவிந்தனின் வெற்றியையும் ஆசிரியர் நிமித்தம் வழி கூறியிருப்பதனை,

**நெறியின் நல்கின புள்ளும் நிமித்தமும்**

**இறைவன் கண்வலன் ஆடிற்று இயைந்தரோ. (சீவக.10: 2168)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

சீதை திரிசடையிடம் தன்னுடைய கண் துடிப்பதனால் ஏற்படும் நிமித்தம் பற்றி கூறுவதாகவும், அதனால் ஏற்படுவது யாதென கேட்பதாகவும் உள்ளதனை,

**நலம் துடிக்கின்றதோ? நான் செய் தீவினைச்**

**சலம் துடித்து, இன்னமும் தருவது உண்மையோ?**

**பொலந்துடி மருங்குலாய்! புருவம், கண்முதல்**

**வலம் துடிக்கின்றில; வருவது ஓர்கிலேன். (கம்ப.5:3: 5100)**

இப்பாடல் வரிகளின் மூலமாக அறியலாம்.

**முதிர்தரு முகிலிடை முழங்கிற் றென்னவே.**

**(சூளா.5:399: 4)**

இதில் முகில் முழங்குவது நல்ல நிமித்தமாகக் கூறப்படுகின்றது.

போர் செய்யப்போகும் போது நன்னிமித்தமாக வெல்பவரின் உடல் அழகு பெறுவதும், அவன் சார்ந்த மகளிர்க்கு இடத்தோள் துடிப்பதும் நல்ல நிமித்தமாகக் கூறப்படுகின்றது. இதனை,

**ஆளியே றனையவ னணிபொன் மேனிமே**

**னீளொளி தவழ்ந்தது நெடுங்க ணேழையர்**

**தோளுமங் கிடவயிற் றுடித்த வீர்கை**

**வாளும்பூ நின்றன மலர்ந்த துள்ளமே. (சூளா.9: 1218)**

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

உதயணன் வரும் வழியில் தீயநிமித்தங்களும் தீய சகுனங்களும் தோன்றியதைக் கண்டு வருந்தினான். அதனால் தன் மனைவி வாசவதத்தைக்குத் துன்பம் வரப்போவதனை உணர்ந்தான். அதன்படியே நடந்தது என்பதனை ஆசிரியர் நிமித்தம் வழி விளக்குவதனை,

**சவரர் வந்து தீயிட்டெனத் தஞ்செயலி னாக்கிமிக்**

**கவகுறிகள் கண்டரச னன்பிற்றேவிக் கேதமென்**

**றுவளகத் தழுங்கிவந் துற்றகரு மஞ்சொலக்**

**கவற்சியுட் கதறியே கலங்கிமன்னன் வீழ்ந்தனன்.**

**(உதயணகுமார.2: 139)**

என்ற பாடலடிகள் வழி தெளியலாம்.

## நம்பிக்கை மரபு

நம்பிக்கை என்பது மனித உணர்ச்சியின் வெளிப்பாடு ஆகும். ஒரு செயல் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்றால் நல்லவை கேட்கவோ, பார்க்கவோ

வேண்டும் என்று மக்கள் கருதினர். இதன் வெளிப்பாடே ஒவ்வொரு நிகழ்விலும் நடக்கிறது.

**திருமணம் நம்பிக்கைகள்**

**புள்ளும்பொழுதும் பழித்தல் அல்லதை**

**உள்ளிச் சென்றோர்ப் பழியலர். (புறநா. 204: 10-11))**

நல்லனவும், தீயனவும் புறப்பட்ட பொழுதை ஒட்டியே உள்ளது என்று நம்பியுள்ளனர் என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

வேங்கை மலருகின்ற நாள் திருமணம் செய்வதற்கு உகந்த நாள் என்று கொங்குவேளிர் கூறுவதனை,

**கருங்கோள் குறிஞ்சியுங் கடிநாள் வேங்கையும்.**

**(1:50: 26)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

வேங்கை மரங்களும் நல்ல பூங்கொத்துக்களை மலரப்பெற்றுள்ளது. திருமணம் செய்து கொண்டு இவள் இன்பத்தைப் பெறலாமே என்று தலைவியை நாடிப் பகலில் வந்த தலைவனிடம் தோழி சொல்லியதை,

**வேங்கையு மொள்ளிணர் விரிந்தன. (அக. 2: 16)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம். வேங்கைப்பூ பூத்திருக்கிறது (திருமணம் செய்யும் பருவகால அறிவிப்பு) ஆகும்.

வேங்கை மரங்கள் காலையில் நறுமண மலர்களைக் கொட்டுகின்றன என்று தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயதை,

**வேங்கை தந்த வெற்பு அணி நல்நாள். (நற்றி. 396: 3)**

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகின்றது.

உதயணனை வாசவதத்தை தொழுது நிற்கின்றாள். தமிழர் மரபு இதில் புலப்படுவதனை,

**கணவரைத் தொழும் நம்பிக்கைகள்**

**செந்தாமரைக் கண் கழீஇ மந்திரத்**

**தந்தி கூப்பித் தென்புலக் கிறைஞ்சித். (பெரு.1:55: 7-8)**

என்ற இப்பாடல் வரிகளின் வழி அறியலாம்.

**கலை மரபு**

**இசைக்கலை (யாழிசை)**

யாழ்இசையும், பாடலும் விலக்கும் விடையும் ஆகியவற்றைக் கற்றாள் உதயணனிடம் வாசவதத்தை. இசையைப் பயிற்றுவிக்கப் பாடசாலைகள் அமைந்திருந்தன. இசையாசிரியர்கள் நுண்ணிய அறிவுடையவராக இருந்தனர் என்பதனை,

**நாலும் செவியும் நுண்ணிதின் நுனித்தே**
**யாழும் பாடலும் அற்றம் இன்றி**
**விலக்கும் விடையும் விதியின் அறிந்து**
**துளக்கின் கேள்வி தூய்மையின் முற்றி. (பெரு.1:37: 133-136)**

இப்பாடல் வரிகளின் வழி அறியலாம்.

காந்தருவதத்தையை திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்றால் யாழ் இசையில் வெல்ல வேண்டும் என்பது விதியாகும். நல்லநாள் பார்த்து யாழ் போட்டி மண்டபத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டது என்பதனை,

**நானக்கிடங்கு ஆடைநகர் நாகத்திடை நன்பொன்**
**வான் நக்கிடு மாட்சியதோர் மண்டபம் செய்கென்ன**
**மீனத்திடை நாள்கிழமை வெள்ளிசயை பக்கம்**
**கானத்திடை வேங்கையெழக் கண்ணினர்கள் அன்றே.**

**(சீவக.3: 590)**

இப்பாடல் கூறுகின்றது. பண்டைத் தமிழர்களிடையே நாள் பார்த்துக் கட்டிடங்களுக்கு தச்சு வேலை செய்த வழக்கம் இப்பாடலில் புலனாகின்றது.

**நடனக்கலை**

அரசர் அரண்மனையில் கிண்கிணியையுடைய அரங்கின்கண் ஏறி ஆடும் கூட்டமாகிய முந்நூற்றிருபது நாடகக்கணிகையர் அமர்த்தப்பட்டிருந்தனர் என்பதனை,

**இறங்கு பொற் கிண்கிணி யரங்கிய லாயத்து**
**நாடக மகளிர் நாலெண் பதின்மரும். (பெரு.1:37: 217-218)**

இப்பாடல் உணர்த்துகின்றது.

**ஓவியக்கலை**

**எழுதுவினைத் திருநகர் எழிலுற வெய்தி. (பெரு.3:4: 36)**

எனப் பெருங்கதை வழி ஓவியத்தை அறியமுடிகின்றது.

ஓவியரை 'வித்தகர்' என்று பெருங்கதை கூறுவதனை,

**வித்தக வினைஞர் பத்தியிற் இயற்றிய**

**சித்திரச் சாலையும். (பெருங்.3:4: 14-15)**

என்ற வரிகளில் அறியலாம்.

ஆடையில் ஓவியம் தீட்டுவதை,

**நாற்றிய கையரேற்றிய கோலமொடு**

**நுரைவுரித் தன்ன நுண்ணூற் கலிங்கம். (பெருங்.3:17: 169-170)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

திரைகளிலும், கொடியிலும் ஓவியம் எழுதும் கலையினை,

**வித்தக ரெழுதிய சித்திரக் கொடி (பெருங்.3:14: 97)**

**ஓவிய வெழுனித் தூணொடு சேர்த்து. (பெருங்.4:14: 3)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

**சிற்பக்கலை**

நறிய மலர்களோடு பொறிக்கப்பட்ட பூங்கொடி உருவத்தையுடைய தொழில் திறனமைந்த சிலம்புகள் தங்கிய அவளது சிவந்த அடிகள். இதனை,

**சிலம்புடை நறுமலர் எழுதுங் கொடிக் கம்பத்துச்**

**சிலம்பிடைத் தங்கிய சேவடி. (பெருங்.3:14: 136-137)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

சக்கர வட்டத்தோடு பற்பல சங்கு வடிவங்களும் பொறிக்கப்பட்ட ஓலைத் தொழித்திறம் அமைந்ததும் சுருட்டி மணப்பொருள் கூட்டிய அரக்கினை உருக்கி ஏடெழுதும் தொழிலாளத் இடுமிடமறிந்து ஒற்றிய இலச்சினையோடு சுருளமைந்ததும் ஆகிய திருவோலை. இதனை,

**சக்கர வட்டமொடு சங்கு பல பொறித்த**

**தோட்டுவினை வட்டித்துக் கூட்டரக் குருக்கி**

**ஏட்டுவினைக் கணக்க னீடறிந் தொற்றிய**

**முடக்கமை யோலை. (பெருங்.4:10: 93-96)**

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

தூண்களில் தாமரை மலர் போன்று செதுக்கிய சிற்பங்கள் பற்றியச் செய்தியை,

**சித்திரத்தாமரைப் பத்திரப் பரூஉத்தொடி. (பெருங்.3:20: 51)**

என்ற பெருங்கதை பாடல் வரியின் வழி அறியலாம்.

**கட்டிடக்கலை**

பெருங்கதையில் கட்டிடக்கலையானது சிறப்பாக அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது. இதனை,

**கோயில் வட்டமுங் கோணப் புரிசையும்**
**வாயின் மாடமும் வஞ்சப் பூமியும்**
**இலவந் திகையு மிளமரக் காவும்**
**கலவம் புகலுங் கான்கெழு சோலையும்**
**உரிமைப் பள்ளியு மருமைக் காப்பிற்**
**படைக்கலக் கொட்டிலும் புடைக்கொட் டாரமும்**
**..................**
**வகைமாண் டெய்வம் வழிபடு தானமும்**
**குதிரைப் பந்தியு மதிர்த லானா**
**யானைத் தானமுந் தானைச் சேக்கையும்**
**எயில தகற்றமு மயில்விளை யாடும்**
**சுதைவெண் குன்றமும் புதையிருட் டானமும். (பெருங்.3:14: 14-26)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம். வட்டவடிவமான அவ்வரண்மனையையும் கோணங்களையுடைய மதில் அமைப்பினையும், கோபுரத்தின் அமைப்பையும், அவ்வரண்மனையில் மறைந்து உள்ள கள்ள இடமும், கடந்து செல்லுதற்கரிய பெரிய வாயிலும், அவ்வாயிலுடைய சிறு வாயிலும், அவை மண்டபமும், கூத்தாட்டம்பலமும், பல்வேறு வகைப்பட்ட தெய்வங்களை வழிபாடு செய்யும் இடங்களும், குதிரைக் கொட்டிலும் யானை கட்டுமிடங்களும், காலாட் படையினர்

தங்குமிடங்களும். மயில்கள் விளையாடிக் கொண்டிருக்கும் வெண்சுதை தீற்றிய செய்குன்றங்களும் பொருள்களை மறைக்கும் இருட்டறையும் என அரண்மனையின் அமைப்பைப் பற்றி கூறுகின்றது.

மதிலின் அமைப்பினைக் குறித்து அழகாகக் கூறுகின்றது பெருங்கதை. மேகலை, நீர், அகழி, வாயில் போன்ற உறுப்புகள் அமைந்திருப்பதனை,

**பத்திரப் பாம்புரி யத்தகக் கலாஅய்**
**முற்பட வளைஇய பொற்படைப் படுகாற்**
**கண்டவர் நடுக்குங் குண்டகழ்ப் பைந்துகில்**
**தண்டாச் செல்வமொடு தனக்கணி யாக**
**உடுத்துவீற் றிருந்த வடுத்தீ ரல்குல்**
**மாற்றோர் நுகரப் படாஅ தேற்ற**
**பன்மணி பயின்ற வொண்முகட் டுச்சி**
**நலத்தகு ஞாயி லிலக்கண விளமுலை. (பெருங்.3:3: 17-24)**

என்னும் இப்பாடல் வரிகளால் அறியலாம்.

**விண்ணுற நிவந்த பண்ணமை படைமதில்**
**வாயிலு மருங்கிலுங் காவல் கண்ணி. (பெருங்.3:4: 3-4)**

மதிலின் சிறப்பு பற்றி இதில் காணலாம்.

இவ்வாறான கட்டிடக்கலைகள் பற்றிய செய்திகள் கொங்குவேளிரின் பெருங்கதைக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

**கண்ணெலாங் கவர்வன கனக கூடமும்**
**வெண்ணிலாச் சொரிவன வெள்ளி வேலியுந்**
**தண்ணிலாத் தவழ்மணித் தலமுஞ் சார்ந்தரோ**
**மண்ணினா லியன்றில மதலை மாடமே. (சூளா.2:42)**

என்ற பாடல் வரிகளின் வழி கட்டிடக்கலையின் சிறப்பினை சூளாமணியில் அறியலாம்.

**சுண்ணப்பொடிக் கலை**

சுண்ணம் இரண்டில் எந்தச் சுண்ணம் சிறந்தது என்று சீவகன் ஆராய்ந்து கூறுவதனை,

**நல்ல சுண்ணம் இவையிவற் றிற்சிறிது**

**அல்ல சுண்ணம் அதற்கென்னை யென்றிரேல்**

**புல்லு கோடைய பொற்புடைப் பூஞ்சுண்ணம்**

**அல்ல சீதம்செய் காலத்தின் ஆயவே. (சீவக.4:887)**

இப்பாடலின் வழி அறியலாம்.

**மணம் (களவு, கற்பு)**

வடமொழியில் வால்மீகி முனிவரால் இயற்றப்பட்ட இராமாயணத்தைத் தழுவி தமிழில் கம்பர் இயற்றிய காப்பியமாக கம்பராமாயணம் உள்ளது. இதில் கம்பர் தமிழ் மரபிற்கு ஏற்ப, பல மாற்றங்களைச் செய்துள்ளார்.

காப்பியத்தை நடத்திச் செல்லும் திறத்தாலும், சொற்பொருள் அழகினாலும், கற்பனை வளத்தாலும் கம்பர், தனக்கென தனியிடம் உலகினில் பெற்றுள்ளார்.

இவர் தம் காப்பியத்தில் இராமன், சீதை இருவரும் திருமணத்திற்கு முன்பே ஒருவரை ஒருவர் கண்டு அன்புகொள்வதாக தமிழ் மரபிற்கேற்பப் படைத்துள்ளார். இதனை,

**எண்ணரு நலத்தினாள் இணையள் நின்றுழி**

**கண்ணோடு கண்ணினை கவ்வி ஒன்றையொன்று**

**உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட**

**அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்.**

**(கம்ப.1:10: 514)**

என்ற பாடல் மூலம் இதனைக் கூறுகின்றார்.

பதுமாபதி உதயணனைப் பிரிந்து கவலையுற்றிருந்த போது அவளது தோழி உதயணனிடம் இதைப் பற்றிக் கூறி களவுப்புணர்ச்சிக்குக் காமக் கோட்டத்தில் கூட்டினாள். மென்மைத்தன்மை உடைய அவளுடன் இன்புற்றான் என்ற களவு மணம் குறித்த செய்தியினை,

**யாப்பியா யினியா ளென்று**

**மவளுடைத் தோழி சென்று**

**நாப்புகழ் மன்னற் கண்டு**

**நலம்பிற வுரைத்துக் கூட்டக்**

**காப்புடைப் பதுமை யோடுங்**

**காவலன் கலந்து பொன்னின்**

**சீப்பிடக் கண்சி வக்குஞ்**

**சீர்மங்கை நலமுண் டானே. (உதயணகுமார.3: 158)**

இப்பாடலின் வழி அறியலாம்.

நரவாகனன் மதனமஞ்சிகையைக் கண்டு காதல் கொண்டு அவளை மணம் செய்து கொண்டு இன்புற்று வாழ்கிறான். இதனை,

**மட்டவிழ் கோதை தன்னை**

**மன்னவ குமரன் கண்டு**

**………….**

**மட்டவிழ் மலர்ச்சோ லைக்குள்**

**மன்னவ குமரன் மின்னின்**

**இட்டிடை மாதைத் தந்தே**

**யின்புறப் புணர்ந்தா னன்றே. (உதயணகுமார.5: 257)**

இப்பாடலின் வழி உணரலாம்.

அவந்தி நாட்டு அரசன் பிரச்சோதனன் தன் அமைச்சர் சாலங்காயனின் தங்கையான யாப்பி என்பவளையும், பரதகன் என்னும் அமைச்சனின் தங்கையான திலதசேனை என்பவளையும் பலரும் அறியுமாறு யூகிக்கு திருமணம் செய்து வைக்கிறான். இதனை,

**சாலங் காயன் சகோதர மானநன்**

**னீலங் காய்ந்த நெடுவேல் விழிநுதற்**

**பாலங் கோர்பிறை யாம்படா வெம்முலைக்**

**கோலங் காரன்ன கூரெயி றாப்பியும். (உதயணகுமார.4: 218)**

என்ற பாடல் வரிகளிலும்,

**பரதகன் றங்கை பான்மொழி வேற்கணி**

**…………**

**அரிய யூகிக் கரசன் கொடுத்தனன். (உதயணகுமார.4: 219)**

என்ற பாடல் வரிகளிலும் அறியலாம்.

**மாரி வழிபாடு**

**என்று மிப்பரு வத்தினோ டைப்பசி**

**சென்று தேவி சிறப்பது செய்தும.:.**

**தொன்று மோரல மாயின மொன்றலா**

**நன்ற லாதன நங்களை வந்துறும். (யசோதர.1: 15)**

மாரி வழிபாடு பற்றி அரசரிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. அதன்பின் அரசர் மாரி வழிபாடு செய்வதனையும் யசோதர காவியம் கூறுகின்றது. இதனை,

**பாவ மூர்த்தி படிவ மிருந்தவத்**

**தேவி மாட மடைந்து செறிகழன்**

**மாவ லோன் வலங்கொண்டு வணங்கினன்**

**தேவி யெம்மிடர் சிந்துக வென்றரோ. (யசோதர.1: 19)**

இப்பாடல் வழி மாரிதேவியை மாரிதத்தன் வணங்கும் செய்தியைக் காணலாம்.

**போர் மரபு**

உதயணன் வீரம் மிக்கவன், அது அவனது போர்செய்யும் திறத்தினில் தெரிகின்றது.

பிரச்சோதன மன்னன் ‘மாய யானை’ என்னும் ‘எந்திரப் பொறி’ மூலம் உதயணனைச் சிறைப்பிடிக்க வருகின்ற போதும், சவரர், புளிஞர் என்னும் வேட்டுவர்கள் உதயணனிடம் போரிடுகின்ற போதும், மகதமன்னன் தருசகனுக்காக சங்க மன்னரோடு போரிட்ட போதும், ஆரணி அரசனிடமிருந்து கௌசாம்பியைக் கைப்பற்றப் போரிட்ட போதும் அவனது வீரம் வெளிப்படுகின்றது.

மாய யானை என்னும் எந்திரப் பொறி வருகை பற்றியும், அவ்வெந்திரப் பொறியில் இருந்து வீரர்கள் வெளியேறி உதயணனிடம் போர் புரிவதனைப் பற்றியும் பெருங்கதைக் கூறுகின்றதனை,

**பொறியின் வேழத்தின் பொங்கு செவியுற**

**உறும னத்துட னூர்ந்துமுன் னேவர**

**மறையு மாந்தர்கைம் மாவை யழித்திடப்**

**பொறிக ழன்றது போர்ப்படை யானதே. (உதயணகுமார.1: 49)**

என்ற பாடல் வரிகளில் அறியலாம்.

உதயணன் பிரச்சோதனனால் சிறைப்படுத்தப்பட்டிருந்த போது கூட அவனது திறனறிந்து பிரச்சோதன மன்னன் உதயணனிடம் போர் பயின்று வர தன் மக்களை அனுப்பினான் என்பததையும் வாசவதத்தைக்கு யாழ் பயிற்றுவிக்கவும் கூறினான். பிரச்சோதனனின் வேண்டுகோளை ஏற்ற உதயணன் அவரது மக்களுக்கு வில், வேல் முதலான படைக்கல வித்தைகளை எல்லாம் நன்கு கற்றுக் கொடுத்தான். அவரது மகள் வாசவதத்தைக்கு யாழ்வித்தை கற்றுக்கொடுத்தான் என்பதனை,

**வேந்தன்றன் மக்கட் கெல்லாம்**

**வேன்முதல் பயிற்று வித்தும்**

**பூந்துகில் செறிம ருங்குற்**

**பொருகயற் கண்ணி வேய்த்தோள்**

**………….**

**சேர்ந்தவ ணிகரி லின்பிற்**

**செல்வனு மகிழ்வுற் றானே. (உதயணகுமார.1: 103)**

இப்பாடல் வரிகளின் வழி அறியலாம்.

போர்ப்பயின்று வாழ்தல் என்பது பண்டைய மரபாகும். அதன்படி உதயணகுமார காவியம் பண்டைய மரபுகளை எடுத்துரைப்பதனை காணலாம்.

### ஒற்றறியும் மரபு

‘உற்றதை உணரும் ஒற்றர்’ எனப்படுவர் ஒற்றர்கள்.

**பகை ஒற்றர்**

**பற்றா மன்னன்**

**ஒற்றர் இவர்என உரைத்து, அறிவுறீஇ**

**குற்றங்காட்டி, கொலைக்கடம் பூட்டுதும். (பெருங்.3:25: 101-103)**

பகைமன்னரின் ஒற்றர்கள் பிடிபட்டுவிட்டால் அவர்கள் செய்த அக்குற்றத்திற்காக அவர்களை கொல்ல வேண்டும் என்பது மன்னன் கட்டளையாகும்.

### ஒற்றர் கூறும் செய்தியை ஆராய்தல்

ஒற்றாடல் செய்தியினைத் திருக்குறள்,

**ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்**

**தெற்றென்க மன்னவன் கண். (குறள்:581)**

எனக் குறிப்பிடுகிறது. ஒற்றர்களும், புகழ் அமைந்த அரசனும் அறநூலும் என்றும் இரண்டு பகுதியையுமே, ஒரு மன்னவன் தனக்குரிய இரு கண்களாகக் கொள்ள வேண்டும்.

**ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்**

**கொற்றங் கொளக் கிடந்ததுஇல். (குறள்:583)**

பகைநாட்டு நிகழ்ச்சிகளை ஒற்றர் மூலமாகத் தெரிந்து கொண்டு, அவற்றின் பொருளையும் ஆராய்ந்து தெளியாத மன்னன், போரில் வெற்றி கொள்வதற்கு வழியேயில்லை.

**ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்**

**ஒற்றினால் ஏற்றிக் கொளல். (குறள்:588)**

ஓர் ஒற்றன் அறிந்து வந்து சொன்ன செய்தியையும், மற்றுமோர் ஒற்றனை ஏவி அறிந்து வருமாறு செய்து உண்மையை ஒப்பிட்டு அறிதல் வேண்டும்.

**ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்**

**சொற்றொக்க தேறப் படும். (குறள்:589)**

ஓர் ஒற்றன் மற்றோர் ஒற்றனை அறியாதபடி பார்த்துக் கொள்வதோடு இப்படி மூன்று ஒற்றர் சொல்வதையும் ஒருங்கே ஆராய்ந்து உண்மை தெளிய வேண்டும் என்று வள்ளுவர் ஒற்றாடலைப் பற்றிக் கூறுகின்றார்.

ஒற்றர்கள் கொண்டு வரும் செய்தியை அரசன் நன்கு ஆராய வேண்டும். அதனால் மூன்று ஒற்றர்கள் இருப்பர். அந்த மூன்று ஒற்றர்கள் கூறும் செய்தியையும் ஒப்புமைப்படுத்தி பார்த்துவிட்டு அதன் பின்னரே அரசன் முடிவெடுக்க வேண்டும். இதனை,

**ஒற்று மாக்களை ஒற்றரின் ஆயா**

**முன்தனக்கு உரைத்த மூவர் வாயவும்**

**ஒத்தது நோக்கி மெய்த்தகத் தேறி. (பெருங்.3:25: 48-50)**

என்ற பாடல் வரிகளின் வழி ஒற்றாராய்வதனைக் கொங்குவேளிர் குறிப்பிடுகின்றார்.

## தொகுப்புரை

**தழுவல் இலக்கியமும் தமிழர் மரபும்** என்னும் இவ்இயலின் வழி ஆராய்ந்து பெறப்பட்ட கருத்துக்கள் பின்வருமாறு தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஒரு படைப்பைச் சற்று மாற்றி மற்றொன்றை உருவாக்குவது 'தழுவல்' இலக்கியமாகும். மூலப்படைப்பாளரின் புலமையை விடப் பெயர்ப்பாளரின் மேதைமை இவ்வகை மொழிபெயர்ப்பில் வெளிப்படும். தழுவல் இலக்கியம் காப்பியத்துள் ஊடுருவித் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது.

தமிழில், அமலாதித்தன், மனோகரா, சிம்மபுரி வீரன் போன்ற நாடகத்தழுவல் நூல்களும் சிறுகதைத்தழுவல் நூல்களும் காணப்படுகின்றன. வ.வே.சு. அய்யர் அவருடைய 'மங்கையர்க்கரசியின் காதல்' என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சிறுகதைகள். ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிக்கதைகளைத் தழுவியனவாக அமைந்துள்ளன. போரே நீ போ என்னும் புதினம் தழுவல் இலக்கியம் ஆகும். பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம் ஆகிய நூல்களில் தமிழர் மரபுகளைக் காணமுடிகின்றது. பெருங்கதைக் காப்பியத்தில் திருமண மரபு (நன்நாள் அறிவித்தல், முகூர்த்தம் பார்த்தல், வேள்வித்தீ) போன்றவற்றினைக் காணமுடிகின்றது. ஒற்றறியும் மரபு, தூது மரபு இவற்றினையும் பெருங்கதையில் காணமுடிகின்றது. நிமித்தம் பார்க்கும் மரபு, நம்பிக்கை மரபு போன்றவற்றினையும் காணமுடிகின்றது. கட்டிடக்கலையின் வல்லமை தழுவல் இலக்கிய நூல்களில் காணமுடிகின்றது.

எனவே தழுவலாகப் படைக்கப்பெறும் ஓர் இலக்கியத்தில், அந்தந்த மொழி, அம்மொழி பேசும் மக்கள், அவர்தம் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவை இடம்பெறும் என்பது பெறப்படுகிறது. மூலநூலில் உள்ள மரபுகள், நம்பிக்கைகள், சமூகப்பின்னணி போன்றவற்றை மொழிபெயர்க்கும் போது, தமது மொழி, மரபுகள், நம்பிக்கைகள் சார்ந்ததாகவே படைப்பாளர்கள்/மொழிபெயர்ப்பாளர்கள் அமைப்பார்கள் என உறுதிபட உரைக்கலாம். இதனையே தழுவல் மரபு என்று குறிப்பர். அத்தகைய தன்மை தமிழில் எழுந்துள்ள தழுவல் இலக்கியங்களில் காணப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. www. Tamilvu.org

2. https://ta.m.vikipedia.org

3. வளர்மதி. மு., எம்.ஏ., (பி.ஹெச்.டி), ஆராய்ச்சி உதவியாளர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113.

4. சிவகாமி. க, தமிழில் வந்துள்ள மொழிபெயர்ப்புகள், பதினான்காம் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு. ப.124 – 1982.

5. சந்திரன். வீ, மொழிபெயர்ப்பு மரபுகள், பயோனியர் புத்தக வெளியீடு, திருவல்லிக்கேணி,

சென்னை –5. 1990. ப. 42

6. மேலது. ப. 41

7. சண்முகவேலாயுதம். சு, மொழிபெயர்ப்பியல், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம். ப. 94

8. மேலது. ப. 39

9. www. Tamilvu.org Date: 05.07.2020

10. உ.வே.சாமிநாதையர், பெருங்கதை, முகவுரை, xxvi

தழுவல் காப்பியமாகிய பெருங்கதை காதல், திருமணம், பிரிவு போன்ற ‘சங்க அகப்பொருள் கூறுகள்’ பலவற்றைக் கொண்டிருக்கிறது. அந்த அகப்பொருள் கூறுகள் பெருங்கதையில் இடம்பெற்றுள்ள பாங்கு இவ்வியலில் ஆராய்ந்து உரைக்கப்பெறுகிறது.

### அகம் விளக்கம்

அகம் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் கூறப்படுகின்றன. அச்சொல் அகப்பொருள், இன்பம், இடம், இருப்பிடம், வீடு, உள்ளிடம், மனம், ஆழம், ஆன்மா ஆகிய பொருள்களைத் தருகின்றது.

### அகம்

அகமாவது இன்பம்[1]

அகம் என்னும் சொல்லிற்கு இன்பம் என்பது முடிந்த பொருளாம்[2]

அகம் என்னும் சொல்லே இன்பம் என்னும் பொருள் தந்து நிற்குமாயின் வேறு கூறுவானேன்.[3]

அகம் என்பது ‘வீடு’ என்பதாகக் கூறும் போது ‘வீட்டுக்குள் நிகழ்வது’ என்ற பொருளினைத் தருகிறது.

‘வீட்டினுள் நடைபெறும் வாழ்வை அகம்’ என்பர்.[4]

உள்ளத்தையும், உள்ளத்தில் நிகழும் இன்பத்தையும் அகம் உணர்த்துகின்றது. இது,

உள்ளத்தே உணரப்படும் காதல்[5]

என்றும்,

அகப்பொருளாவது மாந்தரது உள்ளத்தே நிகழ்வது[6]

என்றும் கூறப்படுகின்றது.

### உ.வே.சாமிநாதையர்

சங்கப்பாடல்கள் பலவற்றைத் தொகுத்து வழங்கிய உ.வே.சா தனது குறுந்தொகைப் பதிப்பின் முகவுரையில் அகம் என்பதற்கு உரையாசிரியர் தரும் விளக்கத்தை எடுத்து மொழிந்துள்ளார். அதாவது,

‘ஒத்த அன்பால் ஒரு தலைவனும் ஒரு தலைவியும் பால்வழியுய்க்கப்பட்டு அளவளாவிய காலத்துப் பிறந்த இன்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்த தெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதொரு பொருளாதலின் அதனை அகம் என்றார். இப்பொருள் பற்றிப் புலனெறி வழக்கத்தின் இலக்கணத்தைத் தொல்காப்பியப் பொருளதிகாரமும், இறையனாரகப்பொருள் முதலிய நூல்களும் உணர்த்துகின்றன.’[7] (1937:18)

## உரையாசிரியர்கள் தரும் விளக்கம்

தலைவன் தலைவியின் உள்ளங்கள் இணைந்த ஒழுக்கத்தைக் கூறுவது அகமாகும். இதனை உணர்வின் வழி உணரமுடியுமே தவிர இதுதான் என்று பிறரிடம் சொல்ல முடியாத தன்மையுடையது. இதனை இளம்பூரணர் கூறுகின்றபோது, ‘அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனான் ஆய பயன் தாமே அறிதலின் அகம்’[8] என்று கூறுகின்றார்.

தலைவனும் தலைவியும் கொள்கின்ற இன்பமானது பிறரால் அறியப்படாத வகையில் இருந்தால் அகமாகும். இதனை,

‘ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அஃது அகம்.[9]

‘உள்ளக்கிடக்கையும் அவர்காதல் எதிர்ப்பட்டு வினைப்பட்டு அன்னோர் மனையுற வாழ்க்கையில் தொடர்புறுவதாகும்’ என்று கூறுகின்றார்.[10]

## அறிஞர்கள் தரும் விளக்கம்

‘உள்ளத்தே எழுந்த அவா, உடல்வழிப் படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பது ஆகலின் உள்ளம் என்பதனோடு தொடர்புபட அகம் என்றனர்’ என்று அ.அ மணவாளன் கூறுகின்றார்.[11]

அகப்பொருள் என்பது மனத்தால் சுவைத்து மகிழ்ச்சியடைவது. சொற்களால் வெளிப்படையாக விளம்ப முடியாமல் உள்ளத்தால் சுவைத்து இன்புறுவது என்று சாமி சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.[12]

'அகம் என்பதை இல்லம் எனக்கொண்டு, ஒருவனும் ஒருத்தியும் இல்லத்தின் கண்ணிருந்து நடத்தும் வாழ்க்கையென்றும், இல்லறத்துக்கு வெளியே கடைபிடிக்கும் ஒழுக்கங்கள் யாவும் புறம் என்றும் கொள்வாரும் உளர்' என்று இரா. மோகன் கூறுகின்றார்.[13]

'தம்முள் பொருத்தமில்லாத காதலன், காதலி என்பார் உடனுறையும் உளதாய் இன்பமே உலக இன்பங்களுள் தலைசிறந்ததாலின் அதனையே அவ்வின்பம் காரணமாய் நிகழும் ஒழுக்கமுறை கூறுவான் போந்த இலக்கண நூலுட் சிறப்பதே அகப்பொருள்' என்று கா. சுப்பிரமணியப்பிள்ளை அக ஒழுக்கத்தைப் பற்றி கூறுகின்றார்.[14]

அகம் என்பது இறைவனோடு தொடர்புடையது, இறைநெறியிற் செலுத்துவது.[15]

பேரின்பத்திற்குக் காரணமாகிய அன்பே செம்மையான அகப்பொருள்.[16]

'அகம்' என்பது, அடங்கியது, இடம், உள்ளிடம், மனம் உள்ளிட்ட பலபொருள் தரும் ஒரு சொல்லாகும். உள்ளமாகிய, மனஉணர்வினால் நுகர்ந்து இன்பமுறும் காம இன்பத்தையும் ஆகுபெயராய் அச்சொல் உணர்த்தும். ஓர் ஆணும் பெண்ணும் தனிமையில் கூடி இன்பம் நுகர்ந்து மகிழ்ந்தும், பின் ஊரும் உலகும் அறியத் திருமணம் புரிந்து சான்றோர் போற்ற இல்லறம் புரிந்தும், வீடும் நாடும் போற்ற வாழும் உலகியல் வாழ்க்கை பற்றிய பொருள்களையெல்லாம் உள்ளடக்கிக் காண்பதே அகப்பொருள் ஆகும். இவை பற்றிய புலவர் பாடல்களை அகப்பாடல் என வழங்குவர் என்று மு. சண்முகம்பிள்ளை கூறுகின்றார்.[17]

மணப்பருவமுற்ற ஆணும் பெண்ணும் மனம் ஒருப்பட்டு இருவரும் ஒருவராய் ஒன்றி வாழும் நிகழ்ச்சியை 'அகவொழுக்கம்' என்பர். அகவொழுக்கம் என்பதே அகத்திணை. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள், இன்பம் ஒன்றினை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு பாடப்பெறுவன அகப்பொருட்பாடல்கள் என்றும் மு. சண்முகம் பிள்ளை கூறுகின்றார்.[18]

ஒத்த அன்பினையுடைய தலைவனும் தலைவியும் தனித்துக் கூடுகின்ற காலத்துத் தோன்றி, மன உணர்ச்சியால் நுகரப்படும் (அனுபவிக்கப்படும்) இன்பம், அக்கூட்டத்தின் பின்னர், அவ்வின்பம் இவ்வாறு இருந்தது எனச் சொல்லால் விளக்கிக் கூற முடியாமல் எப்பொழுதும் உள்ளத்தே நிகழும் உணர்ச்சியால் நுகரப்படுவதால் ‘அகம்’ எனப்பட்டது. அகம் உள், உள்ளம், அதுபற்றி எழும் ஒழுக்கத்தை அகம் என்று கூறினர். எளிமையாகக் கூறினால் காதல் இன்பம் என்பதாகும். காதலின்பம் உணர்ச்சி வயத்தது; உணர்ச்சி உள்ளத்தைப் பற்றியது. பண்டைத் தமிழ்ப் புலவர்கள் இக்காதல் இன்பம் பற்றி உண்டாகும் உள்ள உணர்ச்சிகளைச் சொல்லோவியப்படுத்தி அச்சொல் ஓவியப் பாடல்களை அகப்பாடல்கள் என்று அழைத்தனர்.[19]

## இலக்கண நூல்கள் தரும் விளக்கம்

இறையனார் அகப்பொருள், தமிழ்நெறி விளக்கம், நம்பியகப்பொருள், களவியல் காரிகை, மாறன் அகப்பொருள் என்னும் ஐந்து நூல்கள் அகப்பொருள் இலக்கணத்தை மட்டும் கூறுகின்றன.

தொல்காப்பியம், வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் ஆகிய நூல்களில் பிற இலக்கணங்களோடு அகப்பொருள் இலக்கணமும் இடம்பெறுவதனைக் காணமுடிகின்றது.

## தொல்காப்பியம்

ஒத்த அன்புடைய தலைவனும், தலைவியும் இணைந்து வாழுகின்ற அகவாழ்வினைத் தொல்காப்பியர்,

**ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோனாயினும் கடிவரையின்றே.**

**(தொல்.பொருள்.களவு.நூ. 2)**

என்று கூறுகின்றார்.

**இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**

**காமக் கூட்டங் காணுங் காலை**

**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**

**துறையமை நல்யாழத் துணைமையோர் இயல்பே.**

**(தொல்.பொருள்.களவு.நூ.1)**

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து திணைகளிலும் காமப்புணர்ச்சி நிகழும்போது, மறையோரால் வரையறை செய்யப்பட்ட எண்வகை மணத்துள் அமையும். அது கந்தருவரது தன்மையை ஒக்கும் என்று தொல்காப்பியம் கூறுகின்றது.

அகப்பாடல்களில் வரும் தலைவன் தலைவி ஆகியோரின் பெயரைச் சுட்டி வழங்கக்கூடாது என்று தொல்காப்பியம் கூறுகின்றது. இதனை,

**மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்**

**சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்.**

**(தொல்.பொருள்.அகத்.நூ.57)**

என்ற நூற்பா வழி அறியமுடிகின்றது.

**இறையனார் அகப்பொருள்**

**முற்படப் புணராச் சொல்லின் மையிற்**

**கற்பெனப்படுவது களவின் வழித்தே.**

**(இறைய. அகப்.நூ.15)**

என்றும்,

**அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது**

**அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்**

**கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்.**

**(இறைய. அகப்.நூ.1)**

என்றும்,

**களவினுள் நவிர்ச்சி வரைவின் நீட்டம்**

**திங்கள் இரண்டின் அகமென மொழிப. (இறைய. அகப்.நூ.32)**

என்றும்,

**திணையே கைகோள் கூற்றே கேட்போர்**

**இடனோ கால எச்சம் மெய்ப்பாடு**

**பயனே கோளென் றாங்கப் பத்தே**

**அகனைந் திணையும் உரைத்தல் ஆறே. (இறைய. அகப்.நூ.9)**

என்றும் களவு, அகம் என்பதற்கு விளக்கமளிக்கிறது.

## தமிழ்நெறி விளக்கம்

பொருளை அகம், புறம், அகப்புறம் என மூவகைப்படுத்துகிறது தமிழ்நெறி விளக்கம்.

**அகத்ததும் புறத்தது மாயிரு பகுதியின்**

**மிகுத்தது மாகி விரிந்தது பொருளே. (தமிழ்.விளக். நூ.1)**

களவியல், கற்பியல் என அகப்பொருளை இருவகையாகப் பிரித்துக் கூறுகின்றது.

**முந்திய நூலோர் மொழிந்தவெண் மணத்திலும்**

**கந்தருவ முறைமை களவெனப் படுமே. (தமிழ்.விளக். நூ.14)**

களவினைக் கந்தவர்வ மணத்தோடு ஒத்தது என்று தொல்காப்பியம் கூறுவதனைப் போன்று இதுவும் கூறுகின்றது.

## வீரசோழியம்

**முல்லை குறிஞ்சி மருதத் தொடுபாலை நெய்தலைந்துஞ்**

**சொல்லு மகமா மதனுக் குரைதொகு சட்டகமோ**

**எல்லை நிகழு மிருபதொ டேமுள: ஏனையவற்(று)**

**ஒல்லை நிகழு முரையு மறிந்து கொள் ஒண்ணுதலே.**

**(வீரசோழியம். நூ.3: 4)**

அகப்பொருளுக்கு அடையாளமாக ஐந்து நிலத்தை மட்டும் கூறுகிறது. ஒவ்வொரு திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள் ஆகிய மூன்றையும் தனித்தனியே விளக்குகிறது. கைகோள், துறை, கூற்று போன்ற அகப்பொருள் செய்திகள் இதில் இடம் பெறவில்லை.

**நம்பியகப்பொருள்**

**ஐந்திணையுடையது அன்புடைக்காமம். (நம்பிய. நூ.1: 4)**

என்றும்,

**கைக்கிளை யுடைய தொருதலைக் காமம். (நம்பிய. நூ.1: 3)**

என்றும்,

**பெருந்திணை என்பது பொருந்தாக் காமம். (நம்பிய. நூ.1: 5)**

என்றும் ஏழுதிணைகள் பற்றி கூறுகிறது.

**அளவில் இன்பத் தைந்திணை மருங்கிற்**

**களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும்.**

**(நம்பிய. நூ.1: 26)**

என்று அன்பின் ஐந்திணைக்குரிய கைக்கோளைப் பற்றி கூறுகின்றது.

**திணையே கைகோள் கூற்றே கேட்போர்**

**இடனே காலம் பயனே முன்னம்**

**மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென்று**

**அப்பால் ஆறிரண் டகப்பாட் டுறுப்பே. (நம்பிய. நூ.211)**

ஏழுதிணைக்குரிய அகப்பாட்டுறுப்புகளை திணை முதலாக துறை ஈறாக பன்னிரெண்டை கூறுகின்றது.

**பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவனெனப்**

**பாட்டினுட் பாடப் படுவோர் இருவர். (நம்பிய. நூ.245)**

இலக்கண நூல்கள் அகப்பாட்டினுள் ஒரு தலைவனைக் கூற நம்பியகப்பொருளானது பாட்டுடைத்தலைவன், கிளவித்தலைவன் என இருவரைப் பற்றி கூறுகின்றது.

**இலக்கண விளக்கம்**

**அகமெனப் படுவது வகையொரு மூன்றனுள்**

**இன்ப மென்று இயல்பிற் றாகி**

**அகத்துநிக ழ்ஒழுக்க மாதல் வேண்டும். (இலக்க.விளக். நூ.3)**

என்று அகப்பொருள் மரபினைப் பற்றி இலக்கண விளக்கம் கூறுகின்றது.

**தொன்னூல் விளக்கம்**

**அகத்திணை யியல்பே யறைபடும் வகையே**

**பொதுச்சிறப் புவமை புறநிலை யெதிர்நிலை**

**கருவி காரியங் காரக முன்னவை**

**பின்னவை யெனவாம் பிரிவீராறே. (தொன்.விளக். நூ.3: 2)**

என்று அகத்திணையின் இயல்பினைப் பற்றிக் கூறுகின்றது.

**அகப்பொருள் புறப்பொருளாம் இரண்டு அவற்றுள்**

**பெருகிய கைக்கிளை பெருந்திணைக் குறிஞ்சி**

**ஆதி ஐந்திணை என அகத்திணை ஏழே**

**கைகோள் இரண்டாம் களவு கற்பே**

**வதுவை வாழ்க்கை வரைவு அகப்பொருளே.**

**(தொன்.விளக். நூ.99)**

என்று தொல்காப்பியர் கூறிய மரபிலேயே அகப்பொருள் பற்றி கூறுகின்றது.

**முத்துவீரியம்**

**அகப்பொருள் கைக்கிளை யைந்திணை பெருந்திணை**

**எனவெழு வகைப்படு மென்மனார் புலவர்.**

**(முத்துவீரியம். நூ.770)**

திணைகளை களவிற்குரியது, கற்பிற்குரியது என்று இரண்டாகக் கூறுகின்றது. களவிற்குரிய திணையாகக் குறிஞ்சி, நெய்தலையும், கற்பிற்குரிய திணையாக மருதம், முல்லையையும் கூறுகின்றது.

**சுவாமிநாதம்**

அகத்திணையின் வகைகள், அவற்றிற்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள், ஐந்திணையின் வகை, அவற்றின் விளக்கம், திணை, கைக்கோள், கூற்று, கேட்போர், காலம், இடம், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பயன், பொருள், துறை போன்ற அகப்பாட்டுறுப்புகளைப் பற்றிக் கூறுகின்றது. இதனை,

**திணை குறிஞ்சி பாலை முல்லை மருதநெய்தல் ஐந்தாம்**

**செறியும் முதல்கரு உரி என்றவை மூன்று பொருளாந**

**துணைநிலமும் பொழுதும் முதற்பொருளாகும்; வரையே**

**சுரம்,காடு,வயல் திரைசேர் இடம்பத்து நிலமாம்**

**கனிபொழுது பெரும்பொழுது சிறுபொழுதாம், பெரிதே**

**கார் கூதிர் இரண்டுபனி இருவேனில் ஆறாம்**

**அனைமாலை யாமமே வைகறையே காலை**

**அழற்றியநண் பகல் எற்பாடு அறுவகைத்தாஞ் சிறதே.**

**(சுவாமிநா. நூ.72)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

## முதற், கரு, உரிப்பொருள்

சான்றோர்கள் அமைத்த நூல்களுள் சொல்லப்படும் முறைமைகள் மூன்றாக உள்ளன. அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் அவை சாற்றும் பொருள் சிறப்பும், அவற்றின் முறைமையும் இந்நூற்பாவில் அறியலாம் என்கிறார் தொல்காப்பியர். இதனை,

**முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நுவலுங் காலை முறைசிறந் தனவே**

**பாடலுள் பயின்றவை நாடுங்காலை. (தொல். அகத். 3)**

என்ற நூற்பாவின் வழி அறியலாம்.

## முதற்பொருள்

**முதலெனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**

**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. (தொல். அகத். 4)**

நிலமும் பொழுதும்(காலம்) முதற்பொருள் எனப்படும். நிலம் ஐந்து வகைப்படும். காலம் இரண்டு வகைப்படும். பெரும்பொழுது, சிறுபொழுது ஆகும் என்கிறார் தொல்காப்பியர்.

## நிலம்

**மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே. (தொல். அகத். 5)**

இவ்வாறு நிலத்தினை பற்றி தொல்காப்பியர் வரையறுத்துக் கூறுகின்றார். காலம், பொழுது இவ்விரண்டினைப் பற்றியும் அவர் கூறியுள்ளமையைக் காணமுடிகின்றது.

**கருப்பொருள்**

**தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**

**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**

**அவ்வகை பிறவும் கருவென மொழிப. (தொல். அகத். 20)**

**உரிப்பொருள்**

**புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**

**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேருங் காலை திணைக்குரிப் பொருளே. (தொல். அகத். 16)**

தொல்காப்பியம் கூறுகின்றது.

**சங்க இலக்கியம் குறிஞ்சித்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

முருகனது அல்லது தலைவியின் தந்தையது மலையின் பக்கமலையில் மலர்ந்த குவளை மலர்கள் பசிய சுனையில் பூத்துக்கிடக்கின்றன என்பதன்வழி குறிஞ்சி நிலத்தின் அழகினை,

**குன்ற நாடன் குன்றத்துக் கவாஅன்**

**பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும். (ஐங்.199: 1-2)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

குன்றம், கல், மலை, வரை, சாரல், சிலம்பு ஆகிய சொற்கள் குறிஞ்சி நிலப்பகுதியை குறிக்கின்றவை என்பதனை,

**கல்கெழு நாடன் கேண்மை. (நற். 206: 10)**

**சாந்த நறும் புகை**

**தேங்கமழ் சிலம்பின் வரையகம் கமழும். (ஐங். 253: 1-2)**

என்ற பாடலின் வழி உணரலாம்.

**பொழுது**

கூதிர்க்காலத்துப் பெரிய குளிர்ந்த காற்று என்ற வரிகளின் மூலம் பெரும்பொழுதாகிய பனிக்காலம் கூறப்படுவதனை,

**கூதிர்ப்**

**பெருந்தண் வாடையின் முந்து வந்தனனே. (ஐங். 252: 4-5)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

இருளிடையானது இருண்டு கிடக்கின்ற இடத்தினைக் குறிக்கின்றது. இதனை,

**இருளிடை என்னாய்நீ இரவு அஞ்சாய். (கலித். 38: 14)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

நடுநாட் கங்குல் என்பது நள்ளிரவினைக் குறிக்கின்றது. இதனை,

**நடுநாட் கங்குலும் வருதி. (ஐங். 296: 3)**

என்ற பாடல் வரிகளின் வழி தெளியலாம்.

**கருப்பொருள்**

**தெய்வம்**

முருகனை வழிபட்டு மகிழ்ந்த அறிவு மிகுந்த வேலனே! என்று முருகப்பெருமானைக் கூறுகின்றது. இதனை,

**முருகயர்ந்து உவந்த முதுவாய் வேல. (குறுந்: 362: 1)**

என்ற பாடல் வரியின் மூலம் அறியலாம்.

**மக்கள்**

சிலம்பன், குறமகள் என்று குறிஞ்சி நில மக்களைப் பற்றி கூறுவதனை,

**விண்டோய் மாமலைச் சிலம்பன். (குறுந்: 362: 6)**

**பின்னிரும் கூந்தல் நன்னுதல் குறமகள். (ஐங். 285: 1)**

என்ற இப்பாடல் வரிகளில் அறியலாம்.

**பறவை**

வெள்ளம் பெருக்கெடுக்கும் யுக முடிவான இறுதிக் காலத்தினையும் தாண்டி, கிளியே நீ பல்லாண்டு வாழ்க! என்று கூறுவதனை,

**வெள்ள வரம்பின் ஊழி போகியும்**

**கிள்ளை வாழிய பலவே! (ஐங். 281: 1-2)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியமுடிகின்றது.

மயில்கள் அகவ, பெரிய வண்டுகள் ஒலிக்கின்றது என்பதனை,

**மயில்கள் ஆலப் பெருந்தேன் இமிர. (ஐங். 292: 1)**

என்ற பாடல் வரியில் காணலாம்.

**விலங்கு**

இனத்தோடு சேராத ஆண்யானையின் மதம் அழியுமாறு அதனை வெள்ளம் மோதி இழுக்கின்றது. இதனை,

**ஆகொள் வயப்புலி ஆகும் அ∴து. (அக: 52: 6)**

**மராஅ யானை மதம்தப ஒற்றி (அக. 18: 4)**

என்ற பாடல் அடிகளால் புலனாகின்றது.

குறிஞ்சிக்குரிய கருப்பொருள்கள் உறுபுலி, வேங்கை, மதயானை. இதனை,

**உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையைக்**
**கறுவுகொண்டு அதன்முதல் குத்திய மதயானை**
**நீடுஇரு விடரகம் சிலம்பக் கூய்தன்**
**கோடு புயக்கல்லாது உழக்கும் நாடகேள். (கலித். 2: 6-9)**

என்ற பாடல் வழி அறியலாம்.

**நுண்பொறி மான்செவி போல வெதிர்முளை (கலித். 43: 16)**

**கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து. (கலித். 40: 15)**

என்னும் அடிகளில் மான், கடுவன் ஆகியன பற்றிக் கூறப்படுகின்றன.

**உரிப்பொருள்**

**கேளிர் வாழியோ கேளிர் நாளும்என்**
**நெஞ்சு பிணிக் கொண்ட அம்சில் ஓதில்**
**பெருந்தோட் குறுமகள் சிறுமெல் பேகம்**
**ஒருநாள் புணரப் புணரின்**
**அரைநாள் வாழ்க்கையும் வேண்டலள் யானே. (குறுந். 280)**

என்ற வரிகளில் தலைவன் தலைவியைப் புணராததால் அரைநாள் வாழ்க்கையும் வேண்டேன் என்று கூறுவதனைக் காணமுடிகின்றது.

இத்தகைய குறிஞ்சித்திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பற்றிப் பெருங்கதையில் கொங்குவேளிர் கூறியுள்ளார் என்பதனை பின்வறுமாறு காணலாம்.

**பெருங்கதை குறிஞ்சித்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

**கவரி மா னேறு கண்படை கொள்ளும்**
**தகரங் கவினிய தண்வரைச் சாரல்.** (1:50: 20-21)

கவரிமான்கள் துயில் கொள்ளா நின்ற குளிர்ந்த மலைகளின் சாரல்.

**பொழுது**

**மங்குல் வானத்து மதிநிலா மழுங்கக்**
**கங்குல் யாமத்துக் கடையற வெழுந்த**
**கதிரோன் போல.** (1:50: 55-57)

வானத்தில் திங்கள் மண்டிலத்தினது நிலவின் ஒளியானது மழுங்கிப்போகும்படி இருளையுடைய இரவின் கடையாமத்திறுதியில் எழுந்த பல ஞாயிற்று மண்டிலங்கள் போன்று தோன்றியது. இதில் சிறுபொழுதான யாமத்தைக் கூறுகின்றது.

**கருப்பொருள்**

**மக்கள்**

**பருவி வித்திய பைந்தாட் புனந்தோ**
**றீரமில் குறவ ரிதண் மிசைப் பொத்திய.** (1:50: 16-17)
**மலைவாழ் குறவர் மகளிர் குடையும்.** (1:50: 39)

என்ற வரிகளில் மலைவாழ் மக்களான குறவர், குறமகளிர் பற்றிக் காணப்படுகின்றது.

**மரம், பூ**

நறைக்கொடியும் நாகமரமும் மணமுறைகின்ற வெட்டிவேரும் விலாமிச்சைவேரும் ஆகிய இருவேரியும், வருக்கைப் பலாமரமும், மாமரமும், சுரபுன்னை மரமும், வாழையும், அருவழியின் கண் வளர்ந்துள்ள ஆசினிப் பலாவும், பெருஞ்செண்பக மரமும், அசோக மரமும், பிரம்பும், கரிய கொம்புகளையுடைய குறிஞ்சி மரமும், திருமணநாள் உணர்த்தும் வேங்கை மரமும், ஆச்சா மரமும்,

சூரற்கொடியும், வள்ளிக்கொடியும், மரலும், மிகவும் வெண்மையான வசம்பும், பெரிய இதழையுடைய காந்தளும், பால் போலும் வெண்மையுடைய கோட்ட மரமும், பனிச்சை மரமும், திலக மரமும், வேய் மூங்கிலும், வெதிர் மூங்கிலும், வெட்சியும், காட்டு மல்லிகையும், அழகிய மலரையுடைய தில்லை மரமும், அழகிய செங்கருங்காலி மரமும், ஆர மரமும், சந்தன மரமும், அகின் மரமும், பச்சிலை மரமும், எழுச்சியையுடைய இலவங்கமும், ஏலமும், இருப்பை மரமும் என்று மரங்கள், பூக்களைப் பற்றி கூறுகின்றது. இதனை,

**நறையு நாகமு முறையிரு வேரியும்**
**வருக்கையு மாவும் வழையும் வாழையும்**
**அருப்பிடை நிவந்த வாசினி மரமும்**
**பெருஞ்செண் பகமும் பிண்டியும் பிரம்பும்**
**கருங்கோற் குறிஞ்சியுங் கடிநாள் வேங்கையும்**
**சுள்ளியுஞ் சூரலும் வள்ளியு மரலும்**
**வால்வெள் வசம்பும் வள்ளிதழ்க் காந்தளும்**
**பால்வெண் கோட்டமும் பனிச்சையுந் திலகமும்**
**வேயும் வெதிரமும் வெட்சியுங் குளவியும்**
**ஆய்பூந் தில்லையு மணிமா ரோடமும்**
**ஆரமுஞ் சந்த மகிலுந் தமாலமும்**
**ஏரிய வங்கமு மேலமு மிருப்பையும்.** **(1:50: 22-33)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

**உரிப்பொருள்**

உதயணன் வாசவதத்தையோடு இன்பம் கூடி இருத்தலை,

**போகம் புணர்ந்த பொன்னகர் அவ்வயின்**
**வேகத் தானை வேந்தன் மகளோ**
**வேடகச் செங்கோல் ஏயர் பெருமகன்**
**போகங் கழுமிப் புணர்ந்து விளையாட** **(2:8: 1-4)**

என்ற பாடலடிகள் வழி அறியமுடிகின்றது.

**சங்க இலக்கியம் முல்லைத்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

கானம், காடு போன்ற சொற்கள் முல்லை நிலத்தின் தன்மையைச் சுட்டிக்காட்டுகின்றன. இதனை,

**புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை. (கலித். 4: 6)**

**வேனில் உழந்த வறிதுயங் கோய்களிறு**
**வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாம்அம்**
**கானம். (கலித். 7: 1-3)**

**அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்**
**கடியவே கனங்குழாஅய் காடென்றார். (கலித். 11: 6-7)**

**கானம் கடத்திர் எனக்கேட்பின் யானொன். (கலித். 7: 3)**

**கண்ணீர் நனைக்கும் கடுமைய காடென்றால். (கலித். 6: 6)**

என்ற பாடலடிகள் வழி தெளியலாம்.

புறவு என்ற சொல் முல்லை நிலத்தினைக் குறிப்பிடுவதனை,

**புறவு அணிநாடன் புதல்வன் தாயே. (ஐங். 405: 4)**

**போதுஆர் புறவின் நாடு கிழவோன. (ஐங். 406: 4)**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

**பொழுது**

**கருவி வானம் கார்சிறந் தார்ப்ப**
**பருவம் செய்தன பைங்கொடி முல்லை. (ஐங். 476)**

**ஆர்குரல் எழிலி அழிதுளி சிதறிக்**
**கார் தொடங்கின்றால். (ஐங். 411)**

**கார் தொடங்கின்றால் பொழுதே. (ஐங். 413)**

இப்பாடல் வரிகளில் முல்லைத்திணைக்குரிய பெரும்பொழுது கார்காலம் பற்றிக் கூறப்படுகின்றது.

கருப்பொருள்

**மக்கள்**

**பல்ஆன் கோவலர் படலைக் கூட்டும். (ஐங். 476)**

என்ற பாடல் வரிகள் முல்லை நில மக்களைப் பற்றிக் கூறுகின்றது.

**விலங்கு**

**மறிஇடைப் படுத்த மான்பிணை போல. (ஐங். 401)**

**நறும்பூம் புறவின் ஒடுங்கு முயல் இரியும். (ஐங். 421)**

இப்பாடல் வரிகளில் முல்லை நில விலங்கான மான், முயல் பற்றிக் கூறுகின்றது.

**மரம்**

**காயா கொன்றை. (ஐங். 412)**

**பொன்என மலர்ந்த கொன்றை. (ஐங். 420)**

இப்பாடல் வரிகள் காயா, கொன்றை மரங்களைப் பற்றி கூறுகின்றது.

**பூ**

முல்லை, தளவ மலர், கொன்றை, காயா, வெட்சி, பிடவு, தளவு, குல்லை, கோடல், பாங்கர் போன்ற முல்லை நிலப் பூக்களை,

**நெடுங் கொடி முல்லையொடு தளவமலர் உதிர.**

**(ஐங். 422)**

**வான்பிசிர்க் கருவியின் பிடவு முகை தகைய. (ஐங். 461)**

**மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க் காயாவும்**
**புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்**
**குல்லையுங் குருத்துங் கோடலும் பாங்கருங்**
**கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்.**

**(கலித். 103: 1-4)**

**காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை. (கலித். 103: 52)**

இப்பாடல் வரிகளில் காணமுடிகின்றது.

**மயில்**

**ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்கு சினைப்**

**பீலி மஞ்ஞை பெடையொடு ஆடும்.** **(நற். 288: 2-3)**

மயில் தன் பெடையுடன் வெயிலில் காய்வதை இவ்வடிகள் கூறுகின்றன.

**தொழில்**

**நிறை மேய்த்தலை,**

**தாம்புஅசை குழவி விளங்கு கரைமடிய**

**கனை அல்ஆம் குரலகாற்பரி பயிற்றி**

**படகமணி மிடற்ற புயநிரை ஆயம்.** **(அக. 54: 7-9)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகிறது.

**உரிப்பொருள்**

தலைவி தலைவனுடன் இருந்தலே முல்லைத்திணைக்குரிய உரிப்பொருளாகும். தயிரைப் பிசைந்த காந்தள் மலரைப் போன்ற மெல்லியவிரலை துடைத்துக் கொண்ட ஆடையை துவையாமல் உடுத்திக் கொண்டு குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்களில் தாளிப்பினது புகை மணப்ப தானே துழாவிச் சமைத்த இனிய புளிப்பையுடைய குழம்பை தன் தலைவன் இனிதென்று உண்பதனால் தலைவியின் முகமானது நுண்ணிதாக மகிந்தது. இதனை,

**முரிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ**

**குவளை உண்கண் குய்ம்புகை கழுமத்**

**தான் சூழ்ந்திட்ட தீம்புளிப்பாகர்**

**இனிது எனக் கணவன் உண்டலின்.** **(குறுந். 167: 1-5)**

என்ற பாடலின் வழி இல்லறத்தின் சிறப்புக் கூறப்படுகின்றது.

இத்தகைய முல்லைத்திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பற்றிப் பெருங்கதையில் கொங்குவேளிர் கூறியுள்ளார் என்பதனை பின்வறுமாறு காணலாம்.

**பெருங்கதை முல்லைத்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

திருமேனி வாடிக்கிடந்த நிலமகளை மங்கல நீராட்டி முல்லையாகிய அந்நிலக்கிழத்தி தனது தண்ணளியைப் பெற்றது என்பதனை,

**மேனிவாடிய**

**மண்ணக மடந்தையை மண்ணுநீ ராட்டி**

**முல்லைக் கிழத்தி முன்னரு ளெதிரப். (1:49: 88-90)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றது.

**நகைப்பூம் புறவிற். (1:49: 117)**

புறவு என்பது முல்லை நிலத்தினைக் குறிப்பிடுகின்றது.

**முல்லைப் பெருந்திணை. (1:49: 125)**

முல்லை என்னும் அப்பெரும் நிலத்தினைப் பற்றி கூறுகின்றது.

**பொழுது**

கடல்சூழ்ந்த இவ்வுலகில் வாழுகின்ற உயிரினங்கள் அனைத்தும் மகிழும்படி கார்க்காலப் பருவமானது வந்தது என்பதனை,

**முற்றுநீர் வையக முழுது முவப்பக்**

**கருவி மாமழை பருவமொ டெதிரப்**

**பரவைப் பௌவம் பருகுபு நிமிர்ந்து**

**கொண்மூ விதானந் தண்ணிதிற் கோலித்**

**திருவிற் றாம முருவுபட நாற்றி**

**விடுசுடர் மின்னொளி விளக்க மாட்டி. (1:49: 78-83)**

என்ற பாடலின் வழி கொங்குவேளிர் கூறியுள்ளார்.

**இருள்வயின் வந்த வின்னுயிர்க் காதலன். (1:49: 93)**

இப்பாடலில் இருள் என்பதன் வழி இருள் மயங்கும் மாலைப்பொழுது கூறுவதனை அறியலாம்.

## கருப்பொருள்

### மக்கள்

கொல்லையில் வாழும் பெரிய குடிகளாகிய ஆயர்கள் குழுமிய முல்லை நிலம் என்று கோவலர் வாழ்வினைக் கூறுகின்றது. இதனை,

**கொல்லைப் பெருங்குடிக் கோவலர் குழிஇய. (1:49: 124)**

என்ற பாடல் வரியின் மூலம் தெளியலாம்.

### விலங்கு

**வரையி னருகா மரையா மடப்பிணை. (1:49: 111)**

மான்களைப் பற்றி இதில் கூறப்படுகின்றது.

### மரம், பூ

குராமரமும், தளவும் குருந்தமரமும் பாம்பின் எயிறு போன்று மலந்துள்ளது என்பதனை,

**குரவுந் தளவுங் குருந்துங் கோடலும்**
**அரவுகொண் டரும்ப. (1:49: 98-99)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

### உணவு

கதிரையுடைய தினையும், நுனிநீண்ட சோளமும், கவர்ந்த கதிரையுடைய வரகும், கார்ப்பருவத்தே தழைக்கும் எள்ளும், சிவந்த மலரையுடைய அவரையும், காய் மிகுந்த குலைகளையுடைய பயறும், உழுந்தும், கொள்ளும், கொழுந்து மிக்குத் தோன்றும் கடலையும், தோரையும், துவரையும் என்று உணவு பொருள்களைப் பற்றிக் கூறுவதனை,

**இறங்குகுர லிறடி யிறுங்குகடை நீடிக்**
**கவைக்கதிர் வரகும் கார்பயி லெள்ளும்**
**புகர்ப்பூ வவரையும் பொங்குகுலைப் பயறும்**
**உழுந்துங் கொள்ளுங் கொழுந்துபடு சணாயும்**
**தோரையுந் துவரையு மாயவும் பிறவும். (1:49: 104-108)**

என்ற பாடல் வரிகளின் வழி அறியலாம்.

**தொழில்**

கூட்டமாக ஆடுகள் இனத்தோடு விளையாடி அவர்கள் ஆவினம் மேய்தனர் என்பதனை,

**புல்லுத ளினத்தொடு புகன்றுவிளை யாடும். (1:49: 119)**

**பல்லாப் படுநிரைப் பயம்படு வாழ்க்கை. (1:49: 123)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

**உரிப்பொருள்**

பொருள் தேடற்பொருட்டுத் தம்மைப் பிரிந்து போன தத்தம் கணவன்மார் வருகையை ஆவலோடு எதிர்ப்பார்த்திருக்கின்ற கற்புடைக் குலமகளிரைப் பற்றி,

**பொருள்வயிற் பிரிவோர் வரவெதி ரேற்கும்**

**கற்புடை மாதரிற் கதுமென வுரறி. (1:49: 96-97)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

பொருளீட்ட சென்ற தம் கணவன் பொருளீட்டிக்கொண்டு இருள் மயங்கும் மாலைப்பொழுதில் மீண்டு வந்தவரை தலைவி தழுவி இருப்பதனை,

**பொருள்வயிற் பிரிந்து பொலங்கல வெறுக்கையொ**

**டிருள்வயின் வந்த வின்னுயிர்க் காதலன்**

**மார்பக மணந்த நேரிழை மடந்தையர்**

**மருங்குல். (1:49: 92-95)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**சங்க இலக்கியம் மருதத்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

**வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்க்கொண்ட (கலித்.66: 1)**

என்னும் அடிகளில் 'வயல்' என்பதனையும்

**பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர. (கலித். 66:8)**

**வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையும ்.**

**(கலித். 71:3)**

என்னும் அடிகளில் 'பொய்கை' என்பதனையும்

**வாழி ஆதன் வாழி யவினி**

**விளைக வயலே.** **(ஐங். 2: 1-2)**

என்ற அடிகளில் ‘வயல்’ என்பதனையும்

**பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்**

**கழனி ஊரன்.** **(ஐங். 4: 4-5)**

என்ற அடிகளில் ‘கழனி’ என்பதனையும் கூறுகின்றது.

### பொழுது

**வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை.** **(கலித்: 66: 12)**

**சிறுகாலை யிற்கடை வந்து.** **(கலித். 97: 3)**

**வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே.** **(குறுந். 157: 4)**

மருதத்தின் சிறுபொழுதாகிய வைகறைப் பொழுதினை இதில் காணலாம்.

### கருப்பொருள்

#### தெய்வம்

**இந்திர விழவில் பூவின் அன்ன.** **(ஐங். 62: 1)**

#### மக்கள்

**எவ்வூர் நின்றன்று மகிழ்ந நின்தேரே!** **(ஐங். 62: 4)**

**கலிமகிழ் ஊரன்** **(அக. 146: 5)**

**வித்திய உழவர் நெல்லொடு பெயரும்** **(ஐங். 3:4)**

#### பறவை

**கயலார் நாரை போர்வில் சேக்கும்.** **(ஐங். 9:4)**

**நீருறை கோழி நீலச் சேவல்.** **(ஐங். 51:1)**

#### விலங்கு

**கருங்கோட்டு எருமை.** **(ஐங். 92:1)**

#### ஊர்

**ஆதி அருமன் மூதூர் அன்ன.** **(குறுந். 293: 4)**

**நீர்**

**ஊர்க்கும் அணித்தே பொய்கை. (குறுந். 113:1)**

**பூ**

**தாமரைக்கு இறைஞ்சும் தண்துறை ஊரன். (நற்றி. 300:4)**

**மரம்**

**மருது உயர்ந்து ஓங்கிய விரிபூம் பெருந்துறை. (ஐங். 33:2)**

**உணவு**

**செந்நெல் அம் செறுவிற் கதிர்கொண்டு. (ஐங். 27:1)**

இப்பாடல்களின் மூலம் மருதத்திணையின் கருப்பொருள்களை அறியமுடிகின்றது.

**உரிப்பொருள்**

**நினக்கே அன்று அ்.்.து எமக்குமார் இனிதே**
**நின்மார்பு நயந்த நன்றுதல் அரிவை**
**வேண்டிய குறிப்பினை ஆகி**
**ஈண்டு நீஅருளது ஆண்டு உறை தல்லே. (ஐங். 46)**

என்ற இப்பாடலில் ஊடல் செய்தியைக் காணமுடிகின்றது.

இத்தகைய மருதத்திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பற்றிப் பெருங்கதையில் கொங்குவேளிர் கூறியுள்ளார் என்பதனை பின்வறுமாறு காணலாம்.

**பெருங்கதை மருதத்திணை (முதல், கரு, உரி)**

**முதற்பொருள்**

**நிலம்**

**அம்கண் அகல் வயல் ஆர்ப்பு இசை வெரீஇய. (1:48: 141)**

**மருதம் தழீஇய மல்லல் அம்பெரு வழி. (1:48: 170)**

மருத நிலம் பற்றி கூறுகின்றது.

**பொழுது**

இரவில் குவிந்திருந்த பூக்களானது, விடியலில் விரிந்த தோற்றம் தூங்கியிருந்த பொய்கை காலையில் கண்விழித்தது போன்றிருந்தது. இருளானது படிப்படியே வெளுத்தது என்ற செய்தியை,

**பூக்கண் மலர, புலம்பிய பொய்கை**
**பால்கேழ் அன்னமொடு, பல்புள் ஒலிப்ப**
**பரந்துகண் புதைஇய பாய்இருள் நீங்கி**
**புலா்ந்தது மாதோ.** (1:33: 210-213)

இப்பாடல் வரிகளில் அறியமுடிகின்றது.

### கருப்பொருள்

#### மக்கள்

**உழவா் ஒலியும்....** (1:48: 161)

**களைகளை கடைசியா்.** (1:48: 162)

**மடைவாய் திருத்தும் மள்ளா் சும்மையும்.** (1:48: 167)

உழவா், கடைசியா், மள்ளா் என்பது முல்லைத்திணைக்குரிய மக்களைக் குறிக்கிறது.

#### விலங்கு

**பைங்கண் எருமை படுகன்று ஓம்பிச்.** (1:48: 142)

எருமையினை குறிப்பிடுகின்றது.

#### பூ

**உழைக் கவின்று எழுந்த புழற்கால் தாமரைச்**
**செம்மலா் அங்கண்.** (1:48: 148-149)

தாமரை மலரினை கூறுகின்றது.

#### பறவை

**உருவ அன்னமொடு குருகு பாா்ப்பு எழப்.** (1:48: 144)

அன்னம், நாரை அவற்றின் குஞ்சுகளையும் கூறுகின்றது.

#### ஊா்

**வயற் புலச் சீறூா் அயற் புலத்து அணுகி.** (1:48: 169-170)

#### நீா்

**இடையறவு இன்றி இரையாறு தழீஇ.** (1:48: 168)

ஆற்றுநீா் இங்கு கூறப்படுகின்றது.

**உணவு**

**கால் தோய் கணைக் கதிர்ச்சால் தோய் சாலி**

**வரம்பு அணி கொண்ட நிரம்பு அணி நெடுஇடை. (1:48: 159-160)**

நெற்பயிர் கூறப்படுகின்றது.

**தொழில்**

**வளவயல் இடையிடைக் களை களை கடைசியர். (1:48: 162)**

வளமிக்க வயல்களில் இடைஇடையே முளைத்திருக்கும் களைகளைக் களையெடுக்கினற் உழத்தியர்கள் பற்றி கூறப்பட்டுள்ளது.

**உரிப்பொருள்**

ஒருத்தி தான் ஏறிய குங்கம மரத்தினது உயரிய கிளையைத் தன் தோழி அசைத்ததனால் நிலைக்கொள்ளாமல் பொய்கையில் ஆம்பல் அடர்ந்த நீர்ப்பரப்பிலே பாய்ந்தாள். தனது ஒப்பனை செய்யப்பட்ட சடையினில் உள்ள பொன்னரிமாலை தனது முதுகினில் புடைத்தனை அறியாமல், தான் ஊடியிருப்பதனை அறியாமல் தன் கணவன் தம் கூந்தலைப் பற்றுவதாக எண்ணி நீரால் கழுவப்பட்ட மையுண்ட தனது கடைக் கண்ணால் சினந்து நோக்கினாள். அங்கு அவன் இல்லாததனைக் கண்டு வருந்தினாள் அந்நங்கை. இதனை,

**ஞாழற் படு சினை தோழியர் நூக்க**

**ஆம்பற் பரப்பில் பாய்ந்த பைந்தொடி**

**செண்ணச் சிகழிகைப் பின்னிடை சேர்ந்த**

**பொன் அரி மாலைதன் புறம்பிடைப் புடைப்பச்**

**செற்றப் புதவு குத்தி வாங்கிக்**

**கொழுநன் கூந்தல் கொண்டெனக் கருதிக்**

**கழுநீர் உண்கண் கடையின் நோக்கி**

**அன்மையின் அழுங்கிய நன்னுதல் உவப்ப. (1:40: 37-44)**

என்ற பாடலின் வழி ஊடல் செய்தியை அறியலாம்.

கொங்குவேளிர் நருமதை ஆற்றினைப் பற்றி கூறியுள்ளார். அதில் ஞாழல் மரத்தையும், புன்னை மரத்தையும் கூறியுள்ளார். இதன்வழி நெய்தல் நிலத்தின் மரங்களை அவர் கூறியுள்ளமை அறியமுடிகின்றது.

**ஞாழலும் புன்னையும் வீழ.** (1:51: 41)

நெய்தல் நிலத்தின் கருப்பொருளான ஞாழல் மரத்தினையும், புன்னை மரத்தினைப் பற்றியும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

**மாக்கடல் வரைப்பின் மன்னுயிர்க் கியன்ற.** (1:51: 82)

பெரிய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் வாழும் உயிர்கள் என்று கூறுவதிலிருந்து ‘கடல்’ அதாவது நெய்தல் நிலமான கடலும் கடல் சார்ந்த நிலத்தினைப் பற்றி அவர் குறிப்பிட்டுள்ளமையை அறியமுடிகின்றது.

## சங்க இலக்கியம் பாலைத்திணை (முதல், கரு, உரி)

### முதற்பொருள்

#### நிலம்

**மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை**
**மணலிடு மருங்கின்.** (நற். 362: 7-8)

**மாரி வறப்ப**
**வரைஓங்கு அருஞ்சுரத்து.** (கலித். 6: 1-2)

பாலைநிலம் பற்றி இங்கு கூறப்படுகின்றது.

#### பொழுது

**வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்.** (கலித். 10: 4)

நண்பகல் பற்றி இவ்வடிகளில் கூறப்படுகின்றது.

**வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து.** (ஐங். 309: 1)

வேனிற் காலம் பற்றி இதில் கூறப்படுகின்றது.

### கருப்பொருள்

#### மரம்

**ஓமை குத்திய உயர்கோட்டு ஒருத்தல்.** (குறுந். 396:4)

**கான இருப்பை வேனல் வெண்பூ.** (குறுந். 329:1)

ஓமை, இருப்பை மரத்தினை இதன்வழி காணமுடிகின்றது.

#### தொழில்

**வம்ப மாக்கள் உருதிறம் நோக்கி**
**செங்கணை தொடுத்த செயிர்நோக்கு ஆடவர்**

**மடிவாய்த் தண்ணுமைத் தழங்குரல் கேட்ட. (நற்றி. 298: 1-3)**

பாலை நிலக் கள்வர் அவ்வழி செல்வோர் மீது அம்பு தொடுத்தலை இப்பாடல் கூறுகின்றது.

**விலங்கு**

**………..செந்நாய் ஏற்றை. (ஐங். 397:1)**

செந்நாய் என்னும் பாலை நிலத்து விலங்கினைப் பற்றி இப்பாடல் வரிகள் கூறுகின்றது.

**உரிப்பொருள்**

பெற்ற தாய் போல் பேணிக்காப்பவள் செவிலித்தாய். தலைவியைக் குழந்தைப் பருவம் முதல் பேணி வளர்ப்பவள் அவளே. தலைவி தலைவனுடன் உடன்போக்குச் செல்லும் காலத்தில் செவிலி மிகவும் வருந்திப் புலம்புவாள். தலைவியின் பிரிவினைத் தாங்கமுடியாமல் செவிலித்தாய் தன் ஆற்றாமையைத் தன் மகளாகிய தலைவியின் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். இதனை,

**கண்டிசின் மகளே! கெழீஇ இயைவெனை**

**……………..**

**துணிவுடை உள்ளமொடு துதைந்த முன்பின்**

**அறியாத் தேஎத்து அருஞ்சுரம் மிகுத்த**

**சிறியோற்கு ஒத்த என் பெருமடத் தகுவி**

**‘சிறப்பும் சீரும் இன்றி, சீறூர்**

**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**

**ஓர்ஆ யாத்த ஒரு தூண் முன்றில்**

**ஏதில் வறுமனைச் சிலம்பு உடன்கழீஇ**

**மேயினள்கொல்?’ என நோவல் யானே. (அக. 369:1, 19-26)**

என்ற பாடலின்வழி செலிவித்தாய் தலைவி மீது கொண்ட பாசமும், உறவும் நன்கு வெளிப்படுகின்றது.

இத்தகைய பாலைத்திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றை பெருங்கதையிலும் கொங்குவேளிர் கூறியுள்ளார் என்பதனை பின்வருமாறு காணலாம்.

## பெருங்கதை பாலைத்திணை (முதல், கரு, உரி)

### முதற்பொருள்

### நிலம்

**சுரமுதல் அடைந்த சூழ் அகன் புரிசைப்**

**பாழ்நில வாழ்நர்.** (1:52: 7-8)

**நிரம்பா நிலனும்.** (1:52: 31)

**பாலை தழீஇய பயன்அறு பெருவழி.** (1:52: 80)

பாலை நிலப்பகுதியினை இதன்வழி அறியலாம்.

### கருப்பொருள்

#### மரம்

**ஓமையும் ஒழிஞ்சிலும் உலவையும் உகாயும்** (1:52: 37)

**செந்தளிர் இருப்பைப் பைந்துணர் வான்பூத்.** (1:52: 70)

இதில் ஓமை, உழிஞ்சி இருப்பை ஆகிய பாலைநில கருப்பொருளான மரங்கள் காணப்படுகின்றன.

#### விலங்கு

**கயந்தலை தழீஇய கறைஅடி இரும்பிடி.** (1:52: 64)

**வேட்டச்செந் நாய் வேண்டாது ஒழித்த.** (1:52: 75)

இதில் செந்நாயும், யானையினையும் காணமுடிகின்றது.

#### ஊர்

**தேனுடை வரையுங் கானகக் குறும்பும்.** (1:46: 273)

குறும்பு என்று பாலைநிலப்பகுதியினைக் காணலாம்.

#### நீர்

**வறுஞ்சுனைப் பரவையும்.** (1:52: 33)

**உவலைக் கேணி அவல் அடுத்து உலாவவும் .** (1:52: 69)

நிரற்ற சுனை, நீரில்லா கேணி இவற்றினை காணமுடிகின்றது.

#### தொழில்

**வில்ஏர் உழவர் செல்சாத்து எறிந்துழி.** (1:52: 26)

பாலை நிலத்து மறவர்கள் அவ்வழியே செல்லுகின்ற வணிகர் கூட்டத்தை அலைத்துக் கொள்ளையிட்டனர். இதன்வழி அவர்களின் தொழிலான வழிப்பறியைக் காணமுடிகின்றது.

## உரிப்பொருள்

**அம்பொன் வள்ளத் தமிழ்து பொழி யடிசில்**
**கொம்பி னொல்கிக் குறிப்பிற் கொள்ளாய்**
**செம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்ப**
**மணிநில மருங்கிற் பந்தொடு மறலிநின்**
**அணிவளைப் பணைத்தோ ளசைய வாற்றாய்**
**இன்றீங் கிளவி யொன்றிரண்டு மிழற்றிப்**
**பண்சுவைத் தொழிந்து பாலி றோன்முலை**
**ஒண்முக விரலிற் கண்முக ஞெமிடி**
**………….**
**காதற் காளை கானத் தொய்ப்பப்**
**போதற் கண்ணே புரிந்தனை யோவெனச்**
**செவிலித் தாய ரவலித் தழவும்.** (1:46: 294-306)

உடன்போக்கு சென்ற வாசவதத்தையை எண்ணி அவளது செவிலித்தாய் புலம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

அடுத்து, அகப்பொருள் கூறுகளுள் களவின்கண் நிகழ்வனவாகிய செயல்களைச் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளது போன்றே, பெருங்கதையிலும் காணமுடிகின்றது. அவற்றை இனிவரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

## இடந்தலைப்பாடு

தலைவனும் தலைவியும் முதல்நாள் கூடிய இடத்தில் மறுநாளும் எதிர்ப்படுதல் இடந்தலைப்பாடாகும்.

தலைவன் இடந்தலைப்பாட்டின் போது தலைவியது நிலைமையைக் கண்டு சொல்லியதனை,

**இலங்கு வளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி,**
**முகம் புதை கதுப்பினள், இறைஞ்சி நின்றோளே**

**புலம்பு கொள் மாலை மறைய**

**நலம் கேழ் ஆகம் நல்குவள் எனக்கே.** **(ஐங். 197)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இரண்டாம் கூட்டத்து எதிர்ச்சியில் தலைவன் சொல்லியதனை,

**சொல்லின் சொல் எதிர்கொள்ளாய், யாழ நின்**

**திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமென;**

**காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ?**

**கோடுங் கேழ் இரும் புறம் நடுங்கக் குத்திப்**

**புலி விளையாடிய புலவு நாறு வேழத்தின்**

**தலை மருப்பு ஏய்ப்ப, கடை மணி சிவந்த நின்**

**கண்ணே கதவ? அல்ல; நண்ணார்**

**அரண் தலை மதிலராகவும், முரசு கொண்டு,**

**ஓம்பு அரண் கடந்த அடு போர்ச் செழியன்**

**பெரும் பெயர்க் கூடல் அன்னநின்**

**கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே.** **(நற்றி. 39)**

என்னும் பாடலின் வழி அறியமுடிகின்றது.

இரண்டாம் கூட்டத்தின் போது தலைவியிடம் தலைவன் கூறியதாக,

**ஒள்இழை மகளிரொடு ஓரையும் ஆடாய்**

**வள்இதழ் நெய்தல் தொடலையும் புனையாய்**

**விரி பூங் கானல் ஒரு சிறை நின்றோய்**

**யாரையோ நிற் தொழுதனெம் வினவுதும்**

**கண்டோர் தண்டா நலத்தை தெண் திரைப்**

**பெருங் கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ**

**இருங் கழி மருங்கு நிலைபெற்றனையோ**

**சொல் இனி மடந்தை என்றனென் அதன் எதிர்**

**முள் எயிற்று முறுவல் திறந்தன**

**பல் இதழ் உண்கணும் பரந்தவால் பனியே.** **(நற்றி. 155)**

இப்பாடல் அமைந்துள்ளது.

இதனைப் பெருங்கதை,

**கோதை யாயம் பரவ வேறித்**
**திருமலர் வீதி போதந் தெதிர்மலர்க்**
**காவினுட் பொலிந்த போவக் கைவினைக்**
**கண்ணார் மாட நண்ணுவன ளிழிந்து**
**தேனிமிர் படலைத் திருவமர் மார்பனைத்**
**தானினி தெதிர்ந்த தானத் தருகே**
**அன்று மவாவி நோக்கின ணன்றியல்**
**இருவரு மியைந்து பருவரல் காட்டி.** (3:8: 33-40)

என்னும் பாடலில், பதுமாபதி முதல் நாள் கண்ட இடத்திலேயே மீண்டும் வந்து உதயணன் இருக்கிறானா என்று நோக்கினாள். ஒருவரை ஒருவர் காண விரும்பி இருவரும் ஓரிடத்தே கூடி காமக்குறிப்பைப் பிறர் அறியாமல் வெளிப்படுத்திக் கொண்டனர் என்று கூறுகின்றது.

மலர்செறிந்த கூந்தலையும் அழகிய அணிகலன்களையும் உடைய அப்பதுமாபதி உதயணகுமரனைக் கண்டு பெரிதும் அளவளாவி மகிழ்ந்து அந்தப்பகல் கழிந்தனர் என்பதனை,

**அலர்ததை யைம்பா லணியிழை யேறிப்**
**போந்தன ளாகிப் பூந்தண் கானத்துள்**
**எழுதுவினை மாடத்து முழுமுத லிழிந்து**
**தாமகத் திருக்கு மாமணிப் பேரறை**
**வாயில் சேர்வுற வையம் வைக்கென**
**அமைத்தன ளாகி யவ்வயி னொடுங்கிடு**
**சினப்போ ரண்ணலொடு வளப்பா டெய்தி**
**அப்பகல் கழிந்த பின்றை.** (3:13: 12-19)

என்ற பாடலின் வழி அறியலாம். இப்பகுதி சங்கஅக மரபைத் தழுவியதாக உள்ளதை உணரலாம்.

**நீராடல்**

பரிபாடலில் வையையாற்றினைப் பற்றி வரும் இடங்களில் இந்நீராடல் பேசப்படுகிறது. பெருங்கதையுள் நீராடலும், அதன் முன்பின் நிகழ்ச்சிகளும் உஞ்சைக்காண்டத்தில் விழா யாத்திரை, புனற்பட்டது, உவந்தவை காட்டல், நீராட்டரவம், நங்கை நீராடியது ஆகிய பகுதிகளில் கூறப்படுகிறது. இச்செய்திகள் பரிபாடல் காட்டும் வையை நீராடலுடன் ஒத்திருக்கின்றன.

பரிபாடல் நீராடச் செல்லும் மகளிர் ஆயத்தமாகும் காட்சியைக் கூறுகின்றது. அக்காட்சியில் அவர்கள் உடன்கொண்டு செல்லும் பொருட்கள், அணிகள் போன்றவை கூறப்படுகின்றன. இதனை,

**புகை பூஅவி யாராதனை அழல் பலஏந்தி**
**நகை யமர் காதலரை நாளணிக் கூட்டும்**
**வகை சாலும் வையை வரவு. (பரி.6: 11-13)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனை பெருங்கதை,

**கடைப்பகச் செப்பே கவரி குஞ்சம்**
**அடைப்பைச் சுற்றமொ டன்னவை பிறவும்**
**அணிகலப் பேழையும் ஆடை வட்டியும்**
**மணிசெய் வள்ளமு மதுமகிழ் குடமும்**
**பூப்பெய் செப்பும் புகையகி லறையும்**
**சீப்பிடு சிக்கமுஞ் செம்பொற் கலசமும்**
**காப்பியக் கோசமுங் கட்டிலும் பள்ளியும்**
**சுட்டிக் கலனுஞ் சுண்ணகக் குற்றியும்**
**வட்டிகைப் பலகையும் வருமுலைக் கச்சும்**
**முட்டினை வட்டுமுகக் கண்ணாடியும்**
**நக்கிரப் பலகையு நறுஞ்சாந் தம்மியும்**
**கழுத்திடு கழங்குங் கவறுங் கண்ணுயும்**
**பந்தும் பாவையும் பைங்கிளிக் கூடும். (1:38: 161-173)**

என்ற பாடலின் மூலம் நீராடல் மேற்கொள்வோர் உடன்கொண்டு செல்லும் பெரும்பட்டியலைப் பற்றிக் கொங்குவேளிர் சுட்டியுள்ளார்.

**இசையும் ஆடலும்**

நீராடலில் இசையும் ஆடலும் இடம்பெறுகிறது. இசைக்குத் தேவையான யாழும், முழவும், குழலும் உடன் எடுத்துச் செல்கின்றனர். இதனை,

**யாழுங் குழலு மரிச்சிறு பறையும்**
**தாழ முழவமுந் தண்ணுமைக் கருவியும்.** (1:38: 174-175)

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியமுடிகின்றது.

இதனை பரிபாடலில்,

**புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழும்**
**எழூஉப் புனர் யாழும் இசையும் கூடக்**
**குழலளந்து நிற்ப முழவெழுந் தார்ப்ப.** (பரி. 77-79)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**மகளிர் வருதல்**

அணியணியாக மக்கள் வையையை நோக்கிச் செல்கின்றனர். அவர்கள் உள்ளத்தின் களிப்பினாலே அவர்கள் நடையிலும் மிடுக்குத் தோன்றுகின்றது. தோளில் அணிந்திருந்த தோள்வளைகள், தோள்கள் பூரித்தமையால் செறிவு கொண்டவையாயின. அதனால், அவற்றை முன்னங்கைகளில் இறக்கிவிட, அவை அங்கே ஒன்றோடொன்று மோதி ஒலிசெய்தன. மார்பிலும் தோளிலும் எழுதப்பட்ட தொய்யிற் கொடிகளோடு சேர்ந்து, மார்பில் கிடந்தசையும் அழகிய ஆரங்கள், தம்முட் கலந்து தழுவுதல் மயங்கி உதிர்ந்தன. அவிழ்ந்த கூந்தலும் குளிர்ந்த சந்தனச் சாந்தினை அழித்தன என்பது போன்ற செய்திகள் மகளிர் வருகையைக் கூறுகின்றன. இதனை,

**தொடிதோள் செறிப்பத் தோள்வளை இயங்கக்**
**கொடிசே ராத்திருக் கோவை காழ்கொளத்**
**தொகுகதிர் முத்துத் தொடைகலிழ்பு மழுக**
**உகிரும் கொடிறும் உண்டசெம் பஞ்சியும்**
**நகிலணி அளறும் நனிவண்டல் மண்ட**

**இலையும் மயிரும் ஈர்ஞ்சாந்து நிழத்த**

**முலையும் மார்பும் முயங்கணி மயங்க**

**விருப்பொன்று பட்டவர் உளநிறை உடைத்தென. (பரி. 8: 14-21)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

இதனைப் பெருங்கதை,

**அவிழ்ந்த கூந்த லங்கையி னடைச்சி**

**அரிந்துகால் பரிந்த கோதைய ராகத்துப்**

**பரிந்துகா ழுகுத்த முத்தினர். (1:38: 35-37)**

என்ற பாடலின் வழி, அவிழ்ந்து சரியும் தம் கூந்தலை அழகிய தமது கையில் ஏந்திக்கொண்டு ஆரம் அறுந்து முத்துக்களை உகுக்கும் மார்பினையுடையராய் மகளிர் வருகையை அறியலாம்.

## நீராட வருவோர்

நீராடலுக்கு வருகின்றோர் யானை, குதிரை, தேர் இவற்றின் மீது ஏறி வருகின்றனர். இதனைப் பரிபாடலும், பெருங்கதையும் கூறுகின்றது.

**கொள்வார் கோல் கொள்ளக் கொடித்திண்டேர் ஏறுவோர்**

**புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை**

**வெள்ளநீர் நீத்தத்துள் ஊர்பூர்பு வழக்குநரும். (பரி. 11: 51-53)**

சிலர் தேர் மீதும், யானை, குதிரை இவற்றின் மீதும் ஏறி நீராடச் சென்றனர் என்று பரிபாடல் கூறுகின்றது.

இதனைப் பெருங்கதை,

**வெண்டுகில் பூட்டிய வேழக் குழவியும்**

**ஒண்படை யணிந்த வண்பரிப் புரவியும்**

**உண்டியு முடையுங் கொண்டகஞ் செறித்த**

**பண்டியு மூர்தியுங் கொண்டனர். (1:39: 74-77)**

எனவரும் பாடலடிகளின் வழி அறியலாம். வெள்ளாடை அணிந்த யானைகளோடும், குதிரைகளோடும் அவர்கள் சென்று அப்பொய்கைப் பெருந்துறையில் உறவினர்களோடும் கூடி நீராடலாயினர் என்ற செய்தியைப் பெருங்கதை குறிப்பிடுகின்றது.

**நீராட்டவரம்**

நீராடும் ஆரவாரமானது தடுக்கஇயலாது. பல்வேறு வகையான இசைக்கருவிகள், விலங்குகள், பறவைகள் ஒலி எல்லாம் ஒன்று சேர்கின்றன. அப்போது ஆரவாரம் ஏற்படுகின்றது. இதுபோன்ற நீராடலின் போது எழுகின்ற நீராட்டரவத்தினை பரிபாடல் இலக்கியம் கூறுகின்றது.

முன்துறையில் நிறைநிறையாக வரிசையாக நின்றவர்கள் தம்முள் பேசிக்கொண்டனர். அந்த பேச்சுக்கள் ஒரேதன்மையாக அல்லாமல், பலப்பலவாக எழுந்து ஒலித்தன. அவற்றையெல்லாம் தெளிவாகக் கேட்டு அறியக்கூடியவர்கள் யார்? அது எவராலும் முடியாது. அவற்றுள் சில சில உள்ளன. ஒத்திசைத்த குழலின் ஒலி எழ, அதற்கிசைய முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி என்னும் இவையும் சேர்த்து ஒலித்தன. இதனை,

**முன்துறை நிறையணி நின்றவர் மொழிமொழி**
**ஒன்றல பலபல உடனெழுந் தன்று; அவை**
**எல்லாம் தெரியக் கேட்குநர் யார்? அவை**
**கில்லா; கேள்வி கேட்டன சிலசில;**
**ஒத்த குழலின் ஒலியெழ முழவிமிழ்**
**மத்தரி தடாரி தண்ணுமை மகுளி**
**ஒத்தளந்து சீர்தூக்கி ஒருவர் பிற்படார். (பரி.12: 36-42)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**பாடலொ டியைந்த பல்லோ ரரவமும்**
**ஆடலொ டியைந்த வணிநகை யரவமும்**
**யாற்றொலி றரவமொ டின்னவை பெருகிக்**
**கூற்றொலி கேளாக் கொள்கைத் தாகி. (1:41: 122-125)**

எனக் குறிக்கிறார் ஆசிரியர். பாடுகின்ற இன்னிசை ஆரவாரமும், கூத்தருடைய கூத்தாடுதலோடு மாந்தருடைய அழகிய நகைப்பால் உண்டான ஆரவாரமும் ஆற்றினது ஆரவாரமும் இத்தகைய பல்வேறு ஆரவாரங்களும் பெருகியதால்

மாந்தருடைய பேச்சுகள் கேளாமல் போனது என்று ஆரவாரம் பற்றிக் கூறுகின்றது பெருங்கதை.

### மலர் வகைகள்

சயந்தி நகர மக்கள் ஒரு அழகான மலைக்குச் சென்றனர். அந்தச் செய்தியைக் கூறிய கொங்குவேளிர். அம்மலையில் காணும் மரம், செடி, கொடி, மலர் முதலிய இயற்கைப் பொருள்களைக் கூறி மலர்களைப் பறித்து மாலைகள் கட்டி அணிந்து கொண்டதனைக் கூறுகின்றார். அவர் மலர்களின் வகைகளை வரிசையாகக் கூறுகிறார். அவை,

**பலவும் மாவும் நலமா நாகமும்**
**மகிழும் பிண்டியும் வரி இதழ் அனிச்சமும்**
**வேங்கையும் மாவும் விளவும் வேயும்**
**கோங்கமும் குரவும் கொடிக் குருக்கத்தியும்**
**நறையும் நந்தியும் அறை பயில் அகிலும்**
**வழையும் வாழையும் கழை வளம் கவினிய**
**திகிரியும் தில்லையும் பயில் பூம் பயினும்**
**முல்லையும் பிடாவும் குல்லையும் கொன்றையும்**
**குருந்தும் வெட்சியும் நரந்தையும் நறவும்**
**நறும் பாதிரியும் நாள் மலர்க் கொகுடியும்**
**இறும்பு அமல் ஏலமும் ஏர் இவங்கமும்**
**பைங் கூதாளமும், வெண் பூஞ் சுள்ளியும்**
**கொய்து அகை போந்தும் கை தகை காந்தளும்**
**திமிசும் தேக்கும் ஞெமையும் ஆரமும்**
**சேபாலிகையும் செங் கொடுவேரியும்**
**தீ வாய்த் தோன்றியும் திலகமும் திரி கோல்**
**பகன்றையும் பலாசும் அகன் தலைப் புழகும்**
**குளவியும் குறிஞ்சியும் வளவிய மௌவலும்**
**சிறு செங் குரலியும் சிறு செண்பகமும்**

**நறும் பொற் கொட்டமும் துறும்புபு களுலி**

**இன்னவை பிறவும்.** **(பெருங். 2: 12: 11-31)**

இதில் 57 தாவரங்களும் அவற்றில் விளையும் மலர்களையும் பற்றி கூறியுள்ளார். சங்க இலக்கியம் குறிஞ்சிப்பாட்டில் 99 வகை மலர்கள் கூறப்பட்டுள்ளன. அவைகளில் பெரும்பாலான மலர்களை கொங்குவேளிர் பெருங்கதையில் காட்டியுள்ளார்.

அதுப்போல, பூமாலைக் கட்டுவதற்கு விரிசிகை என்ற முனிவரின் பெண் தேர்ந்தெடுத்த மலர்களைப் பார்க்கின்ற போது எல்லாம் தமிழ் நாட்டு மலர்களாகக் காண்கிறோம்.

**புகழப்பட்ட பூ மரக் காவினுள்**

**நந்திவட்டமும் நாகத்து அலரும்**

**சிந்துவாரமும் சேபாலிகையும்**

**மணிக் குருக்கத்தியும் பணிப் பூஞ் சுள்ளியும்**

**நாட் சிறு சேடமும் நறுஞ் செண்பகமும்**

**கோட்கு அமைந்து ஏந்திய கோலப் பல் மலர்.**

**(பெருங். 2: 15: 102-107)**

புன்னை, வெள்ளருக்கு, சண்பகம், நந்தியா வட்டம், குவளை, பாதிரி அலரி, செந்தாமரை ஆகிய எட்டு மலர்களைப் பற்றி கூறியுள்ளார்.

### பெண்ணின் குணநலன்

பெண்களாகப் பிறந்தவர்கள் தம் அன்புடைய கணவர் துன்புறுத்தினாலும் பொறுத்துக் கொள்ளுதலே பெருமையாகும் என்று கூறுகின்றார் கொங்குவேளிர்.

**அன்புடைக் கணவர் அழிதகச் செயினும்,**

**பெண்பிறந் தோர்க்கு, பொறையே பெருமை.**

**(பெருங். 4:14: 98-99)**

என்று கூறுகின்றார். இதனை,

**தகவுடை மங்கையர், சான்றாண்மை சான்றார்,**

**இகழினும், கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்.**

**(பரி.20: 88-89)**

என பரிபாடலும்,

**மாய மகிழ்நன் பரத்தைமை**

**நோவேன் தோழி கடன்நமக்கு எனவே. (கலித்.75: 32-33)**

என கலித்தொகையும் கூறுகின்றன.

## தலைவனும் தலைவியும் கண்டு காதல் வயப்படல்

தலைவன் தலைவியைக் கண்டதும் காதல் கொண்டதும், ஒருவரையொருவர் விரும்புவதனையும் கவிஞர் சுட்டியுள்ளார். இதனை,

**மலிபூஞ்சாரல் என் தோழிமாரோடு**

**ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழி**

**'புலிபுலி' என்னும் பூசல் தோன்ற**

**ஒண் செங்கழுநீர்க் கண்போல் ஆய்இதழ்**

**……….**

**வரிபுனை வில்லின் ஒரு கணை தெரிந்து கொண்டு**

**யாதோ மற்றும் அம்மாதிறம் படர்என**

**வினவி நிற்றந் தோனே, அவற் கண்டு**

**எம்முள் எம்முள் மெய்ம் மறைபு ஒடுங்கி. (அக. 48: 5-15)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

தலைவியால் மலரினைப் பறிக்க இயலாமையால் தலைவனிடம் அம்மலரைப் பறித்துத் தருமாறு உதவி கேட்கின்ற செய்தி வெளிப்படுகிறது. அப்போது இருவரின் கண்களும் ஒன்றோடு ஒன்று கலந்தன என்பதை,

**பால்வரைந்து அமைத்தல் அல்லது அவர்வாயின்**

**சால்வு அளந்து அறிதற்கு யாஅம் யாரோ?**

**வேறுயான் கூறவும் அமையாள் அதன் தலைப்**

**பைங்கண் மாச்சுனை பல்பிணி அவிழ்ந்த**

**வள்இதழ் நீலம் நோக்கி. (குறுந்: 366)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

தலைவன் தலைவியும் முன்பின் ஒருவரை ஒருவர் பார்த்தது இல்லை. இவர்களுடைய தாய் தந்தையரும் உறவினர்களும் இல்லை. ஆனால் இருவரும்

ஒருவரை ஒருவர் கண்டவுடன் செம்மண் நிலத்தில் மழை பெய்தவுடன் எப்படி செம்மண்ணும் மழைநீரும் ஒன்றோடு ஒன்று கலக்கிறதோ அதைப்போல தலைவியே உன்னை முதன்முதலில் கண்டதும் கலந்து விட்டேன் என்று தலைவன் கூறுவதனை,

**யாயும் ஞாயும் யார் ஆகியரோ?**

**எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்**

**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**

**செம்புலப் பெயல்நீர் போல**

**அன்புடை நெஞ்சம்தாம் கலந்தனவே. (குறுந்: 40)**

என்ற பாடல் உணர்த்துகின்றன.

இதனை பெருங்கதை,

உதயணனும் வாசவதத்தையும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் வயப்பட்டமையை,

**தென்கட லிட்டதோர் திருமணி வான்கழி**

**வடகட னுகத்துளை வந்துபட் டாஅங்கு**

**நனிசே ணிட்ட நாட்டின ராயினும்**

**பொறைபடு கருமம் பொய்யா தாகலிற்**

**சிறைபடு விதியிற் சென்றவட் குறுகி**

**மதியமு ஞாயிறுங் கதிதிரிந் தோடிக்**

**கடனிற விசும்பி னுடனின் றாங்குப்**

**பைந்தொடிச் சுற்றமொடு தந்தை தலைத்தாள்**

**ஆயத் திடையோள் பாசிழைப் பாவை**

**யானை மிசையோன் மாமுடிக் குருசில்**

**இருவரு மவ்வழிப் பருகுவனா் நிகழ**

**……………………..**

**குலத்தினுங் குணத்தினுங் கூடிய வன்பினும்**

**இனத்தினும் பிறவினு மிவ்வகை யிசைந்த**

**அமைப்பருங் காதலு மிமைப்பினு ளடக்கி**

**ஒருவயிற் போல வுள்ளழி நோக்கமொ**

**டிருவயி னொத்த.'. திறந்த பின்னர்.** (1:32: 17-49)

என்ற பாலடிகள் வழி அறியலாம்.

உதயணனும் பதுமாபதியும் ஒருவரையொருவர் கண்டு காதல் வயப்பட்டனர் என்பதனை,

**வயப்பட லுற்று வயங்கிழை மாதர்**

**தானுங் கதுமென நேர்முக நோக்க**

**நெஞ்சிறை கொளீஇய நிறையமை நெடுந்தாழ்**

**வெந்தொழிற் காம வேட்கை திறப்பத்**

**திண்பொறி கலங்கித் திறல்வே றாகி**

**வேலை யெல்லை மீதூர்ந் திரண்டு**

**கோலப் பெருங்கடல் கூடி யாங்கும்.** (3:6: 54-60)

என்ற பாடலின் வழி அறியலாம்.

உதயணன் மானனீகையைக் கண்டு காதல் கொண்டான். இதனை,

**சென்றவண் முகத்தே**

**ஒன்றிய வியல்போ டொன்றுக் கொன்றவை**

**ஒளித்தவும் போலுங் களித்தவும் போலும்**

**களித்தவு மன்றி விளித்தவும் போலும்**

**வேலென விலங்குஞ் சேலென மிளிரும்**

**……………**

**கழுநீர் பொருவிச் செழுநீர்க் கயல்போல்**

**……………**

**ஓடரிக் கண்ணி யுலாவர நோக்கி.** (4:12: 249-264)

என்ற பாலடிகள் உணர்த்துகின்றன.

உதயணனை விரிசிகை கண்டு காதல் வயப்பட்டாள். இதனை,

**இருந்தினி தொழுகும் இயன்மலைப் பள்ளியுள்**

**அருந்தவர் அல்லதை ஆடவர் அறியாள்**

**தவிர்வில் காதலொடு தன்வழிப் படூஉம்**

**கவர்கணை நோன்சிலைக் காமன் இவனெனும்**

**மையல் உள்ளமொடு பைய இயலிப்**

**பிள்ளைமை கலந்த பேதைப் பெரும்பிணை**

**வெள்ளை நோக்கமொடு விரும்புபு விதும்பி. (1:15: 94-100)**

என்னும் பாடலின் வழி அறியமுடிகின்றது.

## ஐயமும் தெளிவும்

தலைவியைப் பார்த்த தலைவன் ‘இவ்வளவு அழகாக இருக்கிறாளே! இவள் தெய்வப்பெண்ணா? மானிடப் பெண்தானா? என்று ஐயம் கொள்கிறான். பின்னர் அவளது தோற்றத்தையும் இயக்கத்தையும் கொண்டு அவள் மானிடப் பெண்தான் என்று ஐயம் தீர்கிறான். இது தெளிவு எனப்படும்.

### ஐயம்

**சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப**

**இழிந்துழி இழிவே சுட்ட லான. (தொல்.கள. நூ.91)**

என்று தொல்காப்பியம் கூறுகின்றது.

அகன்ற நிலவின் இனிய நிலவொளி போல அவள் முகத்தில் ஒளிவீசுகிறது. அவள் இங்கே வருகிறாள். இவள் யாராக இருப்பாள்? மேலுலகத்தில் வல்லவன் ஒருவன் செய்து அனுப்பிவிட்ட இயங்கும் பொம்மையோ? நல்லவர்களின் உறுப்பழகெல்லாம் திரட்டி இயற்றப்பட்டவளோ? வெறுப்பினால் வேண்டிய உருவம் கொண்டு என்னை கொல்ல வந்துள்ள எமனோ? எனத் தலைவன் தலைவியைக் கண்டு ஐயமுற்றான். இதனை,

**தீம்கதிர் விட்டது போல, முகன் அமர்ந்து**

**ஈங்கே வருவாள் இவள் யார்கொல்? ஆங்கே, ஓர்**

**வல்லவன் தைஇய பாவை கொல்? நல்லார்**

**உறுப்பு எலாம் கொண்டு, இயற்றியாள் கொல்? வெறுப்பினால்**

**வேண்டு உருவம் கொண்டதோர் கூற்றம் கொல்?**

**(கலித். 56: 5-9)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**தெளிவு**

> **வண்டே இழையே வள்ளி பூவே**
> **கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று**
> **அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ**
> **நின்றவை களையும் கருவி என்ப.** **(தொல். கள. 92)**

என ஐயம் களைவதனைத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

தலைவன் தலைவியைக் கண்டு முதலில் ஐயுற்றான். 'வாரி முடிந்த வனப்பு மிக்க கூந்தல், வளைந்து நிற்கும் பெருமிதம் மிக்க மென்மையான தோள், அழகின் உருவமாக மை உண்ட கண்கள், அதில் பெண்மான் போல மருண்டு பார்க்கும் எழில் மிக்க பார்வை, கார்காலத் தளிர் போன்ற மேனி, கட்டழகே உருவான நெற்றி, கூர்மையான மல்லிகை மொட்டுகள் போன்ற வெண்ணிறப் பற்கள், கொடிபோல ஆடும் இடுப்பு இத்துணையும் கண்டு ஐயம் தெளிவாகிறான். இதனை,

> **வார்உறு வணர் ஐம்பால் வணங்குஇறை நெடுமென் தோள்**
> **பேரெழில் மலர் உண்கண் பிணை எழில்மான் நோக்கின்**
> **காரெதிர் தளிர்மேனி கவின்பெறு சுடர்நுதல்**
> **கூரெயிற்று முகைவெண்பல் கொடிபுரையும் நுசப்பினாய்!**
> **(கலித். 58: 1-4)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

> **திருந்திழை மாதர்கொ றெய்வங் கொல்லென.** **(1:37: 131)**

என்ற பாடலில், வாசவதத்தையின் யாழ் இசையினைக் கேட்டு அங்குள்ளோர் இவள் மானிட மகளோ? தெய்வ மகளோ? எனத் தெளியாமல் இருந்ததாய்க் கூறப்படுகின்றது.

உதயணன் விரிசிகையைக் கண்டவுடன் இவள் திருமகளோ? என முதலில் ஐயுற்றான் பின்னர் அவளுடைய தாமரைமலர் போன்ற அழகிய நெடிய கண்கள் இமைத்தலையும், மாலை வாடியிருந்தலையும் கண்டு இவள் திருமகள் அல்ல முனிவரின் மகளாக இருக்க வேண்டும் என்று துணிந்தான் என்று பெருங்கதை கூறுகின்றது. இதனை,

**நூலொடு புணர்ந்த வாலியன் மார்பின்**

**தவத்தியற் பள்ளி சார்ந்தனள் உறையும்**

**இயற்கைத் திருமகள் இவளென எண்ணி**

**இணைமலர் நெடுங்கண் இமைத்தலும் வாடிய**

**துணைமலர்க் கோதைத் தோற்றமுங் கண்டே**

**முனிவர் மகளெனத் தெளிவுமுந் துறீஇ**

**ஐய மின்றி ஆணை யோட்டிய**

**தெய்வத் திகிரி கைவலத் துயரிய**

**நிலப்பெரு மன்னர் மகளிர்க் கமைந்த**

**இலக்கணக் கூட்டம் இயற்படத் தெரியா. (2:15: 114-123)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

## குறிப்பறிதல்

**நாட்டம் இரண்டு அறிவுடம் படுத்தற்குக்**

**கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும். (தொல்.களா. 93)**

என்று தொல்காப்பியம் கூறுகின்றது.

ஒத்த தலைவனும் தலைவியும் கண்ட பின்பு இருவரது காதல் வேட்கையும் குறிப்பால் உணர்த்தப்படும்.

இதனை,

**உண்ணுநீர் விக்கினான் என்றேனா, அன்னையும்**

**தன்னைப் புறம்பு அழித்து நீவ, மற்று என்னைக்**

**கடைக்கண்ணால் கொல்வான்போல் நோக்கி, நகைக்கூட்டம்**

**செய்தான், அக்கள்வன் மகன். (கலித். 51: 13-16)**

என்ற பாடலடிள் கூறுகின்றன. 'நகைக்கூட்டம்' செய்தான் அக்கள்வன் மகன்' என்னும் தொடர் தலைவன் நோக்கில் அமைந்த காதல் உணர்வினைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. நீர் விக்கினான் எனத் தலைவி கூறிய பொய்யில் இருந்து அவன் மீது அவள் கொண்டுள்ள விருப்பத்தைப் புலப்படுத்துவதாக உள்ளது.

இதனை பெருங்கதை,

**நன்றியல்**

**இருவரு மியைந்து பருவரல் காட்டிப்**

**புறத்தோர் முன்னர்க் குறிப்புமறைத் தொடுக்கிக்**

**கருங்கண் டம்மு ளொருங்குசென் றாட**

**வந்தும் பெயர்ந்து மன்றைக் கொண்டும்**

**காலையும் பகலு மாலையும் யாமமும்**

**தவலருந் துன்பமொடு கவலையிற் கையற்**

**றைந்தாள் கழிந்த பின்றை. (3:8: 39-46)**

என்னும் பாடலடிகளில், உதயணனும் பதுமாபதியும் தம் காதலை ஒருவருக்கொருவர் குறிப்பால் உணர்த்திக் கொண்டனர் என்ற செய்தியினைக் கூறுகின்றது.

## காதல் மனவுறுதி

வாசவதத்தை உதயணன் மீது காதல் வயப்படுகிறாள். அவள் அக்காதலில் உறுதியாக இருக்கிறாள். இப்பிறவியில் உதயணனை அடைய முடியாவிட்டாலும் இனிவரும் பிறவியிலாவது அவனை மணப்பேன் என மனவுறுதி உடையவளாக இருக்கிறாள். இதனை,

**எமர்தர வாரா தாயினு மிவணோற்**

**றவனுறை யுலகத் தழித்துப்பிறந் தாயினும்**

**எய்துதல் வலித்தனென் செய்வது கேளெனத்**

**தெய்வ மாதர் திட்பங் கூற. (1:36: 113-116)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது.

இதனை சங்க இலக்கியத்தில்,

**இம்மை மாறி மறுமையாயினும்**

**நீயாகியர் என் கணவனை**

**யானாகியர்நின் நெஞ்சு நேர்பவளே. (குறுந். 49)**

என்ற தலைவியின் கூற்றில் ஒப்பிடலாம்.

இதனைப் போன்று,

**விரிநீரு டுக்கை யுலகம் பெறினு**

**அருநெறி யாயர் மகளிர்க்**

**கிருமணங் கூடுதல் இவ்வியல் பன்றே. (கலித்.114: 19-21)**

என்று முல்லைக்கலிப் பாடலிலும்,

**ஆற்றின் வாரார் ஆயினும் ஆற்ற**

**ஏனைஉலகத்தும் இயைவதால் நமக்கென. (குறிஞ். 23-24)**

என்று குறிஞ்சிப்பாட்டிலும் காணமுடிகின்றது.

தான் சாவதற்கு அஞ்சவில்லை என்றும், ஆனால் இறந்துபட்டால் தலைவனோடு கூடி வாழும் இப்பிறப்பு மாறிவிடும் என்றுதான் வருந்துவதாகக் கூறுகின்றாள். இதனை,

**சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவில்**

**பிறப்புப் பிறிதா குவது ஆயின்**

**மறக்குவென் கொல்என் காதலன் எனவே. (நற்றி. 387: 7-9)**

என்ற பாடல் அடிகளின்வழி அறியலாம்.

## தோழி கூட்டுவித்தல்

தோழி தலைவியின் களவொழுக்கத்திற்குத் துணைபுரிபவளாக இருக்கிறாள். அன்னை முதலானோர் உறங்கியதனை ஆராய்ந்து பார்த்து பின்னர் இரவுக்குறியில் வந்த தலைவனிடம் தலைவியை தோழி அனுப்புவதனை,

**வந்தனர் வாழி தோழி அந்தரத்து**

**இமிழ்பெயல் தலைஇய இனப்பல கொண்மூத்**

**தவிர்வுஇல் வெள்ளம் தலைத்தலை சிறப்ப**

**…………..**

**பகலும் அஞ்சும் பனிக் கடுஞ் சுரனே. (அக.68: 14-21)**

இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

இதனை பெருங்கதை,

**மிக்க**

**காழகி னறும்புகை யூழ்சென் றுண்ட**

**மணிக்காற் கட்டிலுள் வல்லோள் படுத்த**

**அணிப்பூஞ் சேக்கை யறைமுத லாகப்**

**பக்கமுந் தெருவும் புக்கமுறை பிழைய**

**தாராய்ந் தந்தணி யமைத்ததன் பின்றைப்**

**பேரிமை யண்ணலும் பெருநல மாதரும்**

**ஆரிருள் போர்வை யாக யாவரும்**

**அறிதற் கரிய மறையிரும் புணர்ச்சியொடு**

**கரப்பறை யமைத்து. (3:13: 85-94)**

என்ற பாடலில், பதுமாபதியின் தோழியாகிய யாப்பியாயினி பள்ளியறை முதலாக அதன் பக்கங்களையும் அந்தப்புரத்திலுள்ள தெருக்களையும், முறைபிறழாமல் சென்று பார்த்து அங்கு எவரும் இல்லாததைக் கண்டு வந்து, பின்னர் உதயணனையும், பதுமாபதியையும் இருள்சூழ களவு மணப்புணர்ச்சிக்குத் துணைபுரிந்தமையைக் காணமுடிகின்றது.

### காமம்

உயிர் பலாப்பழத்தைத் தாங்கியிருக்கும் காம்பிற்கும், காமம் அக்காம்பு பிடித்திருக்கும் பலாப்பழத்திற்கும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. உயிரை விடக் காமம் மிகப்பெரியதென்பதையும், அது ஒரு குறிப்பிட்ட அளவை மீறினால், தாங்காது உயிரைவிட்டுப் பிரியும் என்பதையும் அழகாகப் புலப்படுத்தியிருக்கிறது. இதனை,

**வேரல்வேலி வேர்க்கோட் பலவின்**

**சாரல் நாட! செவ்வியை ஆகுமதி!**

**யார்அ.ஃ.து அறிந்திசி னோரே – சாரல்**

**சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவள்**

**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே! (குறுந். 18)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

இதனைப் பெருங்கதை,

**இருவர் நெஞ்சமு மிடைவிட லின்றித்**

**திரிதர லோயாது திகிரியிற் சுழல**

**ஊழ்வினை வலிப்பி னல்ல தியாவதும்**

**சூழ்வினை யறுத்த சொல்லருங் கடுநோய்க்**

**காமக் கனலெரி கொளீஇ யாமம்**

**தீர்வது போலா தாகி.** **(1:32: 199-204)**

என்ற பாடல் அடிகளிலும்,

**பன்னாள் கழிந்த பின்னர் முன்னாள்**

**எண்மெய்ப் பாட்டினு ளிரக்க மெய்ந்நிறீஇ**

**ஒண்வினை யோவியர் கண்ணிய விருத்தியுட்**

**டலையத னும்பர்த் தான்குறிக் கொண்ட**

**பாவை நோக்கத் தாரணங் கெய்தி**

**முற்றான் கண்ட முகஞ்செய் காரிகை**

**உட்கொண் டரற்று முறுபிணி தலைஇக்**

**கட்கொண் டாங்குக் களிநோய் கனற்றத்**

**தீமுகத் திட்ட மெழுகிற் றேம்பியும்**

**தாய்முகத் தியாத்த கன்றிற் புலம்பியும்.** **(1:35: 44-53)**

என்ற பாடலில், உதயணனுக்கு வாசவதத்தையின் மீதான மிக்க காம நோயானது நாளுக்கு நாள் பெருகிக், கள்ளைப்பருகினார்க்கு அக்கள் வெறி உள்ளத்தே வெதுப்புற்று அவற்றால் மெழுகு உருகுவது போன்று நெஞ்சம் உருகியும், தாய்ப்பசுவின் முன்னர்ப் பாலுண்ணாதபடி கயிற்றால் கட்டப்பட்ட கன்று வருந்துவது போன்றும் வருந்தியும் துயரடைந்தான் என வெளிக்காட்டியுள்ளார் ஆசிரியர்.

## நலம்பாராட்டி இன்புறல்

தலைவன் தலைவியை நலம் பாராட்டுவதாக,

**கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி**

**காமம் செப்பாது, கண்டது மொழிமோ**

**பயிலியது கெழீஇய நட்பின், மயிலியிற்**

**செறி எயிற்று அரிவை கூந்தலின்**

**நறியவும் உளவோ நீ அறியும் பூவே.** **(குறுந். 2)**

இப்பாடல் அமைந்துள்ளது.

இதனைப் பெருங்கதை,

உருவொடு புணர்ந்த வுயரணை மீமிசை
இருபுடை மருங்கினு மெழில்பட விரீஇ
ஏமச் செவ்வி யேஎர் நுகரும்
யாமத் தெல்லையுண் மாமறைப் பேரறை
உலாவு முற்றத் தூழ்சென் றாட
நிலாவிரி கதிர்மணி நின்று விளக்கலும்
பள்ளி தன்னுள் வள்ளிதழ்க் கோதையொடு
மன்னய முரைத்து நன்னலங் கவர்ந்து. (3:14: 89-96)

என்ற பாடலடிகள் உதயணன் பதுமாபதியை நலம்பாராட்டி இன்புற்றமையை கூறுகின்றன.

## மாலைத்துன்பம்

செவ்வான் செவ்வி கொண்டன்று
உய்யேன் போல்வல் - தோழி யானே. (குறுந்.108: 3-4)
மாலை வந்தன்று மாரிமா மழை
பொன்ஏர் மேனிநல் நலம்சிதைத் தோர்
இன்னும் வாரார் ஆயின்
என்ஆம் தோழிநம் இன்உயிர் நிலையே. (குறுந்.319: 5-8)
வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து
போர்வெல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்,
தண்பெயல் பொழிந்த பைதுறு காலை
…………
நின்வலித்து அமைகுவென் மன்னோ – அல்கல்
புன்கண் மாலையொடு பொருந்திக், கொடுங்கோற்
கல்லாக் கோவலர் ஊதும்
வல்லாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே! (அக.74)

என்னும் பாடல்கள் தலைவியின் மாலைக்காலத் துன்பத்தை வெளிப்படுத்துகின்றன.

மாலைக்காலம் தலைவனைப் பிரிந்திருக்கும் மகளிரின் உயிரினைப் பிரிக்கும் கொடுமையான காலம் என்பதை அறியாமல், அறிவு மயங்கி அதற்கு ‘மாலைக்காலம்’ என்று பெயரிட்டுள்ளதாக,

**வால்இழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்கும்**

**காலை ஆவது அறியார்**

**மாலை என்மனார் மயங்கி யாரே. (கலித்.119: 14-16)**

என்னும் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

இதனைப் பெருங்கதை,

**வெந்துயர்க் கண்ணின் வேலிட் டதுபோல்**

**வந்திறுத் தன்றால் வலியெனக் கில்லெனக்**

**கையறு குருசிலை வைகிய தெழுவென**

**இலங்குசுடர் விளக்கோ டெதிர்வந் தேத்திப்**

**புறங்காப் பிளையர் புரிந்தகம் படுப்ப**

**…………**

**பைத னெஞ்சத்து மையல் கொள்ளா**

**எ.்.கொழி களிற்றின் வெய்துயிர்த் துயங்கி. (1:33: 95-109)**

என்ற பாடலடிகளில் உதயணன் மாலைக்காலத்தைக் கண்டு துயரம் கொண்டமையைக் காணமுடிகின்றது.

பிரிந்தோர்க்குத் தனிமைத்துன்பத்தை மிகுவித்துப் பெருந்துன்பத்தைத் தருகின்ற அவ்வந்திமாலைப் பொழுது ஞாயிற்றினது வெப்பத்தை அகற்றி குளிர்ச்சியை வழங்கியது. இதனை,

**வண்டகத் தடக்கிய வாய வாகிக்**

**கூலப் பொய்கையு ணீலமொடு மலர்ந்த**

**கோலக் கழுநீர் குழிவாய நெய்தல்**

**எழுநீர்க் குவளையொ டின்னவை பிறவும்**

**………….**

**புட்புலம் புறுத்த புன்கண் மாலை**

**கட்புல மருங்கிற் கலந்த ஞாயிற்று**

**வெப்ப நீக்கித் தட்பந் தான்செய. (1:48: 46-59)**

என்ற பாடலடிளில் காணமுடிகின்றது.

வாடைக்காற்று தீப்போல கொடிய பனியோடு கலந்து கணவரைப் பிரிந்து வாழும் மகளிருடைய இணைந்த மலா் போன்ற நெடிய கண்கள் தீப்போன்று சுடுகின்ற துன்பக்கண்ணீரை முத்து முத்தாய் விழவும், பட்டாடையையும் ஒப்பற்ற மேகலையையும் அணிந்திருந்த அல்குலின்கண் நடுக்கஞ் செய்யும் பசலைநோய் படரவும், துன்பத்தைத் தரும் மலைக்காலமானது சிவந்த நிறமுடைய வானமாகிய கம்பலத்தைப் போர்த்தி வந்து அவளின் நெஞ்சினை வேல் போன்று பிளந்தது. இதனை,

**துணைபிரி மகளி ரிணைமலர் நெடுங்கண்**
**கட்டழன் முத்தங் காலப் பட்டுடைத்**
**தனிக்கா ழல்குற் பனிப்பசப் பிவர**
**அழல்புரை வெம்பனி யளைஇ வாடை**
**உழல்புகொண் டறாஅ தொல்லென் றூர்தரச்**
**செங்கேழ் வானக் கம்பலம் புதைஇ**
**வெங்க ணீர தாகி வேலிற்**
**புன்கண் மாலை போழ. (3:7: 32-39)**

என்ற பாடலடிகள் வழி அறியமுடிகின்றது.

## இரவுக்குறி

காதலர்கள் இரவில் பிறர் அறியாமல் சந்திப்பதற்குரிய இடம் பெற்று மகிழ்தலை 'இரவுக்குறி' என்பர். இதனை குறுந்தொகையிலும் காணலாம்.

தலைவன் இரவுக்குறியை விரும்ப தோழி அவன் குறையை அறிந்து கூறுவதாக,

**நல்லுரை யிகந்து புல்லுரை தாஅய்ப்**
**பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல**
**உள்ளந் தாங்கா வெள்ளம் நீந்தி**
**அரிதவா வுற்றனை நெஞ்சே நன்றும். (குறுந். 29)**

இப்பாடல் அமைந்துள்ளது.

ஆண் வண்டுகளோடு பெண் வண்டுகளும் முரலுகின்ற இனிய ஓசை மிக்கு ஒலித்தலால் உன்னுடைய தேரின் மணிகள் ஒலித்தலைப் பிறர் கேட்டலும் அரியதாகும். அங்கு நீ வருவற்கு ஏற்ற இடமுமாகும் என்று தோழி தலைவனுக்கு இரவுக்குறி கூறுவதாக அமைந்துள்ளது. இதனை,

**மலிதாது ஊதும் தேனோடு ஒன்றி**
**வண்டு இமிர் இன்இசை கறங்க, திண் தேர்த்**
**தெரி மணி கேட்டலும் அரிதே**
**வரும் ஆறு ஈது; அவண் மறவாதீமே. (நற்றி. 323)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

மானனீகை உதயணனுக்கு இரவுக்குறியிடம் கூறி விட்டு வாசவதத்தை அறியாதபடி அங்கு வந்திருந்து அவன் வருகையை எதிர்ப்பார்த்திருந்தாள். இதனை,

**அற்றை வைகல் கழிந்தபி னவனை**
**மற்றுய ரணிநலம் வழிநாட் புனைஇக்**
**கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுட்**
**பாற்படு வேதிகை சேர்த்தன ளாகி**
**அரவுக் குறியி னயலவ ரறியா**
**இரவுக் குறியி னியல்பட வெழுதி**
**மாபெருந் தேவியை விடுத்தபின் மற்றவள்**
**தீவிய மொழியொடு சேதிபற் குறுகி**
**நோன்றாள் வணங்கித் தோன்ற நிற்றலும்**
**திருநுதன் மீமிசைத் திறத்துளிக் கிடந்த**
**அருளேர் வாசகந் தெருளுற வறிந்து**
**மற்றவள் பயந்தனள் பொற்புற வெழுதிய**
**இற்றைப் புதுநல மினிதென வியம்பி**
**மாதர் நோக்கின் மான னீகைகட்**
**காமம் பெருகிக் காதல் கடிகொள**
**மாமனத் தடக்கித் தேவியொ டினியன**
**கூறியப் பகல்போ யேறிய பின்றை**

**மான னீகை வாசவ தத்தையைத்**

**தான்மறைந் தறைகுறி மேவின ளிருப்ப. (4:13: 145-163)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

உதயணன் மானனீகையோடு ஊடியும் கூடியும் இருந்தபின்னர் 'ஒரு நாளும் தவறாமல் இவ்விடத்திற்கு வரவேண்டும்' என்று கூறி தனது சிறுவிரல் மோதிரத்தை மானனீகைக்கு உதயணன் வழங்கினான் என்பதனை,

**திருத்தகு மார்பன் கருத்தொடு புகுந்து**

**விருப்பொடு தழுவி நடுக்கந் தீரக்**

**கூடிய வேட்கையி னொருவர்க் கொருவர்**

**……..**

**குறியெனக் கூறிச் சிறுவிரன் மோதிரம்**

**கொடுத்தன னருளிக் கோயிலு ணீங்க. (4:13 172-181)**

இப்பாடலின் வழி அறியலாம்.

## அலருக்குப் பயப்படுதல்

அலர், அம்பல், கவ்வை ஆகியவை ஒருபொருளைத் தரக் கூடியச் சொற்களாகும். இலக்கியத்தில் கற்புக் காலத்தில் தலைவன் தலைவியை நெடுநாள் பிரிந்திருந்தால் ஊரார் கூறும் சொல் 'பழிச்சொல்' என்று குறிக்கப்படுகின்றது. அதுவே, களவுக் காலத்தில் தலைவன் களவொழுக்கத்தை நீட்டித்தால் ஊர்ப்பெண்கள் கூறும் சொற்கள் அம்பல், அலர், கவ்வை என்று கூறப்படுகின்றது.

ஊராரின் முன் தங்கள் காதல் தெரிந்தால் அவர்கள் வாய்க்கு வருவதைப் பேசுவார்கள் என்று தலைவி அஞ்சுவதைக் காணமுடிகின்றது.

**யானே ஈண்டை யேனே யென்னலனே**

**ஆனா நோயொடு கான லதே**

**துறைவன் தம்மூ ரானே**

**மறையல ராகி மன்றத் ததே. (குறுந். 97)**

என்ற அடிகள் ஊராருக்குத் தம் காதல் தெரிந்ததை எண்ணி தலைவி மனம் வருந்துவதைக் கூறுகின்றது.

நம் அன்னை ஊரிலே எழுந்துள்ள பழிச்சொற்களை அறிந்துவிட்டால், இப்பொழுது நாம் கொள்கின்ற களவு வாழ்க்கையானது நமக்கு இனிமேல் அரிதாகிப் போய்விடும் என்று தலைவி அலர் எண்ணி வருந்துகின்றாள். இதனை,

**அவரே அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை**
**அரிய வாகும் நமக்கு. (நற்றி.4: 5-6)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இதனைப் பெருங்கதை,

**உயலருந் துன்பமொ டொருவழிப் பழகிப்**
**பயலை கொண்டவென் பையு ளாக்கை**
**பண்டென் வண்ணம் பயின்றறி மாக்கள்**
**இன்றென் வண்ண மிடைதெரிந் தெண்ணி**
**நுண்ணிதி னோக்கி நோய்முத னாடிற்**
**பின்னிது கரக்கும் பெற்றி யரிதென**
**மலரே ருண்கண் மாதர்க் கமைந்த**
**அலரவண் புதைக்கு மருமறை நாடி. (1:35: 54-61)**

என்னும் பாடலடிகள், வாசவதத்தையை ஊரார் அலர் எழாமல் பாதுகாக்க வேண்டும் என்று உதயணன் எண்ணியதைக் கூறுகின்றது.

## அறத்தொடு நிற்றல்

தலைவன் ஒருவனைக் காதலித்து வரும் பெண்ணொருத்திக்கு அவள் பெற்றோர் புதியதோர் இளைஞனுக்குத் திருமணம் செய்து வைக்க ஏற்பாடுகள் மேற்கொள்ளும் போது, தோழி அறத்தோடு நின்று தலைவி கொண்டுள்ள காதலைக் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ பெற்ற தாயிடம் சொல்லுவாள். அவள் தன் கணவரிடத்திலும் மற்றவர்களிடமும் இதனை அறிவிப்பாள். முதலில் அவர்கள் இக்காதல் திருமணத்திற்கு உடன்படாது இருந்தாலும் இறுதியில் அவர்கள் மீது ஒரு குற்றமும் இல்லை என்பதனை உணர்ந்து தாங்கள் செய்தியைக் கேட்ட அளவில் கொண்ட கோபத்திற்கு நாணப்பட்டுத் தலையைக் கீழே சாய்க்கின்றனர் என்று குறிஞ்சிக்கலிப்பாடல் ஒன்று கூறுகின்றது. இதனை,

**அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட**

**என்னையர்க் குய்த்து ரைத்தாள் யாய்;**

**அவரும் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து**

**ஒருபக லெல்லாம் உருத்தெழுந்து ஆறி**

**இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று**

**தெருமந்து சாய்த்தார் தலை. (கலித். 39: 20-25)**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**தன்மேல்**

**இன்னா வெந்நோய் தன்னமர் தோழிக்**

**குரைக்கு மூக்கமொடு திருத்தகு மாதர்**

**வான்றோய் மண்டபம் வந்தொருங் கேறி. (3:8: 46-49)**

என்னும் பாடலடிகள் பதுமாபதி தன் காமநோயை தோழிக்குணர்த்தி அறத்தொடு நின்றாள் என்பதனை கூறுகின்றன.

## நொதுமலர் வரைவு

தலைவனல்லாத வேறு ஒருவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள தலைவியின் வீட்டுக்கு வந்தான். அப்பொழுது தோழி தலைவியின் களவொழுக்கத்தைத் தலைவியின் தாய் முதலியோருக்கு வெளிப்படுத்துகிறாள். இதனை,

**இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்**

**பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு**

**கண்ணகன் தூமணி பெறூஉம் நாடன்**

**அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி**

**எம்மில் வருகுவை நீயெனப்**

**பொம்மல் ஓதி நீவி யோனே. (குறுந். 379)**

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

**அன்னை, வாழி! வேண்டு, அன்னை புன்னை**

**பொன்நிறம் விரியும் பூக்கெழு துறைவனை**

**என்னை என்றும் யாமே இவ்வூர்**

**பிறிது ஒன்றாகக் கூறும்**

**ஆங்கும் ஆக்குமோ, வாழிய, பாலே? (ஐங். 110)**

நொதுமலர் வரைவின் போது தோழி செவிலிக்கு கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

இதனை பெருங்கதை,

**திருநிலத் திறைமை யேயர் பெருமகன்**

**பெருங்களி றடக்கிய பெறற்கரும் பேரியாழ்**

**கல்லா நின்றனள் கனங்குழை யோளென**

**எல்லா வேந்தரு மிசையின் விரும்பி**

**வழிமொழிக் கிளவியொடு வணக்கஞ் சொல்லிக்**

**கழிபெரு நன்கலங் களிற்றின்மிசை யுயரித்**

**துன்னருங் கோயிலுட் டூதரை விடுத்தர. (1:36: 43-49)**

என்னும் பாடலடிகள், வாசவதத்தை யாழினைக் கற்று மேம்படுகின்றாள் என்னும் செய்தியை உணர்ந்த பிறநாட்டு வேந்தர்கள், அவளுடைய இசைப் புலமை உணர்ந்து பிற அரசர்கள் தனித்தனியே பிரச்சோதன மன்னனுக்கு நல்ல அணிகலன்களை யானையின் மீது ஏற்றி தன் தூதுவர் வழியாக மணத்தூது விடுத்ததனைக் கூறுகின்றது.

சாங்கியத்தாய் உதயணனிடம் வாசவதத்தையை அயல்நாட்டார் பெண்கேட்டு வரும்செய்தியைக் கூறுவதாக இவ்வரிகள் அமைந்துள்ளது. அதனால் வாசவதத்தை தன் தந்தை மீது ஊடல் கொண்டுள்ளதாகவும் அவள் கூறுகின்றாள். இதனை,

**ஒள்ளிழை கணவனு முரிமையுட் டெளிந்த**

**கொள்கை யறிந்தியான் கூறவும் வேண்டா**

**அருமறை யன்மையி னன்பிற் காட்டி**

**ஒருவயி னொண்டொடிக் குற்றது கேளென**

**ஏதின் மன்னர் தூதுவ மாக்கள்**

**வந்தது வடுவெனத் தந்தையோ டூடி**

**அறத்தா றன்றியு மாகுவ தாயின்**

**துறத்தல் வேண்டுந் தூய்மை யோற்கெனக்**

**துணிவுள் ளுறுத்த முனிவின ளாகி. (1:36: 295-303)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

அச்சுவப்பெருமகன் என்பவன் பதுமாபதியை மணம் செய்ய எண்ணி தருசகனுக்குப் பரிசுப்பொருள்களோடு தூதுவரை அனுப்பினான். இதனை,

**கலக்கமி றானைக் காசியர் கோமான்**

**நலத்தகு தேவி நன்னாட் பெற்ற**

**மின்னுறழ் சாயற் பொன்னுறழ் சுணங்கிற்**

**பண்ணுறு மின்சொற் பதுமா நங்கை**

**ஆகந் தோய்தற் கவாஅ நெஞ்சமொடு**

**பாசிழை நன்கலம் பரிச முந்துறீஇக்**

**கேழ்கிளர் மணிமுடிக் கேகயத் தாசன்**

**அளவி லாற்ற லச்சுவப் பெருமகன்**

**மகதம் புகுந்து மன்னிய செங்கோற்**

**றகைவெந் துப்பிற் றருசகற் கிசைப்ப. (3:16: 3-12)**

என்ற பாடலடிகளின் வழி அறியலாம்.

## வரைவுகடாதல்

சங்க இலக்கியத்தில் தோழி தலைவியைத் தலைவன் விரைவில் திருமணம் செய்து கொள்ள வரைவு தூண்டுவாள். பெருங்கதையில் தோழியின் செயலைச் சாங்கியத்தாய் (செவிலித்தாய்) செய்வதாகக் காண்கிறோம்.

தலைவனிடம் தோழி நேரடியாக வரைவுகடாவும் முறையில் அமைந்துள்ளது. கடலில் வலை போட்டுப் பிடித்துக் கொண்டு வந்த மீனைச் சிறகு கெட்டுப்போன நாரை இரையாக்கிக்கொள்ளும் தொண்டி போன்றது இவள் பெண்மை நலம் என்று கூறுவதன் உட்பொருள் தலைவியின் குணத்திற்கும் பண்புக்கும் சற்றும் பொருத்தமில்லாத அயலவர் மணம் செய்ய எண்ணுவதனை கூறுகின்றது. எனவே தலைவன் விரைவில் தலைவியை மணம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறுகின்றாள் தோழி. இதனை,

**சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்**
**வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்**
**பறை தபு முது குருகு இருக்கும்**
**துறைகெழு தொண்டி அன்ன இவள் நலனே.** **(ஐங். 180)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

இதனை பெருங்கதை,

**தன் மனங் கொண்டவ டாவ முற்றிச்**
**சாவினை துணியு மாத்திரை யாவதும்**
**மறுவொடு மிடைந்து மாண்பில வாகிய**
**சிறுசொற் கிளவி கேளல செவியென**
**அங்கையிற் புதைஇ யணிநிற மழுகிய**
**நங்கையைத் தழீஇ நன்னுத னீவி**
**மனங்கொள் காரண மருளக் காட்டி**
**இனமி லொருசிறை யின்னினி தாகப்**
**பூமலி சேக்கையுட் புகுத்தினென் போந்தேன்**
**பாயலு ளாயினும் பரிவவ டீர்கென**
**இஃதவ ணிலைமை யின்னினிக் கொண்டு**
**பரிவுமெய்ந் நீங்கிப் பசலையுந் தீர்கென**
**ஒண்ணுதன் மாதர் கண்ணேப் பெற்ற**
**புண்ணுறு நெஞ்சிற் புலம்புகை யகல**
**மாதர் நுதலிய மருந்தியற் கிளவி**
**ஆருமி லொருசிறை யன்புறப் பயிற்றி**
**நிலைமைக் கொத்த நீதியை யாகித்**
**தலைமைக் கொத்த வதுவை யெண்ணென**
**இழுக்க மில்லா வியல்பொடு புணர்ந்த**
**ஒழுக்க மெல்லா மோம்படுத் துரைஇ.** **(1:36: 311-330)**

என்னும் பாடலடிகள், சாங்கியத்தாய் உதயணனிடம் வாசவதத்தை படும் துன்பங்களை எடுத்துக்கூறி விரைவில் அவளை மணம் செய்துகொள்ளுமாறு கூறுவதாக அமைந்துள்ளது.

**உடன்போக்கு**

தலைவன் தலைவியை ஊரை விட்டுத் தன்னுடன் அழைத்துக் கொண்டு செல்லுதல் உடன்போக்கு எனப்படும்.

தலைவியை உடனழைத்துச் செல்லும் தலைவன், பாலைநில வழியில் ஆலமரநிழலில் இளைப்பாறி வருந்தாமல் வழி நடக்குமாறு கூறுவதனை,

**வருமழை கரந்த வானிற விசும்பின்**
**நுண்டுளி மாறிய உலவை யங்காட்**
**டால நீழ லசைவு நீங்கி**
**யஞ்சுவழி யஞ்சாது அசைவழி அசைஇ**
**வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள்**
**இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை**
**வீமல ருதிர்ந்த தேனாறு புறுவிற்**
**கானல் வார்மணல் மரீஇக்**
**கல்லுறச் சிவந்தநின் மெல்லடி யுயற்கே. (நற்றி. 76)**

என்னும் பாடலின்வழி அறியலாம்.

இதனை பெருங்கதை,

**அனித்த மிதிப்பினும் பனித்த லானா**
**ஒளிச்செஞ் சீறடி யுருக்கரக் கேய்ப்ப**
**உளித்தலை வெம்பர லூன்றுபு நலியப்**
**பவளக் கொப்புளம் பக்கம் பயிலத்**
**தவளைக் கிண்கிணி தாங்குத லாற்றா**
**திவள திடுக்க ணிசைத்தும் யாமெனத்**
**ததும்புகுரற் பூச லிரங்குவன வொலிப்ப**
**மணங்கமழ் நறுந்தார் மன்ன குமரன்**
**வயந்தகற் குரைக்கும் வாலிழை வருந்தினள்**

**இயங்குதல் செல்லா திருக்குமிடங் காணெனக்**

**………………**

**வள்ளிலை வாடலும் வயந்தகன் களைந்து**

**பாய லமைத்த பாசடைப் பள்ளியுள்**

**ஆய்வளைத் தோளியை யமர்துயில் கொளீஇத்**

**தடம்பெரும் பொய்கை தண்ணிழல் வலியா**

**ஒடுங்கினர் மாதோ கடும்பகல் கரந்தென்.** (1:53: 162-184)

என்னும் பாடலடிகள், வாசவதத்தையினது அனிச்சமலரை மிதிப்பினும் வருந்தக்கூடிய சிவந்த சிறிய அடிகள் செல்லும் வழியின் வெப்பத்தில் சிவந்து, பருக்கைக்கற்கள் அழுந்திக் கொப்புளங்கள் தோன்றின. இதனைக் கண்ட உதயணன் வயந்தகனிடம் இனி வாசவதத்தை நடத்தல் கூடாது தங்குதற்குரிய இடத்தைக் காண்பாயாக என்று கூற, இலவ மரத்தின் அடியைக் கண்டு அங்குள்ள உதிர்ந்த சருகுக் குவியலையும் பெரிய இலைகளையும் வாடிய மலர்களையும் அவ்விடத்தில் இருந்து அகற்றி தூய்மை செய்து பசிய இலைகளைப் பரப்பி மெத்தென்ற படுக்கையை அமைத்தான். அதில் வாசவதத்தையைத் துயில் கொள்ளச் செய்து உதயணன் முதலியோர் அம்மர நிழலில் பிறர் அறியாதவாறு இருந்தனர் என்று கூறுகின்றது.

## செவிலி நிலை

பந்தாடினாலும், கழங்காடினாலும் மேனி வருந்தி நெற்றியில் வியர்வை அரும்பச் செவிலியை அணைத்துக்கொள்ளும் தலைவி ஆயத்தாரை மறந்து தந்தையின் காவல் கட்டுப்பாட்டையும் கடந்து தன் சிறிய அடிகளில் எவ்வாறு சுரநெறியைக் கடந்து செல்வாளோ என்று சங்க இலக்கியச் செவலி சொல்லி புலம்புகின்றாள். இதனை,

**வளம்கெழு திருநகர்ப் பந்துசிறிது எறியினும்**

**இளந்துணை ஆயமொடு கழங்குஉடன் ஆடினும்**

**உயங்கின்று அன்னை என்மெய் என்று அசைஇ**

**மயங்கு வியர் பொறித்த நுதலர், தண்ணென,**

**முயங்கினள் வதியும் மன்னே! இனியே**

**…………..**

**சிறுமுதுக் குறைவி சிலம்பு ஆர் சீறடி**

**வல்லகொல், செல்லத் தாமே – கல்லென**

**…………..**

**வைகுறு மீனின் தோன்றும்**

**மைபடு மாமலை விலங்கிய சுரனே!** **(அக. 17)**

இப்பாடலிலும்,

**தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின்**

**………….**

**கொல்லை இரும்புனம் நெடிய என்னாது**

**மெல்லென் சேவடி மெலிய ஏக**

**வல்லுநள் கொல்லோ தானே – தேம்பெய்து**

**அளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள்,**

**இடுமணற் பந்தருள் இயலும்**

**நெடுமென் பணைத்தோள், மாஅ யோளே!** **(அக. 89)**

என்ற பாடலிலும் காணலாம். மேலும் தலைவியின் மென்மைத் தன்மையும் இப்பாடல்களின் வழிப் புலனாகின்றது.

இதனை பெருங்கதை,

**அம்பொன் வள்ளத் தமிழ்துபொதி யடிசில்**

**கொம்பி னொல்கிக் குறிப்பிற் கொள்ளாய்**

**செம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்ப**

**மணிநில மருங்கிற் பந்தொடு மறலிநின்**

**அணிவளைப் பணைத்தோ ளசைய வாற்றாய்**

**இன்றீங் கிளவி யொன்றிரண்டு மிழற்றிப்**

**பண்சுவைத் தொழிந்து பாலி றோன்முலை**

**ஒண்முக விரலிற் கண்முக ஞெமிடி**

**மையார் நெடுங்கண் மாலை யாமத்துப்**

**பையாந்து பொருந்திப் பள்ளி கொள்வோய்**

**காதற் காளை கானத் தொய்ப்பப்**

**போதற் கண்ணே புரிந்தனை யோவெனச்**

**செவிலித் தாய ரவலித் தழவும்.** (1:46: 294-306)

என்ற இவ்வரிகளில் செவிலித்தாய் தலைவியின் மென்மைத்தன்மையைக் கூறியும், அவள் தன் மீது கொண்டுள்ள அன்பையும் மறந்து அவனோடு செல்வதை விரும்பி சென்றுவிட்டாளே? என்று வருந்துவதனைக் காணலாம்.

## நற்றாய் நிலை

சங்க அக இலக்கியத்தில் நற்றாய் தலைவியின் உடன்போக்கு அறிந்து புலம்புவதாகப் பாடல்கள் உள்ளன. சான்றாக,

**அகல்அறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை**

**ஒள்இலைத் தொடலை தைஇ, மெல்லென**

**நல்வரை நாடன் தற்பா ராட்ட**

**யாங்குவல் ஓநள்கொல் தானே…**

**……….**

**முகைதலை திறந்த வேனிற்**

**பகைதலை மணந்த பல்அதர்ச் செலவே!** (அக. 105)

என்னும் பாடலடிகள், தலைவியின் உடன்போக்கினை எண்ணி நற்றாய் புலம்புவதாக அமைந்துள்ளது.

தலைவியின் பிரிவினில் என் உயிர் கெட்டழிவதாக என்று மனம் நொந்து நற்றாய் கூறுவதாக,

**தாயும்**

**இன்தோள் தாராய், இறீஇயர் என் உயிர்!** (அக. 165: 7-8)

என்னும் இப்பாடல் அமைந்துள்ளது.

இதுபோன்றே, பெருங்கதையிலும் தலைவி உடன்போக்குச் சென்றதை அறிந்த நற்றாய் கண்ணீர் விட்டுப் புலம்புவதாக ஆசிரியர் படைத்துள்ளார். இக்கருத்தை,

**இசைகொள் சீறியா ழின்னிசை கேட்ட**

**அசுண நன்மா வந்நிலைக் கண்ணே**

**பறையொலி கேட்டுத்தன் படிமறந் ததுபோல்**

**நீலத் தன்ன கோலத் தடங்கண்**

**முத்துற ழாலி தத்துவன தவழப்**

**பெறலரு மென்மகள் பிரிந்தன ணம்மெனக்**

**கூறிய கிளவி கூற்றுவ னிமிழ்த்த**

**பாசம் போலப் பையுள் செய்ய**

**அலமந் தழூஉ மஞ்சி லோதியை.** (1:47: 241-249)

என வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன. நற்றாய் தன் மகள் உடன்போக்குச் சென்றதனைக் கேட்டவுடன் அவளது பெரிய கண்களில் இருந்து முத்துப் போன்ற நீர்த்துளிகள் வீழ்ந்து ‘பெறலரும் நம்மகள் வாசவதத்தை நம்மைப் பிரிந்து போயினள்’ என்று அரசன் கூறியது கூற்றுவனால் தன்னைக் கட்டப்பட்ட கயிறு போன்று பெருந்துன்பத்தை அடைந்து கலங்கினாள்.

சங்க இலக்கியத்தில் தலைவியின் உடன்போக்கில் நற்றாய், செவிலித்தாய், தோழி போன்றறோர் புலம்புவதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் பெருங்கதையில், நற்றாய், செவிலித்தாய், தோழி அவர்களைப் போன்று பணிமகளிர், கவரியேந்தியவர் போன்றோரும் வருந்துவதாகக் கொங்குவேளிர் காட்டியுள்ளார்.

### பிரிவுத்துயர்

தலைவி அல்குல் பகுதியில் மணியணி அணிந்திருக்கிறாள். பச்சை நிற வயிரங்களும் அந்த மணியணியில் பதிக்கப்பட்டுள்ளன. அவை ஒளி வீசுகிறது. அவள் திருமகள் போன்ற மாமை நிறம் கொண்டவள். இன்று இவளுடன் இன்பமாக இருக்கிறேன். ஆனால் நாளை இவளைப் பிரிந்து செல்லப்போவதனை எண்ணி தலைவன் வருந்துகின்றான். இதனை,

**வினைவனப்பு எய்திய புனைபூண் சேக்கை**

**விண்பொரு நெடுநகர்த் தாங்கி இன்றே**

**இனிது உடன் கழித்தன்று மன்னே நாளைப்**

**பொருந்தாக் கண்ணேம் புலம்புவந்து உறுதரச்**

**சேக்குஉம் கொல்லோ நெஞ்சே. (அக. 167: 3-7)**

என்ற பாடலின்வழி அறியமுடிகின்றது.

இதனைப் போன்று பெருங்கதை,

**பானிறச் சேவல் பாளையிற் பொதிந்தெனக்**

**கோண்மடற் கமுகின் குறிவயிற் காணாது**

**பவழச் செங்காற் பன்மயி ரெருத்திற்**

**கவர்குர லன்னங் கலங்கல் கண்டும்**

**தனித்துளங் கவல்வோன் றான்வீழ் மாதர்**

**மணிக்கேழ் மாமை மனத்தின் றலைஇப்**

**புள்ளுப்புலம் புறுக்க வுள்ளுபு நினைஇ**

**மன்றனா றொருசிறை நின்ற பாணியுள். (1:33: 32-39)**

என்னும் பாடலடிகள், மணிபோன்ற நிறமுடைய மாமை நிறம் தன்னெஞ்சத்தை இடையறாது வருந்துவதாகவும் பிரிவாற்றாமையால் உதயணன் வாசவதத்தையை எண்ணித் துயரடைவதாகக் கூறுகின்றது.

### காதலர் மனம்

அழகிய தந்தங்களை உடைய ஆண்யானை மிகுந்த மதத்தால் பாகனது அங்குசத்துக்கு அடங்காமல் நடந்துக்கொள்வது போல என் மனமும் அவள் மேல் கொண்ட வேட்கையினால் கட்டுப்படாமல் செல்கிறது என்று தலைவன் தலைவியைக் கண்டபோது தன் மனம் மதம் பெற்ற யானையாயிற்று என்று கூறுவதனை,

**எழில் மருப்பு எழில் வேழம் இகுதரு கடாத்தால்**

**தொழில் மாறித்தலை வைத்த தோட்டி கை நிமிர்ந்தாங்கு**

**அறிவும் நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு**

**வறிதாக பிறர் என்னை நகுபவும், நகுபு உடன்.**

**(கலித்.138: 1-4)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**வண்டுபடு கடாஅத்த வலிமுறை யொப்பன**

**பண்டுகடம் படாஅ பறையினுங் கனல்வன**

**விடற்கருந் தெருவினுள் விட்ட செவ்வியுட்**

**டுடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து**

**மதக்களி றிரண்டுடன் மண்டி யாஅங்கு. (1:32: 34-38)**

என்னும் பாடலடிகள், பிரச்சோதனன் முன்னர் முதன் முதலாக வாசவதத்தையும் உதயணனும் ஒருவரையொருவர் கண்டபோது, பிடியும் களிறும் ஒன்றையொன்று நோக்கி நின்றது போல் உதயணனும் வாசவதத்தையும் ஒருவரையொருவர் நோக்கினர். மதம் கொண்ட யானைகளைச் செல்வதற்கரிய சிறிய தெருவில் விட்டபோது செருக்குற்று, பாகர் கட்டுப்பாட்லும் அடங்காது, தன்னுடைய மனம் போனவாறு விரைந்து செல்வது போன்று அவர்கள் பார்வையும் ஒன்றோடொன்று கலந்தது என்று கூறுகின்றது.

## பெண்ணின் அழகு

**சேவடிச் செறிகுறங்கிற்**

**பாசிழைப் பகட்டல்குல்**

**தூசுடைத் துகிர்மேனி**

**மயிலியல் மானோக்கிற்**

**கிளிமழலை மென்சாயலோர். (பட்டின. 146-150)**

என்று சங்கப்பாடல் பெண்ணின் அழகினைக் கூறுகின்றது.

பசுமையான சுனைநீரில் ஆடிய பெண்களின் கருங்கண்கள் அழகிய இதழ்களையுடைய தாமரை இதழ்களைப் போல இருந்தன. அவர்களின் முகம் தாமரை மலர், அவர்கள் பாதங்கள் தாமரைமலர், அவர்கள் தோள்கள் பொற்றாமரைக் குளத்துத் தாமரை மலர், அவர்கள் உள்ளங்கைகள் தாமரைமலர், அவர்கள் மார்பகங்கள் தாமரைமுகைகள், அவர்கள் செவ்வாய் ஆம்பல் மலர் இவ்வாறு தாமரை மலராக பெண்களின் அழகினைக் கூறுகின்றது பரிபாடல். இதனை,

**பைஞ்சுனைப் பாஅய் எழு பாவையர்**

**ஆயிதழ் உண்கண் அலர்முகத் தாமரை**

**தாள்தா மரைத் தோள் தமனியக் கயமலர்**

**தங்கைப் பதுமம், கொங்கைக் கயமுகை**

**செவ்வாய் ஆம்பல் செல்நீர்த் தாமரை.** (பரி.8: 112-116)

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

முருக்கம்பூவின் இதழ்கள் போல இனிய சிவந்த வாயிதழ்களையும், அழகிய இனிய பேச்சினையும், தெரிந்தெடுத்த ஆபரணங்கள் அணிந்த சிறப்பினை உடைய தலைவி என்று அழகினைக் கூறுகின்றது. இதனை,

**பின்நின்று துரக்கும் நெஞ்சம் நின்வாய்**

**வாய்போற் பொய்ம்மொழி எவ்வமென் களைமா**

**கவிரிதழ் அன்ன காண்பின் செவ்வாய்**

**அந்தீங் கிளவி.** (அக. 3: 13-16)

என்ற பாடடிகள் உணர்த்துகின்றன.

இதனைப் பெருங்கதை,

### வாசவதத்தையின் அழகு

**தெய்வத் தாமரைத் திருமகட் கெடுத்தோர்**

**ஐயப் படூஉ மணியிற் கேற்ப**

**ஒண்மையு நிறையு மோங்கிய வொளியும்.** (1:34: 149-151)

என்னும் பாடலடிகள் வாசவதத்தையின் அழகினைக் கூறுகின்றது.

### பதுமாபதியின் அழகு

**பசும்பொற் கிண்கிணி பரடுசுமந் தரற்ற**

**அசும்பம றாமரை யலைத்த வடியினள்**

**……….**

**நண்புவீற் றிருந்த நலத்தகு குறங்கினள்**

**மணியும் பவழமு மணிபெற நிரைஇய**

**செம்பொற் பாசிழை செறிய வீக்கிய**

**பைந்துகி லணிந்த பரவை யல்குலள்**

**துடிதோங் கூறிய விடுகிய நடுவிற்குப்**

**பார மாகிய வீரத் தானையள்.** (3:5: 10-19)

இவ்வரிகளில் பதுமாபதியின் அழகினைக் காணமுடிகின்றது.

## மானனீகை அழகு

பிழையாத்
தேவியர்க் கெல்லாந் தேவி யாகிய
திருத்தகு கற்பிற் றீங்குயிற் கிளவி
வரிக்குழற் கூந்தல் வசுந்தரி தன்மகள்
மானே யன்ன மயிலே மால்வரைத்
தேனே பவளந் தெண்கட னித்திலம்
கயலே காந்தள் புயலே பொருவிற்
பையே பொற்றுடி படைநவில் யானைக்
கையே குரும்பை கதிர்மதி வேயே
நோக்கினு மொதுக்கினு மாக்கே முணிந்த
………….
கோசலத் தரசன் கோமகட் பூவணி
வாசச் சுரிகுழன் மாணிழை யொருத்தியென்
றாங்கொரு காரணத் தவள்வயி னிருந்தோள். (4:12: 143-167)

என்று மானனீகையின் அழகினைக் கூறுகின்றது.

## விரிசிகையின் அழகு

ஏதம் இன்றி இறைக்கடங் கழித்துக்
காதற் பெருந்தொடர் களைதல் ஆற்றான்
மாதர்த் தேவியொடு மாதவம் புரிந்த
மன்னவ முனிவன் தன்னமர் ஒருமகள்
அணித்தகு பேரொளி அரத்தம் அடுத்த
மணிப்பளிங் கன்ன மாசில் வனப்பின்
உகிரணி பெற்ற நுதிமுறை சுருங்கி
……….
பையழித் தகன்ற பரந்தேந் தல்குல்
துடிநடு அன்ன துளங்கிய நுசுப்பின்
கொடியடர்ந் தொழுகிய கோல மருங்கின்

**புனற்சுழி அலைத்துப் பொருந்திய கொப்பூழ்**

**வனப்புவீற் றிருந்த வாக்கமை அவ்வயிறு. (2:15: 48-69)**

என்ற வரிகளின் மூலம், விரிசிகையின் அழகினை பெருங்கதை கூறுகின்றது.

**அணிகலன்கள்**

தலைவி அல்லது தலைவனைக் குறிப்பிடும்போதும் அவர்தம் செயல்களைச் சுட்டும் போதும் அவர்கள் அணிந்துள்ள அணிகலன்களோடு சுட்டுவது அகஇலக்கிய மரபாகும். சான்றாகப் பின்வரும் பாடற்பகுதிகளில் பல்வேறு அணிகலன்களோடு தலைவி குறிக்கப்படுதலைக் காணலாம்.

பூண், அணி, பணி, இழை, கலன், நகை முதலிய சொற்கள் அணிகலன்களைக் குறிப்பனவாகும்.

**கால் அணிகள்**

**சிலம்பு**

சிலம்பு காலில் அணியக்கூடிய அணிகலன்களில் ஒன்றாகும்.

**அருங்கடி வியல் நகர்ச் சிலம்பும் கழியாள். (அக. 315: 8)**

**சிறு வன்கண்ணி சிலம்பு கழீஇ. (அக. 385: 17)**

**நும் மனைச் சிலம்பு கழீஇ அயரினும்**

**எம் மனை வதுவை நன்மணம் கழிகென. (ஐங். 399: 1-2)**

**சிலம்பு கழீஇய செல்வம்**

**பிறருழைக் கழிந்த என்ஆயிழை அடியே? (நற்றி. 279: 10-11)**

**வில் வகுப்பு உற்ற நல்வாங்கு குடைச்சூல்**

**அம் சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து. (அக. 198: 9-10)**

இப்பாடலடிகள் வாயிலாக அக்காலத் தமிழகத்தில் சிலம்பு போன்ற அணிகள் மகளிரால் அணியப்பட்டன என்னும் உண்மை ஒளிர்கின்றது. அம்மரபின் தொடர்ச்சியாக, தழுவல் இலக்கியமாகிய பெருங்கதையிலும் தலைமக்களின் அணிகலன்கள் பலவாகச் சுட்டப்பட்டுள்ளன. சான்றாக,

**இலம்புடை நறுமலர் எழுதுகொடிக் கம்மத்துச்**

**சிலம்பு. (3:14: 136-137)**

எனவரும் பாடற்பகுதிகள் அமைகின்றன.

நறிய மலர்களோடு கூடிய பூங்கொடி எழுதிய ஓவியக் கலை நுணுக்க வேலைப்பாட்டோடு சிலம்பு அமைந்திருந்ததெனப் பெருங்கதை கூறுகின்றது.

**கிண்கிணி**

**கிண்கிணி மணித் தாரோடு ஒலித்து ஆர்ப்ப.** (கலித். 74:13)

**தவளை வாய பொலஞ்செய் கிண்கிணி.** (குறுந். 148: 2)

**குரும்பை மணிப் பூண் பெருஞ் செங் கிண்கிணி.** (நற்றி. 269:1)

இப்பாலடிகள் மூலமாக மகளிர் கிண்கிணி என்னும் அணிகலனை அணிந்துள்ளனர் என்தனை அறியமுடிகின்றது. இதனைப் பெருங்கதை,

**ஆடு பொற் கிண்கிணி அடிமிசை அரற்ற.** (2:14: 42)

**தானே வவ்விய தவளை அம் கிண்கிணி** (5:9: 90)

என்னும் பாடலடிகளில் அம்பொற் கிண்கிணி, செம்பொற் கிண்கிணி, அரங்கொல் கிண்கிணி, பசும்பொன் கிண்கிணி, சூடுறு கிண்கிணி, ததும்புங் கிண்கிணி, தவளையங் கிண்கிணி, பைம்பொற் கிண்கிணி, பகுவாய்க் கிண்கிணி, பொன்னணிக் கிண்கிணி, பொற்பூங் கிண்கிணி, மழலைக் கிண்கிணி எனப் பல்வேறு அடைமொழிகளைக் கொண்டு அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

## இடை அணிகள்

### மேகலை

மேகலை என்ற சொல்லானது இலக்கிய நூல்களில் பெரிதும் காணப்படுகின்றது. மணிமேகலை என்னும் அணிகலனானது ஒரு காப்பியத்தின் பெயராக அமைந்துள்ளது.

**மேகலை, காஞ்சி, வாகுவலயம்.** (பரி.7: 47)

**தார்மணி பூண்ட தமனிய மேகலை.** (கலித்.96: 15)

**வார்அணி கொம்மை, வகைஅமை மேகலை.** (பரி.22: 30)

**மேகலை**

**ஏணிப்படுகால் இறுகிறுகத் தாள் இடீஇ.** (பரி.10: 10-11)

என்ற பாடலடிகள் வாயிலாக மேகலையைப் பெண்கள் அணிந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. இதனைப் தழுவல் இலக்கியமாகிய பெருங்கதை,

**மணியும் பவழமும் அணிபெற நிரைஇய**

**செம்பொற் பாசிழை செறிய வீக்கிய. (3:5: 15-16)**

**சித்திரக் கை வினை செறிந்த கோலத்துப்**

**பத்திரப் பாம்பு உரி அத் தகக் கலாஅய்**

**முற்பட வளைஇய பொற் படைப் படுகால். (3:3: 16-18)**

எனவரும் பாடலடிகள் வழி கூறுகின்றன.

**பாண்டில்**

பாண்டில் என்பது மகளிர் வயிற்றுக்குக் கீழ் இடையில் அணியும் அணிகலனாகும். இதனை அக்காலப் பெண்கள் அணிந்திருந்தனர் என்பதனை,

**பொன்செய் பாண்டில் பொலங்கலம் நந்த. (ஐங். 316:1)**

**பொலம்பசும் பாண்டில் காசுநிறை அல்குல். (ஐங். 310:1)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**பவழக் காசொடு பன்மணி விரைஇத்**

**திகழக் கோத்த செம்பொற் பாண்டில். (2:19: 142-143)**

என்ற பாடலடிகளில் பாண்டில் பற்றிக் காணமுடிகிறது.

**அரசிலை**

அரச இலை வடிவாகப் பொன்தகட்டினால் செய்யப்பட்ட அரையணி அரசிலை எனப்பட்டது. இதனை சங்க இலக்கியத்தில்,

**உடுத்தவை கைவினைப் பொலிந்த காசமை பொழங்காழ்; மேல்**

**மையில் செந்துகிர்க் கோவை; அவற்றின் மேல்**

**தைஇய பூந்துகில் ஐதுகழல் ஒருதிரை. (கலித்.85: 3-5)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதையில்,

**அணிக்கலை புனைந்த அரசிலைப் பொன்அடர். (2:7: 23)**

என்று காணமுடிகின்றது.

### கழுத்து அணிகள்

#### தாலி

தாலி என்பது இங்கு மாங்கல்யத்தினைக் குறிப்பது இல்லை. இது அணிகலன்களில் ஒன்றாக கூறப்படுகின்றது.

சிறுவர் கழுத்தில் ‘தாலி’ அணிவிக்கும் பழக்கம் சங்ககாலத்தில் இருந்துள்ளது. இதனை,

**புலிப்பல் தாலிப் புதல்வர்ப் புல்லி. (குறுந். 161:3)**

**பொன்னுடைத் தாலி என் மகன் ஒற்றி. (அக.54: 18)**

இதில் சிறுவர்கள் அணியும் தாலியைக் குறிப்பிடுகின்றது.

**புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி. (அகநா.7: 18)**

இதில் தலைவி பொன்இழையால் புலிப்பல்லைக் கோத்த மணித்தாலி அணிந்திருப்பாள் என்று செவிலி கூறுவதாக அமைந்துள்ளது.

இதனைப் பெருங்கதையில்,

**பன்மணிப் பூணும் சின்மணித் தாலியும். (2:19: 119)**

**மும்மணிக் காசும் பன்மணித் தாலியும்**
**பொன்மணிக் கொடியும் பூணும் சுடர. (5:9: 49-50)**

**சில்லென் அரும்பு வல்லிதின் அமைத்து**
**நச்சு அரவு எயிற்றின் நல்லோன் புமைந்த**
**நெற் சிறு தாலி நிரல் கிடந்து இலங்க. (4:16: 27-29)**

என்றபாடலின் வழி அறியலாம்.

### கை அணிகலன்கள்

#### வளை

வளைக்கு அடைமொழியாகப் பல்வேறு சொற்கள் காணப்படுகின்றன.

**அணிவளை (அக. 361:4)**

**அரம்போழ் அவ்வளை (ஐங். 185:3)**

**ஆய்வளை (நற்றி. 60:11)**

**இடுபுணர்வளை (பரி. 12:23)**

**இலங்குவளை (ஐங். 136:2)**

| | |
|---|---|
| **இறைவளை** | **(அக. 250:13)** |
| **எல்வளை** | **(ஐங். 20:5)** |
| **ஒள்வளை** | **(கலித். 145:36)** |
| **சிறுவளை** | **(நற்றி. 300:5)** |
| **சுரிவளை** | **(குறுந். 260:3)** |
| **செறிவளை** | **(அக. 186:17)** |
| **நேர்வளை** | **(ஐங். 269:3)** |
| **வீங்குவளை** | **(ஐங். 285:4)** |

இவ்வாறு சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

**பொன் வளை**

பொன்னால் செய்யப்பட்ட வளையைப் 'பொற்றொடி' என்றும் கூறுவர்.

**யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை. (அக. 16:5)**

யாவரும் விரும்பும் பொற்றொடி அணிந்த புதல்வனை தெருவில் பார்த்த பரத்தை, அவனைத் தூக்கி தழுவி கொண்டாள் என்பதன்வழி பொன்வளை அணிந்த செய்தி காணப்படுகின்றது. இதேபோன்று,

**சின்மயிர் முன்கைப் பொன்வளை முதலா. (3:22: 232)**

என்ற வரிகளின் மூலம் பெண்கள் கைகளில் பொன் வளையல் அணிந்திருந்தனர் என்ற செய்தியினைப் பெருங்கதை கூறுகின்றது.

**கடகம்**

கடகம் என்பது ஒரு கையணி ஆகும். இதனை சங்க இலக்கியத்தில்,

**முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிது நினைந்து. (முல். 76)**

என்ற பாடல் வரிகளின் மூலம் இதனை அறியலாம். இத்தகையச் செய்தி தழுவல் இலக்கியமாகிய பெருங்கதையில்,

**கொடியொடு துளங்கி அடிபெற வகுத்த**
**அருமணிக் கடகம். (2:19: 137-138)**

**கண்ஆர் கடகமொடு கைபுனைந்து இயற்றிய (3:22: 233)**

என்ற அடிகளால் அறியலாம்.

### மோதிரம்

கை விரல்களில் பல்வேறு வகைப்பட்ட மோதிரங்களை அக்காலத்தில் அணிந்திருந்தனர். இதனை,

**சுறாஏறு எழுதிய மோதிரம் தொட்டாள். (கலித். 84: 23)**

என்று கலித்தொகைப் பாடலின் வழி அறியலாம். மேலும் நெடுநல்வாடையிலும் மோதிரம் அணிந்திருப்பதனைக் காணமுடிகின்றது. இதனை,

**வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்**

**செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்து. (நெடு. 143-144)**

என்ற பாடலில் வாளையின் அங்காந்த வாயைப் போன்று மடக்கிச் செய்யப்படும் மோதிரம் என்று கூறுவதனை அறியலாம்.

மோதிரங்களில் தம் பெயரைப் பொறித்துக் கொள்ளும் வழக்கம் இருந்தது. அவ்வாறு பெயர் பொறிக்கப்பட்ட மோதிரத்தை 'நாம மோதிரம்' என்று கொங்குவேளிர் குறிப்பிடுகின்றார். இதனைப் பெருங்கதையில்,

**நாம மோதிரம் தாள்முதற் செறித்து. (3:9: 70)**

என்ற அடிகளால் அறியலாம்.

### காது அணிகள்

### குழை

இச்சொல் 'தளிர்' என்னும் பொருளை உடையது. பின்னர் உலோகத்தால் ஆன அணிகலனைக் குறித்தது. காதணிகளில் ஒன்று குழை. பின்வரும் அடைமொழிகளுடன் இச்சொல் இலக்கியத்தில் வருகின்றது.

| | |
|---|---|
| **அரிக்குழை** | **(கலித். 109:14)** |
| **அவிர்குழை** | **(அக. 253:26)** |
| **கனங்குழை** | **(குறுந். 398: 3)** |
| **சோர்குழை** | **(நற்றி. 20:9)** |
| **பூங்குழை** | **(குறுந். 159:5)** |
| **வரிக்குழை** | **(கலித். 104:22)** |
| **வினைக்குழை** | **(பரி. 12:87)** |

என்று காணமுடிகின்றது.

பட்டினப்பாலையில்,

காவிரிப்பூம்பட்டினம் செல்வ வளம் மிக்கது. அதனால் மகளிர் காதுகளில் அணிந்த பொற்குழையை கொண்டு வீட்டுவாசலில் உலர்த்தப்பட்ட நெல்லைத் தின்பதற்கு வந்த கோழிகளை விரட்டினர். இதனை,

**நேரிழை மகளிர் உணங்குணாக் கவருங்**
**கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை. (பட்டின. 22-23)**

என்னும் பாடலடிகள் சுட்டும்.

இதனைப் பெருங்கதையும் குறிப்பிடக் காணலாம்.

**குழைஅணி காதின் குளிர் மதி முகத்திக்கு. (2:18: 5)**

பெண்கள் குழை அணிந்த செய்தியினைக் காணமுடிகின்றது.

## தலை அணிகலன்கள்

### நெற்றிச்சுட்டி

நெற்றியில் தொங்குமாறு அணியப் பெற்றது, ‘நெற்றிச்சுட்டி’ எனப்பட்டது.

**நூல் அமை பிறப்பின் நீல உத்தி (அக.400: 5)**

இலக்கணம் அமைந்த நீலமணியால் ஆகிய நெற்றிச்சுட்டியினை அணிந்திருந்தனர். இச்செய்தியை பெருங்கதை,

**திருநுதல் சுட்டி திகழச் சூட்டி. (1:34: 196)**

என்ற பாடல் வரிகளின் மூலம் காணலாம்.

## ஒப்பனை

ஒப்பனை செய்வதற்கு ஒப்பனை மகளிர் இருந்தனர். அவர்கள் வண்ண மகளிர் எனப்பட்டனர்.

### ஆடை ஒப்பனை

**பூந்துகில் மரீஇய ஏந்து கோட்டல்குல். (நெடு. 145)**

சங்க காலத்தில் ஆடை ஒப்பனை செய்துகொண்டனர் என்பதனை அறியமுடிகின்றது. இதனைப் பெருங்கதை,

**வரிக் குப்பாயத்து வார் பொற்கச்சையர். (1:40: 378)**
**படாஅத் தன்ன படிவத்தாகிய**
**வடகப் போர்வை வனப்பொடு திருத்தி. (1:45: 9-10)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

**வட்டம்**

பெருங்கதையில் வெண்மையான இழையால் நெய்யப்பட்ட ஆடை (வட்டம்) அணிந்திருந்தனர் என்ற செய்தியினைக் காணமுடிகின்றது. இதனை,

**வாலிழை வட்டம். (1:42: 208)**

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

இவற்றில் உத்தரியம், ஒலியல், தானை, துகில் என்பன மேலாடையைக் குறிக்கின்ற சங்க இலக்கியச்சொற்கள் ஆகும்.

**உத்தி ஒருகாழ் நூல் உத்தரியத்தின் பிடி (கலித். 96)**

**உடையும் ஒலியலும் செய்யை. (பரி. 19:97)**

**புடைவீழ் அம்துகில் இடவயின் தழீஇ. (நெடு. 181)**

**மீப்பால் வெண்டுகில் போர்க்குநர், பூப்பால் வெண்டுகில்**

**சூழ்ப்பக் குழல் முறுக்குநர். (பரி.10: 79-80)**

என்பதன் வழி ஆடை ஒப்பனையை சங்க இலக்கியத்தில் அறியலாம்.

**கூந்தல் ஒப்பனை**

கூந்தலைத் தூய்மை செய்ய, பத்து வகையான துவர்கள் பயன்படுத்தப்பட்டன. இதனை,

**தண்ணந் துவர்பல ஊட்டிச் சலங்குடைவார்**

**எண்ணெய் கழல விழைதுகள் பிசைவார். (பரி.10: 90-91)**

என்னும் பாடலடிகள் கூந்தலைத்தூய்மை செய்ய பத்து வகை துவர்களையும் தேய்த்துக்கொண்டு நீரில் முழ்கியதைக் கூறுகின்றது.

**ஈரம் புலர விரல் உளர்ப்பு அவிழா**

**காழ் அகில் அம் புகை கொளீஇ. (குறிஞ். 109-110)**

குளிர்ந்த நறுமணமான சாந்தினை மணம் கமழ பூசி, ஈரம் உலர விரலால் கோதி அகிலின் புகையை ஊட்டியிருந்தனர் என்பதனை அறியலாம்.

இதனைப் பெருங்கதையில்,

பத்துவகைத் துவரும் (நாவல் அல்லது பூவந்தி, கடு, நெல்லி, தான்றி, ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு அல்லது கருங்காலி, மாந்தளிர்) ஊற வைத்த

நறிய நீரைக் கூந்தலில் ஆங்காங்கே தெளித்து உருவிக் கருமை ஏற்றினர். பின்னர் அகிற் கட்டையிட்டு எழுப்பிய நறுமணப் புகையை ஊட்டிக் கோதிவிட்டுச் சிக்கில்லாமல் வாரினர் என்பதை,

**நறுநீர்த் துவர்க்கை வயின்வயின் உரீஇக்**

**கறைமாண் காழ்அகில் கொழும்புகை கொளீஇ**

**நெறித்து நெறிப்பட வாருநர் முடித்து.** (3:22: 208-210)

பாடலின் வழி அறியலாம்.

**நக ஒப்பனை**

அகநானூறு நக ஒப்பனையை,

**குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று**

**நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்.** (317: 4-5)

என்கிறது.

கொங்குவேளிரும் வாசவதத்தையின் ஒப்பனையை பற்றிச் சொல்லும் போது, சிவந்த அடியின் அழகுக்கேற்ப பாதித் திங்கள் போல நகத்தினைக் குறைத்து, அழகுடைய அந்தநகத்திற்கு கிளிமூக்கினை உவமையாகக் கூறியுள்ளதைக் காண்கிறோம். இதனை,

**சேவடிக் கேற்பச் செழுமதிப் பாகென**

**வாருகிர் குறைத்து வனப்பு வீற்றிரீஇய**

**ஒண்ணிறக் கல்லின் நன்னிறம் பெறீஇ.** (2:4: 186-188)

**கிளிவா யன்ன ஒளிவா யுகிரின்.** (2:15: 76)

**கிள்ளை வாயி னன்ன வள்ளுகிர்.** (4:7: 42)

என்ற பெருங்கதைப் பாடலின் வழி அறியலாம்.

**வண்ணப்பொருள் ஒப்பனை**

**சுண்ணம்**

சுண்ணம் முகத்திற்கும் உடம்பிற்கும் பூசுவதற்குரியதாக இருந்துள்ளது.

**தான் சுண்ண நீறு ஆடி.** **(கலித்.97: 10)**

என்னும் பாடலடிகள் பரத்தை ஒருத்தி சுண்ணத்தைத் உடல் முழுதும் பூசிஇருந்தாள் என்பதனைக் கூறுகின்றது.

இதனை பெருங்கதை,

**அந்தர மருங்கின் வண்டுகை விடாஅச்**

**சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்.** **(1:42: 72-73)**

என்னும் பாடலடிகள் விண்ணில் தூவி விட்டால் அவை மண்ணில் விழாதவாறு வண்டுகள் உண்ணுதற்குரிய சுண்ணத்தை மகளிர் பூசிக் கொண்டனர் என்று கூறுகின்றது.

## தொய்யில்

தொய்யில் என்பதற்கு மகளிர் தோள் முலைகளில் வரிக்கோலம் எழுதும் சந்தனக்குழம்பு, மகளிர் தனங்களில் சந்தனக் குழம்பால் எழுதும் கோலம், அழகு, கிளர்ச்சி என்று விக்ஷனரி **(Wiktionary)**, தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது.

**ஏக்கழுத்து நாணான் கரும்பின் அணை மென்தோள்.**

**(பரி.7: 55)**

என்னும் பாடலடிகள் முலையை மூடும் தொய்யகம் என்று கூறுகின்றது.

**உருந்து எழு வனமுலை ஒளிபெற எழுதிய**

**தொய்யில் காப்போர் அறிதலும் அறியார்.** **(குறுந். 276)**

என்னும் பாடல் வரிகள் முலைகளில் தொய்யில் எழுதி பார்ப்பவர் கண்களை உருத்தச் செய்துள்ளதாகக் கூறுகின்றது.

**இளமுலை மேல்**

**தொய்யில் எழுதவும் வல்லன்.** **(கலித்.143: 32-33)**

என்னும் வரிகளில் இளமையான முலைகளில் தொய்யல் எழுதவும் வல்லவன் தலைவன் என்று தலைவி கூறுகின்றாள்.

இதனைப் பெருங்கதை,

**தண்ணறுஞ் சார்ந்த நுண்ணிதி னெழுதிப்** **(1:42: 150)**

என்னும் வரியில் நெற்றியிலும் தோளிலும் தண்ணிய சந்தனத்தால் நுண்ணிய கோலமெழுதினர் எனக் குறிப்பிடுகின்றது.

**தொக்கனர் படியுந் தொய்யின் மகளிர்தம்.** **(1:40: 152)**

என்னும் பாடலடிகள், சந்தனம் முதலியவற்றால் எழுதிய கோலத்தையுடைய மகளிர் ‘தொய்யில் மகளிர்’ என்று கூறுகின்றது.

ஊடல் கொண்ட பெண்ணொருத்தி அழுத கண்ணீர் தொய்யிலில் பட, அது கரைந்து கீழிறங்கிய தன்மை, வானவில் நெகிழ்ந்து உருகினாற் போன்ற தோற்றத்தைத் தந்தது என்பதனை,

**கோல வாகத்துக் கொடிபட வெழுதிய**

**சாதிங் குலிக மாதி யாகச்**

**சுட்டிச் சுண்ணமொடு மட்டித்துக் கலந்த**

**குங்குமக் கொழுஞ்சேறு கூடக் குழைத்திட்**

**மந்திர வின்னெகிழ்ந் துருகி யாங்கு.** (1:40: 220-224)

இப்பாடலின் வழி அறியலாம்.

கொங்கைகளுக்கிடையே முளைத்து அதில் அணிந்துள்ள முத்து மாலைகளினிடையே படர்ந்து, மேலே நெற்றிச் சுட்டியின் கீழ்ச் சுருள் சுருளாய்த் தழைத்துள்ளது எனக் காண்போர் குறிப்பால் உணரும்படி மார்பு, கொங்கை, நுதல் ஆகிய இடங்களில் பூங்கொடி வடிவத்தில் தொய்யில் எழுதினர். இதனை,

**இடைமுலை யெழுச்சித் தாகிப் புடைமுலை**

**முத்திடைப் பரந்த சித்திரச் செய்கொடி**

**முதலின் முன்னங் காட்டி நுதலின்**

**சுட்டியிற் றோன்றிய சுருளிற் றாகி**

**வித்தகத் தியன்றதன் கைத்தொழில் காட்டி.** (1:38: 192-196)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

சந்தனக் கட்டையைத் தேய்த்து அதனுடன் பச்சைக் கருப்பூரம் கலந்த குழம்பினால் மார்பிலும் தோளிலும் அழகுறப் பூங்கொடி வடிவில் எழுதினர். இதனை,

**குளிர்கொள் சாதிச் சந்தனக் கொழுங்குறைப்**

**பளிதம் பெய்த பருப்பிற் றேய்வையின்**

**ஆகமு முலையுஞ் தோளு மணிபெறத்**

**தாரையுங் கொடியுந் தகைபெற வாங்கி.** (4:16: 18-21)

என்ற பாடலின் வழி அறியலாம்.

**வாசவெண்ணெய்**

மணப்பொருள் செய்யும் வாதிகர், நறுமணப் பொருள்களை நிறுத்துச் சீருறக் கலந்து அதனைச்செய்தனர். அவ்வெண்ணெய் மென்மையும் நயமும் மணமும் உள்ளதாய் ஒருநாள் பூசினும் ஓராண்டளவும் விடாது மணங்கமழக் கூடியதாய் சிறப்புப் பெற்றிருந்தது. இதனை,

**மென்மையு நேயமு நன்மையு நாற்றமும்**
**ஒரு நாட் பூசினு மோரியாண்டு விடாஅத்**
**திருமா னுருப்பிற்குச் சீர்நிறை யமைத்துக்**
**கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய**
**வாசவெண்ணெய் பூசினர்.** **(2:5: 97-101)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இதனை,

**ஓசனை கமழும் வாச மேனியர்.** **(12: 25)**

எனப் பரிபாடலும் குறித்துள்ளமை எண்ணத்தக்கது.

**பருவங்கள் (ஏழு)**

மகளிரை ஏழு பருவத்தினராக வகைப்படுத்திக் கூறுவது பிற்கால மரபு. எனினும் ஏழு பருவ மங்கையர் பெயர்கள் தனித்தனியே சுட்டும் போக்கு சங்க நூல்களில் காணப்படுகின்றது. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் எனப் பெண்கள் ஏழு பருவத்தினராய்க் கூறப்படுகின்றன. சங்க இலக்கியத்திலும் இச்சொற்கள் காணப்படுகின்றன. அதனைத் தொடர்ந்து பெருங்கதையிலும் இதனைக் காணமுடிகின்றது.

உலா இலக்கியங்கள் ஏழு பருவப் பெண்கள் பற்றி கூறியுள்ளன. ஏழு பருவப் பெண்களும் உலா வரும் தலைவனைக் கண்டு அவன்மீது காதல் கொண்டு வருந்துவதாகக் கூறப்படுகின்றது. சேரமான் பெருமான் நாயனார் திருக்கயிலாய ஞானவுலா ஏழு பருவப் பெண்கள் குறித்துக் கூறியுள்ளது.

கம்பராமாயணத்தில் கம்பர் ஏழு பருவ மகளிரைப் பற்றி எதிர்கொள் படலத்தில்,

**பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கள் தாம்**
**ஏதிஆர் மாரவேள் ஏவ வந்து எய்தினா்**

**ஆதிவானவர் பிரான் அணுகலால் அணி கொள்கார்**

**ஓதியார் வீதிவாய் உற்றுவாறு வரை செய்வாம். (20: 1062)**

என்ற பாடலின் மூலம் ஏழு பருவத்து மாதரும் இராமன் வரும் அத்தெருவினை அடைந்தனர் என்ற செய்தியினை அறியமுடிகின்றது.

### பேதை

அவள் தன் காதலனைக் கண்டு துன்பத்தை எல்லாம் மறந்தாள். பேதைப் பெண் அவள். சிரிப்பதை மறந்துவிட்டு நாணத்துடன் வணங்கி நிற்கிறாள் என்று பார்த்தவர்கள் சொல்கின்றனர். இதனை,

**காதலன் மன்ற அவனை வரக் கண்டு, ஆங்கு**

**ஆழ் துயரம் எல்லாம் மறந்தனள், பேதை**

**நகை ஒழிந்து, நாணு மெய் நிற்ப. (கலித்.147: 67-69)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**காமம் காலா ஏம நோக்கத்து**

**மாதர் ஆற்றா மழலை கிளவிப்**

**பேதை மகளிர். (1:41: 55-57)**

**கோதையும் குழலும் துள்ளுபு விரியப்**

**பேதை மகளிர் வீதி முன்னினர். (2:7: 102-103)**

என்னும் பாடலில் பேதை மகளிரைப் பற்றிக் கூறுகின்றது.

### பெதும்பை

தாய் ஒருத்தி தன் மகளிடம் நீ பேதைப் பருவத்தினள் இல்லை. இப்பெதும்பைப் பருவத்தே நீ புறத்தே போவது கூடாது என்று அறிவுறுத்துவதனை,

**……….**

**பேதை அல்லை; மேதையங் குறுமகள்;**

**பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்துஎன. (அக.7: 1-7)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**வண்டல் ஆடிய மறுகினுள் காண்பவை**

**கண்டுஇனிது வரூஉங் காலம் அன்றுஎன**

**காவல் கொண்டனர் அன்னையர்.** **(4:15: 124-126)**

என்ற பாடலில் பேதைப்பருவம் முடிந்து பெதும்பைப் பருவம் எய்திய மகளிரை இல்லத்தை விட்டு புறத்தே போக வேண்டாம் என்று அன்னை காவல் செய்தமையைக் கூறுகின்றது.

**மங்கை**

கணவரோடு புணரும் காலத்தில் மங்கையர் தாம் உடுத்தியிருந்த பட்டாடைகளை நீக்கிவிட்டு நொய்ய பஞ்சாடையை உடுத்தினர். இதனை,

**துணைப்புணர்ந்த மடமங்கையர்**

**பட்டுநீக்கித் துகில் உடுத்தும்.** **(பட்டின. 106-107)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**நங்கையர் உள்ளும் மங்கை முற்றாப்**

**பெதும்பை ஆயம்.** **(1:34: 113-114)**

என்னும் பாடலடிகளில் காணமுடிகின்றது.

**மடந்தை**

மணம் கமழும் மென்மையான படுக்கையில் புதல்வன் தூங்க, நீராடியதால் ஈரமான அணிகளுடன் நின்ற மடந்தை பெண்ணை பற்றிக் கூறுகின்றது. இதனை,

**வெறியுற விரிந்த அறுவை மெல்லணைப்**

**புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச**

**ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**

**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்**

**சீர்கெழு மடந்தை.** **(நற்றி.40: 5-9)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**சின்மெல் ஓதி சேர்ந்த சிறுநுதல்**

**குலாஅய்க் கிடந்த கொடுநுண் புருவத்து**

**உலாஅய்ப் பிறழும் ஒள்அரித் தடங்கண்**

**வம்புமீக் கூரும் பொங்கிள முலையின்**

**நுடங்குகொடி மருங்கின், நுணுகிய நுசுப்பின்**

**மகளிர்.** (1:41: 76-81)

என்ற பாடலில் மடந்தைப் பருவத்தினரைப் பற்றிக் கூறுகின்றது.

**அரிவை**

அரிவை திருமணமாகி மகனைப் பெற்றாள் என்பதனை,

**வாள்நுதல் அரிவை மகன்முலை ஊட்ட.** (ஐங். 404: 1)

என்னும் பாடல் வரியில் அறியலாம்.

**அமிழ்துபொதி செந்நா அஞ்ச வந்த**

**வார்ந்துஇலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிவையைப்**

**பெறுகதில் லம்ம யானே.** (குறுந். 14: 1-3)

என்னும் பாடல் அரிவைப் பருவப் பெண்ணான தலைவியைக் கூறுகின்றுது.

இதனைப் பெருங்கதை,

**அம் மென் சாயல் அரிவை மகளிர்**

**செம்மல் சிறுவரைச் செவிலியர் காப்பப்**

**பூம் புனல் ஆடு தொறும் புலம்பும் புதல்வரைத்**

**தேம்படு கிளவியின் தீவிய மிழற்றிப்**

**பால் உறு வன முலை பகுவாய்ச் சேர்த்தித்**

**தோள் உறத் தழீஇ ஓலுறுப்பு அரவமும்.** (1:41: 84-89)

என்னும் பாடலில் அரிவைப் பெண்டிரைப் பற்றிக் கூறுகின்றது.

**தெரிவை**

**நீர்விலங்கு அழிதல் ஆனா**

**தேர்விலங் கினவால் தெரிவை கண்ணே.** (குறுந். 256: 7-8)

என்னும் பாடலடிகள் தெரிவைப் பருவப் பெண்ணைப் பற்றி கூறுகின்றது.

இதனைப் பெருங்கதை,

**அரிமதர் நெடுங்கண் அளவிகந்து அகல**

**இளமுலைப் பொன்பூண் இடவயின் திருத்தாத்**

**தெரிவை மகளிர், தேமொழி கிளவிக்**

**குழித்தலைப் புதல்வர், எழிற்புறம் வரித்த**

**அஞ்சாந்து அழிய ஆகத்து அடக்கி.** **(2:7: 111-115)**

என்ற பாடலடிகள் தெரிவை பெண்டிரைப் பற்றி கூறுகின்றது.

### பேரிளம் பெண்

**நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்**

**செம்முது செவிலியர்.** **(நெடுநல்.254: 1-2)**

என்னும் பாடலில் பேரிளம் பெண்களைப் பற்றி கூறுகின்றது.

இதனைப் பெருங்கதை,

**தித்தி ஒழுகிய மெத்தென் அல்குலர்**

**மட்டப் பூந்துகில் கட்டளைக் கச்சையர்**

**நரையிடைப் படர்ந்த நறுமென் கூந்தலர்.** **(1:41: 97-99)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

## விளையாட்டுகள்

### ஊசல்

ஞாழல் மரக் கிளையில் தாழைநார்க் கயிற்றில் ஊஞ்சல் கட்டி ஆடியதனை,

**ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங்கழித்**

**தாழை வீழ் கயிற்று ஊசல் தூங்கி.** **(அக. 20: 5-6)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

பெருங்கதை,

**எக்கர்த் தாழை நீர்த் துறைத் தாழ்ந்த**

**நெடு வீழ் ஊசல் முடி பிணி ஏறித்**

**தொடு வேல் முற்றத்துத் தோழியொடு ஆடா.** **(1:40: 112-114)**

என்ற பாடலின் மூலமும்,

**செப்பு அடர் அன்ன செங் குழைப் பிண்டிக்**

**கப்புடைக் கவி சினை நற்புடை நான்ற**

**தழைக் கயிற்று ஊசல் விரும்பிற்று ஊக்கியும்** **(2:14: 25-27)**

என்ற பாடலின் மூலமும்,

**பைந்தளிர் பொதுளிய பனிமலர்க் காவில்**

**…………….**

**பண்உறு பல்வினைப் பவழத் திண்மணை**

**ஊக்கமை ஊசல்.** (1:46: 175-179)

என்ற பாடலின் மூலமும் இவற்றை அறியலாம்.

**பந்தாட்டம்**

பெண்கள் பூப்பந்து கொண்டு விளையாடுவதனைக் காணமுடிகின்றது. இதனை,

**வரி அணி பந்தும், வாடிய வயலையும்**

**மயில்அடி அன்ன மாக்குரல் நொச்சியும்**

**கடியுடை வியல்நகர் காண்வரத் தோன்ற.** (நற்றி. 305: 1-3)

என்ற அடிகளில் காணமுடிகின்றது.

பெருங்கதையில் ‘பந்தடி கண்டது’ என ஒரு காதையே பந்தாட்டத்தைப் பற்றிக் கூறுகின்றது.

**கிடையும் பூளையும் இடைவரி உலண்டும்**

**அடையப் பிடித்து அவை அமைதியில் திரட்டி**

**பீலியும் மயிரும் வாலிதின் வலந்து**

**நூலினும் கயிற்றினும் நுண்ணிதின் சுற்றி**

**கோலம் ஆகக் கொண்டனர் பிடித்து**

**பாம்பின் தோலும், பீலிக் கண்ணும்**

**பூம்புனல் நுரையும், புரையக் குத்தி**

**பற்றிய நொய்ம்மையின் பல்வினைப் பந்துகள்.** (4:12: 42-49)

என்ற பாடலின்வழி பந்து செய்யப்பட்டதனைக் காணமுடிகின்றது.

மகளிர் பந்தடித்ததனை,

**ஒன்றுஒன்று ஒற்றி உயரச் சென்றது**

**பின்பின் பந்தொடு வந்துதலை சிறப்ப**

**கண்இமை யாமல் எண்ணுமின் என்று.** (4:12: 55-57)

என்னும் பாடலடிகள் வழி காணமுடிகின்றது.

**இசைப்புலமை**

குறமகள் ஒருத்தி குறிஞ்சிப் பண்ணைத் திறத்துடன் பாட அதனைக்கேட்டு தினைக்கதிரை உண்ண வந்த ஒரு யானை உண்ணாமலும், அவ்விடத்தை விட்டு செல்லாமலும் அப்பண்ணால் நெஞ்சம் ஈர்க்கப்பட்டு மனமுருகி நின்றுகொண்டே உறங்கிவிட்டது என்பதன் வழி சங்க இலக்கியம் இசைப்புலமை பற்றிப் பதிவிட்டுள்ளது. இதனை,

**ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி**
**பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்**
**குரலுங் கொள்ளாது நிலையிலும் பெயராது**
**படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென**
**மறம்புகல் மழகளிறு உறங்கும்.** **(அக. 102: 5-9)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

**இசை வெளிப் படீஇய**
**எரிமலர்ச் செவ்வா யெயிறுவெளிப் படாமைத்**
**திருமலர்த் தாமரைத் தேன்முரன் றதுபோற்**
**பிறந்துழி யறியாப் பெற்றித் தாகிச்**
**சிறந்தியம் பின்குரற் றெளிந்தவ ணெழுவச்**
**………………..**
**கொற்ற வீணையுங் கொடுங்குழை கொண்டனள**
**இறைகெழு குமரரு மேனை விச்சைத்**
**துறைநெறி போகிய துணிவின ராயினர்.** **(1:37: 118-140)**

என்ற பாடலில் அழகிய தாமரை மலர் போன்று சிவந்த வாயில் உள்ள பற்கள் வெளியில் தோன்றாதபடி தாமரை மலரினை வண்டுகள் முரன்றாற் போன்று அவ்விசை பிறக்குமிடத்தை அவையோர் அறியாதபடி சிறந்த இனிய மிடற்றுப் பாடலைத் தெளிவுடையதாய் அவ்விடத்தே எழுப்பி, அதனைச் சுருக்க வேண்டிய இடத்தில் சுருக்கியும், பெருக்க வேண்டிய இடத்தில் பெருக்கியும், வலிக்கும் வழி வலித்தும், நெகிழ்க்கும் வழி நெகிழ்த்தும், நிறுத்தும் வழி நிறுத்தியும் இனிய

இசையுடன் அவ்வாசவதத்தைப் பாடினாள். வாசவதத்தையின் யாழ் இசையினைக் கேட்டோர் இவள் மானிட மகளோ? தெய்வ மகளோ? என வியந்து பாராட்டியதன் வழி அவளின் இசைப்புலமை வெளிப்படுகின்றது.

### வள்ளைப்பாட்டு

பெண்கள் உலக்கைக் கொண்டு உரலில் நெல்லை இடிக்கின்ற பொழுது பாடக்கூடிய பாடலை வள்ளைப்பாட்டு என்று கூறுவர். கலித்தொகை குறிஞ்சிக்கலியில் வள்ளைப்பாட்டு குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

முற்றிய திணைக் கதிர்களை சந்தனமரத்தால் ஆன உரலில் இட்டு முத்து நிறைந்த யானைத் தந்தத்தால் குத்தியதனை விளக்கும் வகையில்,

**முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்**
**வகைசால் உலக்கை வடான்வயின் ஓச்சி. (கலித். 40: 4-5)**

என்னும் பாடல் கூறுகின்றது.

மூங்கில் நெல்லினைப் பாறை உரலில் இட்டு குத்தியதனை,

**பாடுகம் வாவாழி தோழி! வயக்களிற்றுக்**
**கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைசுளகா**
**ஆடுகழை நெல்லை அரையுரலும் பெய்திடுவாம்**
**பாடுகம், வாவாழி தோழிநற் றோழிபாடுற்று. (கலித். 41: 1-4)**

என்னும் பாடல் கூறுகின்றது.

**நன்ற கின்றால் தோழிநம் வள்ளையுள்**
**ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி**
**மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்**
**மன்றல் வேங்கைக் கீழிருந்து**
**மணநயத் தனன்அம் மலைகிழ வோற்கே. (கலித். 41: 40-44)**

என்னும் பாடல் தலைவியும் தோழியும் உரலில் திணைக் கதிர்களைப் போட்டு குத்திக்கொண்டு ‘வள்ளைப்பாட்டு’ பாடுகின்றனர். அதனைக் கேட்ட தலைவன் திருமணம் பேசத் தன் பெற்றோரை அனுப்புகிறான். தலைவியின் பெற்றோரும் மணம் முடித்துத் தர ஒப்புகொள்கின்றார். இந்தச் செய்தியைத் தோழி தலைவிக்குத் தெரிவிப்பதாக அமைந்துள்ளது.

இதனைப் பெருங்கதை,

**ஏனற் குறவர் இருங்குடிச் சீறூர்**

**மானமர் நோக்கின் மகளிரொடு மரீஇ**

**வெங்கண் மறவர் வில்லின் வீழ்த்த**

**பைங்கண் வேழத்துப் பணைமருப் புலக்கையின்**

**அறையுரல் நிறைய ஐவனப் பாசவல்**

**இசையொடு தன்னையர் இயல்புபுகழ்ந் திடிக்கும்**

**அம்மனை வள்ளை இன்னிசை கேட்டும்**

**கோயின் மகளிர் மேயினர் ஆட. (2:14: 46-53)**

என்னும் பாடல் வரிகளில் குறமகளிர் தம் மறவர் வில்லாலே கொன்று வீழ்த்தப்பட்ட யானையினது பரிய கொம்பாகிய உலக்கையைக்கொண்டு பாறைக் கல்லிற் குழித்த உரல் நிறையும்படி மலை நெல்லைப் இட்டு தந்தமையன்மார் தன்மையைப் புகழ்ந்து இடிக்கும் வள்ளைப் பாடலைக் காணமுடிகின்றது.

## கைக்கிளைக் காதல்

கைக்கிளையைத் தொல்காப்பியர் கீழ்க்காணுமாறு விளக்குகின்றார்.

**காமம் சாலா இளமை யோள்வயின்**

**ஏமம் சாலா இடும்பை எய்தி**

**நன்மையும் தீமையும் என்றுஇரு திறத்தான்**

**தன்னொடும் அவெளாடும் தருக்கிய புணர்த்துச்**

**சொல்எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்**

**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே.**

**(தொல்.பொருள்.அகத். 53)**

கைக்கிளைக் காமம் என்பது இறுதிவரை ஒருதலைக் காதலாகவே இருந்து விடுவதில்லை. தலைவனுடைய வேட்கையைத் தலைவி பின்னர்ப் புரிந்துகொண்டு உடன்படும் போது அது நற்காதலாக மலரும். ஆகவே, கைக்கிளையைக் காதலின் தொடக்கம் எனவும் கூறலாம்.

கைக்கிளைப் பாடல்கள் சங்க அக இலக்கியங்களில் மிகக்குறைவு. குறுந்தொகையில் ஒன்று (பாடல்: 78) நற்றிணையில் இரண்டு (பாடல்: 39,94)

கலித்தொகையில் நான்கு (பாடல்: 56,57,58,109) ஆகியன கைக்கிளைப் பற்றிக் கூறுகின்றன. பரிபாடலில் பதினோராவது பாடலில் கைக்கிளையைக் காணமுடிகின்றது. கலித்தொகையில்,

**தீம்கதிர் விட்டது போல, முகன் அமர்ந்து**
**ஈங்கே வருவாள் இவள் யார்கொல்? ஆங்கே, ஓர்**
**வல்லவன் தைஇய பாவைகொல்? நல்லார்**
**உறுப்பு எலாம் கொண்டு இயற்றியாள் கொல்**
**………..**
**பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீ அறியாய்**
**யாதுஒன்றும் வாய் வாளாது இறந்தீவாய்! கேள், இனி**
**நீயும் தவறுஇலை; நின்னைப் புறங்கடைப்**
**போதர விட்ட நுமரும், தவறு இலர்**
**நிறைஅழி கொல் யானை நீர்க்கு விட்டாங்கு**
**பறை அறைந்தல்லது செல்லற்க! என்னா**
**இறையே தவறு உடையான். (கலித். 56)**

என்ற பாடலிலும்,

**வேய் எனத் திரண்ட தோள், வெறி கமழ் வணர் ஐம்பால்**
**மாவென்ற மடநோக்கின் மயில்இயல் தளர்பு ஒல்கி**
**ஆய்சிலம்பு அரி ஆர்ப்ப, அவிர் ஒளி இழை இமைப்ப,**
**கொடிஎன மின்என அணங்குஎன யாது ஒன்றும்**
**தெரிகல்லா இடையின்கண் கண் கவர்பு ஒருங்கு ஓட**
**……..**
**ஒன்னாதார்க்கு அவன் வேலின்**
**சேந்துநீ இனையையால்; ஒத்ததோ? சின்மொழி!**
**……..**
**மனைஆங்குப் பெயர்ந்தாள் என் அறிவுஅகப்படுத்தே. (கலித். 57)**

என்ற பாடலிலும் கைக்கிளைக் காதலைக் காணமுடிகின்றது.

இது போன்று பெருங்கதை,

**விச்சை மன்ன னச்சுவன னாகி**

**விறல்கெழு விஞ்சையர் வெள்ளியம் பெருமலை**

**இறைகொண் டிருந்த வெழிலுடை மகளிருள்**

**யாவரு மில்லைமற் றிவளோ ரனையார்**

**யாவ ளாயினு மெய்துவென் யானென**

**ஒருதலை வேட்கை யுண்ணின்று நலியப்**

**பெருவினை விச்சையிற் றெரிய நோக்கி. (5:9: 66-72)**

இப்பாடலடிகள் விச்சாதர வேந்தனாகிய மானசவேகன் மதனமஞ்சிகையைக் கண்டு பெரிதும் காமுற்று, ‘வெற்றி பொருந்திய விச்சாதர மகளிருள்ளும் இவளுக்கு நிகரானவர் யாரும் இல்லை. இவள் விச்சாதர மகளேயாயினும் அல்லது மானிட மகளேயாயினும் அல்லது யாராக இருந்தாலும் இவளைக் காதலியாக அடைவேன்’ என்று ஒருதலைக்காம நோய் தன் நெஞ்சில் கொண்டதாகக் கூறுகின்றது.

## பெண் கேட்டல்

**தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதவலர். (குறுந். 146: 3)**

என்ற பாடல் வரியில் தலைவன் சான்றோரைத் தலைவியின் தமரிடம் மணம் பேசி வர அனுப்புவதனை அறியலாம்.

ஆண் வீட்டார் பெண்வீடு சென்று கேட்டலும் பெண் வீட்டார் ஆண்வீடு சென்று கேட்டலும் ஆகிய இரண்டு நிலைகளும் பெருங்கதையில் காணமுடிகின்றது.

உதயணன் தன் மகனுக்கு மணம்பேசப் பெண் வீட்டிற்கு அனுப்பினான். தருசகன் தன் தங்கையையும், விரிசிகையின் தந்தை தன் மகளையும் மணக்குமாறு உதயணனைக் கேட்பது பெண் வீட்டார் மணம் பேசுவதாக அமைந்துள்ளது.

## மணப்பெண்ணுக்கு பரிசங் கொடுத்தல் (சீர் கொடுத்தல்)

**நலம்சால் விழுப்பொருள், கலம்நிறை கொடுப்பினும்**

**பெறஅரும் குரையள் ஆயின். (அக. 280: 5-6)**

என்னும் பாடல் பெறற்கரிய பொருள்களைக் கலம் கலமாகக் கட்டிக் கொடுத்தாலும் இவளைப் (தலைவியை) பெறஇயலாது என்று தலைவன் நினைப்பதாக அமைந்துள்ளது.

**எக்கர் ஞாழல் மலரின் மகளிர்**

**ஒண்தழை அயருந் துறைவன்**

**தண்தழை விலைஎன நல்கினன் நாடே. (ஐங். 147)**

என்னும் பாடல் தலைவன் தலைவியின் சுற்றத்தார் மகிழும்படி பரிசங் கொடுத்தலைப் பற்றிக் கூறுகின்றது.

இதனைப் பெருங்கதை,

மதனமஞ்சியைத் தன் மகனுக்கு மனைவியாக்க உதயணன் ஒரு கோடி சிறந்த பொன்னைச் சீராகக் கொடுத்தனுப்பியதைக் காணமுடிகின்றது. இதனை,

**அன்றுகை நில்லாது சென்ற வுள்ளமொடு**

**பகன்மதி போலப் பசந்த குமரன்**

**இகன்மிசை யுள்ளத் தெவ்வங் கேட்டுத்**

**தலைப்பெருந் தேவியுந் தந்தையுங் கூடிக்**

**குலப்பெருந் தேவியாக் கோடி விழுநிதி**

**சிறப்பின்விட் டிருந்து நலத்தகு கிழமைக்**

**கியாவரு முரியோ ரிவளி னில்லெனக்**

**காவல் வேந்தன் காணங் காண்டலின். (5:8: 145-152)**

என்ற பாடல் வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

**நன்னாள் குறித்தல்**

**புள்ளுப்புணர்ந்து இனிய ஆகத் தெள்ஒளி**

**அம்கண் இருவிசும்பு விளங்க, திங்கள்**

**சகடம் மண்டிய துகள்தீர் கூட்டம். (அக. 136: 3-5)**

என்னும் பாடலில் புள் (பறவை) சகுனம் நல்லதாக அமைந்த நேரம் தேர்ந்தெடுக்கப்பட்டது. அன்று திங்கள் உரோகினியைக் கூடும் முழுநிலா நாளாக இருந்த நன்னாளில் திருமணம் நடந்ததை காணமுடிகின்றது.

இதனைப் பெருங்கதை,

**அரும்பரி சாரத்துப் பெருங்கணி வகுத்த**

**நன்னாள். (2:2: 24-25)**

என்னும் பாடலடிகளில் திருமணத்திற்கான நன்னாளினைக் கணியர் கணித்துத் தந்தார் என்பதனைக் காணமுடிகின்றது.

### திருமணம் அறிவித்தல்

மணநாளினை சுற்றத்தார்க்கும் மற்றவர்க்கும் அறிவித்தனர் என்பதனை,

**பொம்மல் ஓதி எம்மகள் மணன்என**

**வதுவை அயர்ந்தனர் நமரே.** (அக.221: 3-4)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

இதனைப் பெருங்கதை,

**வாசவ தத்தையோடு வதுவை கூடி**

**கோல நீள்மதில் கொடிக்கோ சம்பி**

**மாலை மன்னவன் மணமகன் ஆகும்**

**காலை இதுவென.** (2:2: 49-52)

என்னும் பாடலில் திருமணச் செய்தியை வள்ளுவன் யானை மீதிருந்து முரசறைந்து அறிவித்தான் என்பதனைக் காணமுடிகின்றது.

### மணப்பந்தல்

மணப்பந்தல் அமைத்து அவ்விடத்தில் மணல் பரப்பி அழுகுற செய்தனர் என்பதை,

**தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிர்.** (86: 3)

**மழைபட்டு அன்ன மணல்மலி பந்தர்.** (136: 16)

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் விளக்குகின்றன.

இதனைப் பெருங்கதை,

**அறுதொழின் முத்தீ அருந்துறை போகிய**

**மறைநவில் நாவின் மரபியல் அந்தணன்**

**பல்பூம் பந்தருட் செல்வஞ் சிறக்கும்**

**இருநிலத் திலக்கணம் இயற்பட நாடி**

**வெண்மணல் நிரப்பங் கொளீஇக் கண்ணுறப்**

**……………**

**வெண்மணன் ஞெமரிய தண்ணிழற் பந்தருள்.** (2:3: 9-21)

என்னும் பாடலடிகளில் பூவானியற்றிய பந்தரிடத்தில் வெள்ளிய மணலைப் பரப்பி முக்குழியமைத்து சடங்குகள் செய்தவதனை அறியமுடிகின்றது.

### விருந்தோம்பல்

திருமணத்தில் விருந்து அளிப்பதனை சங்ககாலம் முதலே காணமுடிகின்றது. இதனை அகநானூற்றில்,

**உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**

**பெருஞ்சோற்று அமலை நிற்ப. (அக. 86: 1-2)**

**மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு**

**வரையா வண்மையோடு புரையோர்ப் பேணி. (அக. 136: 1-2)**

திருமணத்தின் போது விருந்து அளிக்கப்பட்டதை இப்பாடல் வழி அறியமுடிகின்றது. இதனைப் பெருங்கதை,

**ஐஇய வாசஆன் நெய்யொடு கலந்த**

**ஐவகை உணவொடு குய்வளங் கொளீஇ**

**நறிய வாகிய அறுசுவை அடிசிற். (2:3: 22-24)**

என்னும் பாடலடிகள் ஐவகை உணவுகளும் (கடிப்பன, நக்குவன, பருகுவன, மெல்லுவன, விழுங்குவன) அறுசுவையோடு விருந்து அளிக்கப்பட்டதனைப் பற்றிக் கூறுகின்றது.

### வாழ்த்து

குழந்தைகள் பெற்ற இல்லற மகளிர் ஒன்றுகூடி ‘கற்பு வழாமல் அறம்பல செய்க, கொண்டானைப் பேணி ஒழுகுக, தக்க வாழ்க்கைத் துணை ஆகுக’ என்று திருமணக் காலத்தில் மணப்பெண்ணை வாழ்த்தினர். இதனை,

**புதல்வர் பயந்த திதலைய வயிற்று**

**வாலிழை மகளிர் நால்வர் கூடிக்**

**கற்பினின் வழாஅ நற்பல உதவிப்**

**பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென**

**நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி**

**பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**

**வதுவை நன்மணங் கழிந்த பின்றை. (அக.86: 11-17)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

இதனைப் பெருங்கதை,

வாசவதத்தையை வாழ்த்துவதாக இவை அமைந்துள்ளது. ‘‘பொற்றொடீ! கணவனின் குறிப்பறிந்து அவன் உள்ளம் எப்போதும் விரும்பும்படியாக நடந்து கொள்வாயாக. அறிவாலே நிறைந்து பிற மகளிரை அன்பாலே தழுவிக் கொள்க! மனைவிக்குரிய உரிமையில் உயர்ந்து திகழ்ந்து, கற்புடைமையாலே மேம்பட்டுச் சிறப்பாயாக! என்று வாழ்த்துவதனை,

**கொண்டோன் வேட்கும் குறிப்பினை ஆகி,**

**தண்டாப் புலமொடு மகளிரைத் தழீஇ,**

**திருமனைக் கிழமையின் ஒருமீக் கூரி,**

**கற்புமேம் படீஇயர், பொற்றொடி பொலிந்து.**

**(2:5: 91-94)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**பொருந்துபொழிப் புறநிலை புணர்ந்துபலர் வாழ்த்தி**

**(2:3: 35)**

என்ற பாடலில் அந்தணர் பலரும் வந்து மணமக்களைப் புறநிலையாக வாழ்த்தினர் என்பதைக் காணமுடிகின்றது.

**புறநிலை வாழ்த்தாவது,**

**வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்**

**பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து**

**பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே. (தொல்.செய்யு. நூ.110)**

என்று தொல்காப்பிய வழி அறியலாகிறது.

**பால்சோறு**

**புதுமண மகடூஉ அயினிய கடிநர்ப்**

**பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ. (அக.141: 14-15)**

என்ற பாடலின் மூலம் புதுமணப்பெண் மணமுடித்து தலைவன் இல்லத்திற்குச் சென்று அங்கு பால் உலை வைக்கும் வழக்கம் காணமுடிகின்றது.

பெருங்கதையில், புதுமணப்பெண் வாசவதத்தையும் உதயணனும் திருமணம் முடிந்தபின்னர் பாற்சோறு உண்ணுவதாகக் கூறப்படுகின்றது.

**பொன்புனை நன்கலத் தின்பதம் ஆர்ந்தபின்.** **(2:4: 139)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

திருமணம் முடிந்ததும் பால்உலை வைப்பதாக சங்க இலக்கியம் கூறுகின்றது. பெருங்கதையில் திருமணமானவர்கள் பால்சோறு உண்பதாகக் காட்டுகின்றார்.

## கற்பு – அருந்ததி

பெண்களின் கற்பிற்கு ஒப்பாக அருந்ததியைக் கூறுவதனை,

**வடமீன் போல தொழுதேத்த வயங்கிய கற்பினள்.**

**(கலித். 2)**

**அருந்ததி அனைய கற்பின்**
**குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே.** **(ஐங்.442: 4-5)**
**கடவுள் ஒருமீன் சாலினி** **(பரி.5: 44)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

உதயணன் திருமணத்தின் போது வாசவதத்தைக்கு அருந்ததியைக் காட்டி, அவளை நெற்றிக்கு மேலாகக் கைகுவிக்கச் செய்து, 'யான் நின்னைப் போன்று மாசறு கற்புடையேன் ஆகும்படி அருள்வாயாக' என்று மும்முறை வணங்கச் செய்தான். இதனை,

**வடபால் மருங்கில் சுடர்மீக் கூரிய**
**கற்புடை விழுமீன் காணக் காட்டி**
**பொற்றொடி நுதல்மிசைப் புனைவிரல் கூப்பி**
**மன்னிய உலகினுள் நின்இயல் பாக**
**என்வயின் அருள்என மும்முறை இறைஞ்சுவித்து.**

**(2:3: 125-129)**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

**ஊடல்**

உடலினது ஈரமானது நீங்கும்படி ஒருத்தி பெருமகிழ்ச்சியை உண்டாக்கும் போதைமிக்க கள்ளைக் குடித்தாள். குடித்ததும் அவளுடைய கருநிறக் கண்கள் பெரிய நறவம் பூவைப்போலச் செந்நிறத்தை அடைந்தன. சிவந்த அவள் கண்களை அவன் புகழ்ந்து பாடல் பாடினான். அதனை மற்றொருத்தி தன்னைக் குறித்துப் பாடுவதாக இன்புற்றாள். இதனை உணர்ந்த காதலி, அவன் மீது ஊடல் கொண்டாள் என்பதனை,

**விரும்பிய ஈரணி மெய்யீரந் தீரச்**
**சுரும்பார்க்கும் சூர்நறா ஏந்தினாள் கண்ணெய்தல்**
**பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே**
**கூர்நறா ஆர்ந்தவள் கண்**
**கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர் நோக்கினைப்**
**பாணா தரித்துப் பலபாட, அப்பாட்டுப்**
**பேணா தொருத்தி பேதுற, ஆயிடை**
**……………**
**தீர்வில தாகச் செவுற்றாள்! செம்புனல்**
**ஊருடன் ஆடும் கடை.** (பரி.7: 61-76)

என்ற பாடலின் வழி அறியலாம்.

இதுபோன்று களிமகள் ஊடலை பெருங்கதை,

**நெடுநீர் மாடத் தேனி யேறிப்**
**பொறிமயிற் பெடையிற் பொங்குபு பாய்தலில்**
**அணிக்கையிற் றவழ்ந்த மணிக்குர லைம்பால்**
**ஈர்முத் தாகத் தீரம் புலர்த்தி**
**அழனறுந் தேறல் சுழல்வண் டோப்பிக்**
**குறிவெங் காதலன் பொறியாப் புறுத்த**
**தமனிய வள்ளத்துத் தன்னிழ னோக்கிப்**
**பிறண்முக மிதுவெனப் பெண்மையின் மயங்கிக்**
**கள்ளினுட் டோன்றுமிவ் வொள்ளிழை மாதரைப்**

**பண்டு மொருகாற் கண்டகத் தடக்கிய**
**வையப் பரத்தையைக் கையொடு கண்டேம்**
**இனிப்பொய் யுண்ணு மேழைய மல்லமென்**
**றணித்தகு நுதல்வியர்த் தரையெழுத் தளைஇத்**
**துனிப்புறு கிளவி பனிக்கடற் பிறந்த**
**அரும்பெற லமிழ்தென விரும்பும் வேட்கையன்**
**முகிழ் நகை முகத்த னாகி.** **(1:40: 156-171)**

என்ற பாடலடிகள் ஒரு தலைவி நீராடி மகிழ்ந்து தன்னுடைய அணிகலன் அணிந்த கைகளினால் நீலமணி போன்ற நிறமுடைய கொத்துக் கொத்தான கூந்தலின் ஈரத்தைக் குளிர்ந்த முத்துமாலையை அணிந்த தனது மார்ப்பின் வெப்பத்தினால் நன்கு உலர்த்தி பின்னர் வெப்பந்தருகின்ற நரிய கள்ளினைப் பருக எண்ணினாள். அப்போது அக்கள்ளில் தன்னுடைய நிழல் தோன்றுவதனைக் கண்டு அது மற்றொருத்தியின் நிழல் என்று கருதி இந்தப் பரத்தையை இப்பொழுது கையில் பிடித்துக்கொண்டேன் என்று பேதைமை தோன்ற சினந்து ஊடல் கொண்டாள் என்று கூறுகின்றது.

உதயணன் விரிசிகைக்கு மாலைபுனைந்து சூட்டியதனைக் கண்டு வாசவதத்தை ஊடல் கொள்வதும் உதயணன் அவள் ஊடலைத் தணிப்பதுவும் ‘ஊடல் உணர்த்தியது’ என்ற காதையில் **(2:16: 5-119)** காணப்படுகின்றன.

உதயணன் வாசவதத்தையிடம் உன்னைப் போன்று இருந்ததால் நீ என்று கருதி இவளொடு (பதுமாபதி) கூடினேன் என்று கூறியதனைக் கேட்டு வாசவதத்தை ஊடல் கொண்டதையும் அதனை உதயணன் நீக்கிக் கூடியதையும் **(4:8: 85-119)** இதன்வழி அறியலாம்.

பதுமாபதி உதயணனைத் தழுவி இருந்தாள். அவனோ சுவர்களில் தீட்டியிருந்த ஓவியங்கள் உண்மையாக இருப்பது போன்று இருந்ததால் வியந்து அவற்றை நோக்கியிருந்தான். இதனால் பதுமாபதி அவன் மீது ஊடல் கொள்வதாக **(3:14: 103-164)** அமைந்துள்ளது. இவ்வாறு ஊடல் செய்திகளைப் பெருங்கதை எடுத்துக்காட்டுகின்றது.

## ஆடவர் உள்ளம்

மனைவியிருக்கும் போது பரத்தையை நாடும் ஆடவர்களின் இயல்பு பற்றி பெருங்கதை கூறுகின்றது. வண்டு, நீர்நிலையில் இருக்கும் தாமரை மலரில் உள்ள தேனை உண்ணும். இருப்பினும் வேட்கை அடங்காமல் அது புல்லிய நெய்தற் பூ மீதும் பாய்ந்து அதன் தேனையும் உண்ணும். இது போன்றவரே ஆடவர் என்று வாசவதத்தை உதயணனிடம் ஊடல் கொள்வதனை,

**முழுநீர்ப் பொய்கையுட் பொழுதொடு விரிந்த**
**செழுமலர்த் தாமரைச் செவ்விப்பைந் தாது**
**வைகல் ஊதா வந்தக் கடைத்தும்**
**எவ்வம் தீராது நெய்தற் கவாவும்**
**வண்டே யனையர் மைந்தர் என்பது**
**பண்டே உரைத்த பழமொழி. (2:16: 32-37)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

இது போன்று சங்க இலக்கியம்,

தலைவியை தலைவன் பிரிந்துறைகின்றான். வானளாவி ஓங்கி உயர்ந்த மலை. அங்கே பந்து விளையாடிய களைப்பு தீர, அரமகளிர் கொட்டும் அருவியில் நீராடுவர். அங்கே நீராடும் பெண்களின் பெண்மை நலத்தை உண்ட பின்னர் வண்டு போல் விட்டுவிட்டுச் சென்றுவிடுவான். அத்தகையவன் மலைதான் அது என்று தலைவி கூறுகின்றாள். இதனை,

**பெண்டிர் நலம் வௌவி, தண் சாரல் தாது உண்ணும்**
**வண்டின் துறப்பான் மலை. (கலித்.40: 24-25)**

என்னும் பாடலில் அறியலாம்.

வண்டானது தேன் உண்ணும் வேட்கையினால் பூவின் தரத்தைப் பார்ப்பதில்லை. அதுபோன்றே தலைவியிருக்க தலைவன் பரத்தையை நாடுகின்றான் என்பதனை,

**தாது உண் வேட்கையின் போது தெரிந்து ஊதா**
**வண்டு ஓரன்ன அவன் தண்டாக் காட்சி. (நற்றி. 25: 9-10)**

இப்பாடலின் வழி அறியலாம்.

**பரத்தையர்**

**இளம்பூரணர் தரும் விளக்கம்**

பரத்தையராவர் யாவரெனின் ஆடலும் பாடலும் வல்லராகி அழகும், இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெ∴கி ஒருவர் மாட்டும் தங்காதார் என்று இளம்பூரணர் விளக்கம் தருகின்றார்.[20]

**கலைகளில் வல்லவர்கள்**

**வணங்கிறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்**
**துணங்கை நாளும் வந்தன. (குறுந். 364: 5-6)**

என்ற பாடலின்வழி பரத்தையரின் கலை உணர்வினை அறியலாம்.

வீட்டின் அருகிலுள்ள மரத்தின் மீது படரும் செழுமையான வயலைக் கொடியினை, விளங்கும் மலர்களையுடைய ஆம்பல் கொடியுடன் சேர்த்துக் கட்டிய தழையாடையை உடுத்திக் கொண்டு விழாவில் கூத்தாடுகின்ற பரத்தையரோடு தலைவனும் பொலிவுடன் கூடிக்குலவிக் கூத்தாடினான் என்பதனை,

**மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி**
**அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ**
**விழவாடு மகளிரொடு தழூஉ அணிப்பொலிந்து**
**மலரோடு உண்கண் மானிழை முன்கைக்**
**குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது**
**உடன்றனள் போலும் நின் காதலி. (அக. 176: 13-18)**

இப்பாடலின் வழி அறியமுடிகின்றது.

பெருங்கதையில் பரத்தையர் அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தேர்ந்தமையை,

**யாழ்முதல் ஆக அறுபத்து ஒருநான்கு**
**ஏர்இள மகளிர்க்கு இயற்கை. (1:35: 84-85)**

என்னும் வரிகளின் வழி அறியலாம்.

**பரத்தையர் வாழ்வுநிலை**

கடலில் மரக்கலத்தில் சென்றவர்கள் புயல்காற்று வீசுவதால் மரக்கலம் கவிழ்ந்துவிட, கடலில் மிதந்து வந்த ஒரு பலகையைப் பற்றிக் கொண்டு தாம் தாம்

என்று தனித்தனியாக ஒவ்வொரு பக்கத்திலும் இருந்து இழுப்பது போல ஒரு ஆண்மகன் பரத்தையர் தெருவிற்கு வர அவன் கையைப் பரத்தையர் பலரும் பிடித்து இழுத்தார்கள் என்பதனை,

**மார்பு தலைக்கொண்ட மாண்இழை மகளிர்**

**கவல் ஏமுற்ற வெய்து வீழ்அரிப் பனி**

**கால் ஏமுற்ற பைதரு காலை**

**கடல்மரம் கவிழ்ந்தெனக் கலங்கி உடன்வீழ்பு**

**பலர்கொள் பலகை போல**

**வாங்க வாங்க நின்று ஊங்கு அஞர் நிலையே. (நற்றி.30: 5-10)**

இப்பாடலின் மூலம் அறியலாம்.

இதனைப் பெருங்கதை,

பரத்தையர் சேரியினைப் 'போகச் சேரி' என்று பெருங்கதை குறிப்பிடுகின்றது. காமப் பெருங்கடலாகிய அச்சேரியில், இனிய நினைவுகள் என்னும் அலைகளிடையே, ஒளி பொருந்திய நெற்றியையுடைய மகளிரும், இளமைந்தரும் ஒருவர்மேல் ஒருவர் காமுற்று மயங்கித் தம் மனம் போல மூழ்கி விளையாடினர். தம்மை அணி செய்து கொண்டும் புனைந்து கொண்டும் சிறிதும் வெறுப்பின்றி அன்புடைய நெஞ்சத்தோடே அவர்கள் இன்பம் நுகர்ந்தனர் என்று மொழிந்துள்ளது. இதனை,

**வாணுதன் மகளிரு மைந்தரு மயங்கிக்**

**காம மென்னு மேமப் பெருங்கடற்**

**படுதிரைப் பரப்பிற் குடைவன ராடி**

**அணிதலும் புனைதலு முனிவில ராகிக்**

**காத லுள்ளதொடு கலந்துண் டாடுநர்**

**போகச்சேரி புறவித லாக. (3:3: 51-56)**

என்பதன் வழி இதனை அறியலாம்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவன் தீக்கடைக்கோலைக் கடைந்து உண்டாக்கிய தீ, காற்று வீச வீசப் பரவிப் பின் காட்டையே சூழ்ந்து கொள்ளும். அதுபோன்றே பரத்தையர் தம் கண் வீச்சால் நம்பியர் உள்ளத்தே ஆசைத் தீயைத்

தோற்றுவித்துப் பின்னர் இனிய மொழி என்ற காற்றால் வீசி வளர்த்து, அத் தீ அவர்களை முற்றிலுமாகப் பற்றிச் கொள்ளச்செய்தனர். இதனை,

**கல்கெழு கானவன் கைக்கோல் உமிழ்ந்த,**
**எல்படு சிறுதீ எழுச்சியின், காமம்**
**மிகுமனத்து உவகையின் ஒல்லை விருப்பம்,**
**முறையின் முறையின் முறுக மூட்டி. (5:8: 134-137)**

என்பதன் வழி அறியலாம்.

**தொகுப்புரை**

**பெருங்கதையில் சங்க அக இலக்கிய மரபுக்கூறுகள்** என்னும் இவ்இயலின் வழி ஆராய்ந்து பெறப்பட்ட கருத்துக்கள் பின்வருமாறு தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

அகம் என்பதற்கு உரையாசிரியர்கள், அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர். அகராதி, நிகண்டு, வாழ்வியல் களஞ்சியம், இலக்கண நூல்கள் அகம் என்பதற்கு விளக்கம் தந்துள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படும் முதல், கரு, உரிப்பொருள்கள் பெருங்கதைக் காப்பியத்திலும் காணப்படுகின்றன. இசையும் ஆடலும் சங்க இலக்கியம் போன்று பெருங்கதையிலும் இடம்பெற்றுள்ளன. நீராட வருவோர், நீராட்டவரம் இவைகள் சங்க இலக்கியத்தில் பரிபாடலில் காணப்படுவதனைப் போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் காணப்படுகின்றது. சங்க இலக்கியத்தில் குறிஞ்சிப்பாட்டில் 99 வகையான மலர்களைப் பற்றிக் கூறுவது போன்று பெருங்கதையில் 57 தாவரங்களும் அவற்றில் விளையும் மலர்களும் பற்றிக் கூறப்பட்டுள்ளது. பெண்ணின் குணநலன்கள் சங்க இலக்கியத்தில் கூறியது போன்று பெருங்கதையிலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

தலைவனும் தலைவியும் கண்டு காதல் வயப்படுதல் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றது. ஐயம், தெளிவு சங்க இலக்கியத்தில் கூறியது போல், பெருங்கதைக் காப்பியத்திலும் காணமுடிகின்றது. குறிப்பறிதல் பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் ஒப்பக் கூறுகின்றன. காதல் மனவுறுதி சங்க இலக்கியத்தில் காணப்படுவது போல் பெருங்கதைக் காப்பியத்திலும் காணப்படுகின்றது. இடந்தலைப்பாடு, தோழி கூட்டுவித்தல், நெஞ்சொடு கிளத்தல் போன்ற அகப்பொருள் துறைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் இடம்பெறுவதை அறியமுடிகிறது

. காமம் இதனை சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதையும் கூறியுள்ளது. நலம் பாராட்டி இன்புறல் ஒத்துப்படுகின்றது. மாலைக்காலத் துன்பத்தினைப் பற்றி சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதையிலும் காணமுடிகின்றது. இரவுக்குறி, அலருக்குப் பயப்படுதல், அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரைவு, வரைவு கடாதல், உடன்போக்கு போன்ற அகமரபுக்கூறுகள் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றன. உடன்போக்கில்

சென்ற தலைவியை எண்ணி வருந்தும் செவிலியின் நிலை, நற்றாயின் நிலையினைப் பற்றி சங்க இலக்கியத்தில் கூறுவது போன்று பெருங்கதையிலும் கூறப்படுகின்றது. பிரிவுத்துயர், காதலரின் மனம் இவைகளும் ஒத்துப்போகின்றது. பெண்ணின் அழகுநலன்கள் சங்க இலக்கியத்தில் கூறுவது போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் கூறப்பட்டுள்ளது. அணிகலன்கள் - கால் அணிகள், கழுத்து அணிகள், கை அணிகலன்கள், காது அணிகள், தலை அணிகலன்கள் பற்றி சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் கூறப்படுகின்றன. ஒப்பனை - கூந்தல் ஒப்பனை, நக ஒப்பனை, வண்ணப்பொடிகள் ஒப்பனை, தொய்யில், வாசவெண்ணெய், இவைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் காணப்படுகின்றது.

ஏழு பருவப் பெண்கள் பற்றி சங்க இலக்கியம் தனித்தனியே வெவ்வேறிடங்களில் கூறியது போன்று பெருங்கதையும் கூறியுள்ளது. விளையாட்டுக்கள், இசைப்புலமை பற்றியும் கூறப்படுகின்றது. வள்ளைப்பாட்டு சங்க இலக்கியத்தில் கூறியது போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் காணமுடிகின்றது. கைக்கிளைக் காதல் பற்றியும் காணமுடிகின்றது.

பெண் கேட்டல், மணப்பெண்ணுக்கு பரிசங் கொடுத்தல், நன்னாள் குறித்தல், திருமணம் அறிவித்தல், மணப்பந்தல், விருந்தோம்பல், வாழ்த்து, பால் சோறு செய்தி இடம்பெறல், கற்பிற்கு அருந்ததியோடு ஒப்பிடுதல் போன்ற திருமணச் செய்திகள் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படுவது போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஊடல் செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறுவது போன்று பெருங்கதையிலும் இடம்பெற்றுள்ளன. ஆடவர் உள்ளம் பற்றி சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதையிலும் கூறப்பட்டுள்ளது. பரத்தையர் வாழ்வுநிலை பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் கூறியுள்ள கருத்துகள் பெரும்பாலும் ஒப்புமையுடையனவாக உள்ளன.

மேற்குறிப்பிட்டுள்ள செய்திகளின் அடிப்படையில் சங்க அகஇலக்கிய மரபுக் கூறுகள் பெரும்பாலானவை பெருங்கதைக் காப்பியத்துள்ளும் இடம் பெற்றிருக்கின்றன என்று உறுதிபட உரைக்கலாம்.

‘சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்’ என்னும் அக இலக்கணம் பெருங்கதையில் இல்லை. எனினும் பிற அக இலக்கிய மரபுக்கூறுகள் தழுவல் நூலாகக் கருதப்பெறும் அக்காப்பியத்துள் இடம்பெற்றிருப்பது தமிழ் இலக்கிய மரபை ஒதுக்கிவிட்டு புதிய படைப்பாக்கம் சாத்தியப்படாது என்னும் கொங்குவேளிரின் உள்ளப்பாங்கை வெளிப்படுத்துகின்றது எனலாம்.

**சான்றெண் விளக்கம்**

1. வா. மகாதேவ முதலியார், திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி, செந்தமிழ்ச்செல்வி, 1923, பக்.31
2. மி. பொ. இராமநாதன் செட்டியார், குறுந்தொகை வசனம், பக்.7
3. பி. கண்ணப்ப முதலியார், திருக்கோவையார், செந்தமிழ்ச்செல்வி, 1952, பக். 223
4. அ.ச. ஞானசம்பந்தன், அகமும் புறமும், பக்.12
5. பெ. திருஞானசம்பந்தன், இந்திய எழிற்கலை, பக்.57
6. கா. சுப்பிரமணியப்பிள்ளை, இறையனார் அகப்பொருள், செந்தமிழ்ச்செல்வி, 1925, பக்.106
7. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை, 1937, பக்.18
8. இளம்பூரணர்(உ.ஆ), தொல், அகம், பக்.3
9. நச்சினார்க்கினியர்(உ.ஆ), தொல், அகம், நூ.எ. 1
10. நாவலர்(உ.ஆ), நன்னூல், காண்டிகையுரை, பக்.39
11. அ.அ. மணவாளன், சங்க இலக்கிய ஒப்பாய்வு, பக்.45
12. சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், பக்.7
13. இரா. மோகன்,(ப.ஆ), ஆய்வுக்கோவை, தொகுதி-2, பக்.38
14. கா. சுப்பிரமணியப்பிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகார கருத்து, பக்.3
15. சி. பிருந்தாதேவி, பழந்தமிழர் நாட்டில் காதல், செந்தமிழ்ச்செல்வி, 1953, பக். 26
16. கா. சுப்பிரமணியப்பிள்ளை, இறையனார் அகப்பொருள், செந்தமிழ்ச்செல்வி, 1925, பக்.107
17. மு. சண்முகம்பிள்ளை(ஆ), சி. பாலசுப்பிரமணியன்(பொ. பதிப்), அகப்பொருள் மரபும் திருக்குறளும், 1980, பக்.1
18. மேலது, பக்.1
19. சி. இலக்குவனார், சங்க இலக்கியச் சொல்லோவியங்கள், பக்.13
20. தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, ப. 288

மணச்செய்திகள் பெருங்கதையில் இடம்பெறுவதனைப் பற்றி இவ்வியலில் கூறப்படவுள்ளது. மேலும், திருமணச்சடங்குகளில் கலப்பு சேர்ந்துள்ளமை, சங்க அகநூல்கள் சுட்டும் மணவினைகளில் மாற்றம் காணப்படுதல், அவற்றின் பின்னணி குறித்த கருத்துகள் இவ்வியலில் விரிவாக ஆராயப்படவுள்ளன.

**திருமணம் சொற்பொருள் வரையறை**

திருமணம் என்னும் சொல்லிற்கு 'விவாகம்' 'கலியாணம்' என்னும் பொருள்களை ந.சி. கந்தையாபிள்ளையின் தமிழ் அகராதியும், மு. சண்முகம் பிள்ளையின் தமிழ் - தமிழ் அகர முதலியும் குறிப்பிடுகின்றன. இவ்விரண்டு சொற்களும் வடசொற்கள் ஆகும். திருமணத்தைப் பண்டைய தமிழர்கள் கடி, மணம், மன்றல், வதுவை, வதுவைமணம், வரைவு என்னும் சொற்களால் குறிப்பிட்டனர்.

**தொல்காப்பியத்தில் வரைதல், வரைவு, வதுவை, கரணம், மன்றல் என்ற சொற்கள் வருமிடங்கள்**

**வரைதல்**

**வரைதல் வேண்டித் தோழி செப்பிய (களநூ. 17-11)**
**அனைநில வகையான் வரைதல் வேண்டினும் (களநூ. 24-36)**
**வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே. (களநூ. 50:1-2)**
**வரைதல் வேட்கைப் பொருள என்ப. (பொருளி. 15-8)**
**வரைதல் (மெய்ப்.நூ. 12-3)**

**வரைவு**

**வரைவு உடன்படுதலும் ஆங்கதன் புறத்தும் (களநூ. 17-13)**
**வேற்றுவரைவு வரின்அது மாற்றுதற் கண்ணும் (களநூ. 21-15)**
**வரைவுதலை வரினும் களவறி வறினும் (களநூ. 21-25)**
**வரைவிடை வைத்த காலத்து வருந்தினும் (களநூ. 22-1)**
**பிறன்வரைவு ஆயினும் அவன்வரைவு மறுப்பினும் (களநூ. 24-40)**
**வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டினும் (களநூ. 24-43)**
**போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும் (பொருளி.நூ. 29-6)**

**வதுவை**

**பின்முறை ஆகிய பெரும்பொருள் வதுவை (கற்.நூ. 31-1)**

**கரணம்**

**கற்புஎனப் படுவது கரணமொடு புணர (கள.நூ. 1-1)**

**கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே (கள.நூ. 2-1)**

**மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம் (கள.நூ. 3-1)**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப (கள.நூ. 4-2)**

**கரணத்தின் அமைந்து முடிந்த காலை (கள.நூ. 5-1)**

**மன்றல்**

**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் (கள.நூ. 1-4)**

இத்தகைய சொற்களைக் காணமுடிகின்றது.

## தொல்காப்பியர் கூறும் மணம்

திருமணத்தைக் களவு மணம் என்றும் கற்பு மணம் என்றும் இரண்டாகப் பண்டையத் தமிழர்கள் பிரித்துக்கூறியுள்ளனர்.

### களவு மணம்

தலைவன், தலைவியர் ஆகிய இருவரும் திருமணத்துக்கு முன்பு தாமாகவே கண்டும் கூடியும் இன்புற்று வாழ்வது களவு மணமாகும்.

### கற்பு மணம்

களவு மணம் நடந்த பிறகு கற்பு மணம் பெரும்பாலும் நடைபெறும். பலர் அறிய மணம் செய்து கொண்டு வாழுகின்ற வாழ்க்கையையே கற்பு மணம் என்பர்.

தலைவன் தலைவியை மணம் செய்து கொள்வதனைத் தொல்காப்பியர் வெளிப்பட வரைதல், படாமை வரைதல் என்று இரண்டாகப் பகுத்துக்கூறியுள்ளார். இதனை,

**வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரண் டென்பர் வரைதல் ஆறே. (தொல்.கள. 49)**

என்னும் நூற்பா குறிக்கும். தலைவியை மணம் புரிந்து கொள்வது களவு வெளிப்பட்ட பின்னர் மணம் செய்தல், களவு வெளிப்படுவதன் முன்னர் மணம் செய்தல் என இரண்டு வகை உண்டு என்பதனை இந்நூற்பாவழிக் காணமுடிகின்றது.

தலைவன், தலைவியின் பெற்றோர் உவந்து கொடுத்தல் இன்றியும் தலைவியை உடன்போக்கின் வழி அழைத்துச் சென்று உலகத்தார் அறியத் திருமணச் சடங்கு நடைபெறும் என்பதனை,

**கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**

**புணர்ந்துடன் போகிய காலையான. (தொல்.கற். 2)**

என்ற நூற்பாவழி அறியலாம்.

**கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே.**

**(தொல்.கற். 1)**

என்னும் நூற்பா கற்புமணம் குறித்து கூறுகின்றது.

ஆரிய மக்களிடையே நிலவி வந்த எண்வகைத் திருமணங்களை,

**இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**

**காமக் கூட்டம் காணுங் காலை**

**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**

**துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே.**

**(தொல்.கள. 1)**

என்ற நூற்பாவில் **தொல்காப்பியர்** குறிப்பிடுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| **1. பிரமம்** | **2. பிரசாபத்தியம்** | **3. ஆரிடம்** | **4. தெய்வம்** |
| **5. காந்தருவம்** | **6. அசுரம்** | **7. இராக்கதம்** | **8. பைசாசம்** |

என்பன அந்த எண்வகை மணங்களாகும்.

**இளம்பூரணர்** எண்வகைத் திருமணங்கள் குறித்துப் கூறுவதனை,

**பிரம்மாவது கன்னியை அணிகலன்**

**அணிந்து பிரமசாரியாய் இருப்பான்**

**ஒருவனுக்குத் தானமாகக் கொடுப்பது**

**பிரசாபத்தியமாவது மகட் கோடற்குரிய**

**கோத்திரத்தால் மகள் வேண்டியவழி இரு**

**முதுகுரவரும் இயைந்து கொடுப்பது**

**ஆரிடமாவது ஒன்றானும் இரண்டானும்**

**ஆவும் ஆனேறும் வாங்கிக் கொடுப்பது**

**தெய்வமாவது வேள்விக்கு ஆசிரியராய்**

**நின்றார் பலருள்ளும் ஒருவற்கு**

**வேள்வித்தீ முன்னர் கொடுப்பது**

**காந்தருவம் ஆவது ஒத்த இருவர்**

**தாமே கூடும் கூட்டம் அசுரமாவது**

**வில்லேற்றினானாதல் திரியின்றி**

**எய்தானாதல் கோடற்குரிய ளெனக்**

**கூறியவழி அது செய்தார்க்குக் கொடுத்தல்**

**இராக்கதமாவது தலைமகள் தன்னிலும்**

**தமரினும் பெறாது வலிதிற் கொள்வது**

**பைசாசமாவது களித்தார் மாட்டும் துயின்றார்**

**மாட்டும் கூடுதல். (தொல்.இளம்.உரை. கள.1)**

என்ற நூற்பா வழி அறியலாம்.

### திருமணம் தோன்றக் காரணம்

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப. (தொல். கற்.4)**

என்னும் நூற்பா ஆண், பெண் உறவில் பொய்த்தன்மையும், குற்றமும் ஏற்பட்ட பிறகு திருமணம் என்னும் சடங்கினைச் சான்றோர்கள் உருவாக்கியுள்ளனர் என்று குறிப்பிடுகின்றன.

### சங்க இலக்கியத்தில் திருமணம் (களவு, கற்பு) குறித்து வருமிடங்கள்

**மணஅணி**

**மைதவழ் வெற்பன் மண அணி காணாமல்**

**(கலித். 39-41)**

**மணஇல்**

**மணஇல் கமழும் மாமலைச் சாரல். (மலை. 151)**

மணந்த

குருகு முண்டு தான் மணந்த ஞான்றே. (குறுந். 25-5)

புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே. (குறுந். 50-5)

நற்றோண் மணந்த ஞான்றே. (குறுந். 36-4)

மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே .

(குறுந். 68-4)

மைஇரு நூற்று இமை உண்கண் மான்மறி தோள் மணந்த ஞான்று

(பரி. 9-8)

மாசுஇல் வண்சேக்கை மணந்த புணர்ச்சியுள்.

(கலித். 24-6)

மறையில் தான் மருவுற மணந்த நட்பு அருகலான்.

(கலித். 45-22)

வரையக வெற்பன் மணந்த மார்பே! (அக. 242-22)

மணந்தவன்

திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த.

(கலித். 131-2)

மணந்தனை

மறையச் செல்லும், நீ மணந்தனை விடினே.

(கலித். 125-24)

வாவே தெய்ய, மணந்தனை செயற்கே. (அக. 240-15)

மணந்தனை அருளால் ஆயினும். (ஐங். 83-1)

மணநாள்

மன்ற வேங்கை மணநாட் பூத்த. (அக. 232-7)

மணம்

மணம் புணர்ந்து ஓங்கிய, அணங்குடை நல்இல்.

(மது. 578)

நாடுஅறி நல்மணம் அயர்கம். (குறிஞ். 232)

ஒன்றுமணஞ் செய்தன ளிவளெனின். (குறுந். 347-5)

மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே. (குறுந். 364-8)

மணம் நயந்தனன், அம் மலைகிழ வோற்கே. (கலித். 41-44)

முத்துஏர் முறுவலாய்! நாம் மணம் புக்கக்கால். (கலித். 93-11)

பெருமணம் பண்ணி, அறத்தினில் கொண்ட. (கலித். 96-33)

ஒருமணம் தான் அறியும். (கலித். 114-17)

இருமணம் கூடுதல் இல்இயல்பு அன்றே? (கலித். 114-21)

பல்மணம் மன்னுபின் இருங் கூந்தலர். (பரி. 19-89)

மணமகடூஉ

புதுமண மகடூஉ அயினிய கடிநகர். (அக. 141-14)

மணமனை

ஒலிகொண்ட சும்மையான் மணமனை குறித்து. (கலித். 68-18)

மணமனைத் ததும்பும். (கலித். 70-10)

மணமுழ

நின்மண முழவந்து எடுப்புமே. (கலித். 70-10)

மணமுழவு

படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ. (அக. 136-7)

மன்றல்

தொன்று இயல் மரபின் மன்றல் அயர. (அக. 112-16)

மன்றல் வேண்டினும் பெறுகுவை. (அக. 318-8)

மன்றலும் உடையள் கொல் - தோழி! யாயே? (ஐங். 253-4)

மாசின் மகளிர் மன்ற னன்றும் (புற. 287-11)

இருவேம் ஆய்ந்த மன்றல் இதுஎன. (குறிஞ். 21)

வதுவை

வதுவை நாறும் வண்டுகமழ் ஐம்பால். (மலை. 30)

வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட. (திருமுருகு. 117)

நல்நாள் வதுவை கூடி நீடுஇன்று. (நற். 125-7)

வதுவை என்று அவர்வந்த ஞான்றே. (நற். 386-10)

வதுவை அயர விரும்புதி நீயே. (ஐங். 61-5)

நல்மனை வதுவை அயர, இவள். (ஐங். 294-4)

உமையொடு புணர்ந்து, காம வதுவையுள். (பரி. 5-28)

மாறுகொள்வது போலும், மயிற்கொடி வதுவை. (பரி. 19-7)

விண்தோய் கல் நாடனும் நீயும் வதுவையுள் (கலித். 39-37)

வதுவை அயர்தல் வேண்டுவல். (கலித். 52-23)

வதுவைஅம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை?

(கலித். 66-12)

அன்று நம் வதுவையுள் நமர் செய்வது இன்று, எங்கே.

(கலித். 76-20)

வதுவை அயர்வாரைக் கண்டு? (கலித். 114-4)

வதுவையும் ஈங்கே அயர்ப; அதுவே யாம். (கலித். 115-20)

வதுவை அயர்ந்தனை என்ப. அலரே, (அக. 36-12)

வதுவை அயர்ந்தனை என்ப. (அக. 46-10)

வதுவை அயர்தல் வேண்டி. (அக. 66-8)

வதுவை கூடிய பின்றை. (அக. 70-8)

வதுவை மேவலன் ஆகலின். (அக. 206-12)

வதுவை அயர்ந்தனர் நமரே. (அக. 221-4)

வதுவை ஈரணி

வதுவை ஈர்அணிப் பொலிந்து. (அக. 166-13)

வதுவை நன்மணம்

வதுவை நல்மணம் கழிந்த பின்றை. (அக. 86-17)

எம்மனை வதுவை நல்மணம் கழிகஎன. (ஐங். 399-2)

வதுவை நாண் ஒடுக்கம்

வதுவை நாண் ஒடுக்கமும், காண்குவல் யானே. (கலித். 52-25)

வதுவை நாண் ஒடுக்கமும் காணுங்காலே? (நற்றி. 393-13)

வதுவை நாள்

வதுவை நாளினும் இனியனால் எமக்கே. (அக. 352-17)

காதல் கொள் வதுவைநாள். (கலித். 69-3)

**வதுவை நாளால் வைகலும்.** **(கலித். 75-11)**

**வதுவை நாற்றம்**

**வதுவை நாற்றம் புதுவது கஞல.** **(அக. 25-5)**

**வதுவை மகளிர்**

**வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள.** **(அக. 378-2)**

**வதுவை மகளிர் நோக்கினர்.** **(பதிற். 89-17)**

**வதுவை மண்ணிய மகளிர்**

**வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று.** **(அக. 136-8)**

**வதுவை விழவணி**

**வதுவை விழவுஅணி வைகலும் காட்டினையாய்.** **(கலித். 98-3)**

**வதுவை விழவு**

**வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்.** **(புறநா. 372-10)**

**வரைந்த நாள்**

**வல்லே வருக, வரைந்த நாள்!** **(அக. 282-16)**

**வரைவு**

**வரைவுநன்று என்னாது அகலினும்.** **(அக. 119-4)**

**வதுவை நாளணி**

**வதுவை நாள்அணிப் புதுவோர்ப் புணரிய.** **(அக. 56-9)**

சங்க இலக்கியத்தில் திருமணம் களவு மணமாகவும், கற்பு மணமாகவும் அமைந்துள்ளமையை இதன்வழி அறியலாம்.

## திருமணம் அறிஞர்களின் வரையறை

ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேருவதே மணமாம். மணத்தல், கலத்தல் அல்லது கூடுதல் மணவாழ்க்கைக் கென்றே இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய் படைத்திருப்பதாலும், அதனிடத்து மிகுந்த அறப்பொறுப்புள்ளமையாலும், அது ஆயிரங்காலத்துப் பயிர் ஆகையாலும் வாழ்க்கைத் துணைவர் இருவரும் தெய்வத்தின் முன் அல்லது தெய்வத்தின் பேரில் பலரறிய ஆணையிட்டுக் கூடுவதாலும் மணம் தெய்வத்தன்மை பெற்றுத் திருமணம் எனப் பெற்றது என்பர்.[1]

திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒருபெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தில் ஏற்படுத்தப்பட்ட வினைமுறையாகும்.[2]

திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் ஒருவகைச் சடங்கு என்பர்.[3]

திருமணம் என்ற சொல்லுக்குப் பண்டைத் தமிழரால் வழங்கப்பெற்ற வேறுசொற்கள் மணம், மன்றல், வதுவை, வதுவை மணம், வரைவு என்பவையாகும். பொதுவாக இவற்றுள் தொல்காப்பியர் உரிச்சொல்லாக உணர்த்தும் ‘கடி’ என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் கூறுகிறார். அவற்றுள் நீக்குதல், காப்பு என்னும் பொருள்களோடு பிற்காலத்தில் ‘மணம்’ என்னும் பொருளும் சேர்ந்திருக்கலாம். நீராட்டுதலாகிய சிறப்பால் மணமும்; மன்றில் நடைபெறும் மாட்சியால் மன்றலும் வரையறை செய்வதால் வரைவும் அமைந்தன எனலாம்.[4]

திருமணம் என்பது சமூகத்திலுள்ள ஒரு வகை வழக்கு ஆகும். இது சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆண் - பெண் உறவு நிலையைக் குறிக்கிறது. அத்தோடு திருமணம் என்பது ஒரு புதிய சந்ததி தோன்றுவதற்குரிய ஒருவித பிணைப்பு.[5]

விவாகம் அல்லது திருமணம் என்று சொல்லப்படுவதெல்லாம் ஆணும், பெண்ணும் சேர்ந்து ஒருவர்க்கொருவர் கட்டுப்பட்டு, அவர்களது வாழ்க்கையைக் கூட்டுப்பொறுப்பில் நடத்துவதற்குப் பலர் அறியச் செய்து கொள்ளும் காரியமே ஆகும்.[6]

வரைவு கடாவுதல் முதலியன நிகழ்ந்த பின்னர் திருமணம் நடைபெறும். பழந்தமிழரின் மணவினை பிற்காலத்தில் ஆரியர் புகுத்திய மணவினையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. சிலப்பதிகாரத்தில் வரும் மணவினை ஆரியர் முறைக்கேற்ப அமைந்ததாகும். பழந்தமிழர் திருமணவினையில் ஆரியச் சடங்குகள் கிடையா. அதில் தீயை வளர்ப்பது, தீயினை மணமகனும் மணமகளும் சுற்றிவருவது ஆகிய சடங்குகள் இல்லை; மணவினைக்குத் தலைமை பூண்டு நடத்தும் பார்ப்பானும் இல்லை.[7]

கலித்தொகையில் இக்கருத்து மாறுபடுகின்றது. ஆரியச் சடங்குகள் இடம்பெற்றுள்ளது.

விவாகம் என்பது அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பயன்களையும் பெறுவதற்காக ஒரு வாழ்க்கைத் துணையைப் பெறுதல்.[8]

பொய்யும் வழுவும் தோன்றிய பிற்பாடே, சமுதாயத்தின் திருமணமுறைக் குறைபாடு இனச்சான்றோர்க்கட்குப் புலனாயிற்று. வழுவிற்குக் காரணம் பொய். வழுவகல வேண்டின் பொய் அகல வேண்டும். மணப்பக்குவம் எய்தியிருக்கும் பெண்ணுக்கும், பக்குவம் வந்து மணம் எய்திய பெண்ணுக்கும் புறத்தோற்றத்தில் யாரும் காண அடையாளம் வேண்டும் என்று சான்றோர்கட்குப்பட்டது. வேறுபாடு காட்டும் கரணம் சடங்கு – வகுத்தனர். 'பொய்யும் வழுவும்' என்ற தொல்காப்பியப்பாவின் கருத்து இதுவே.[9]

மலரின்கண் மணம் வெளிப்படுவது போல் மணமக்களின் மனத்தகத்து அன்பு மலரும். இச்சிறப்பு உணர்ந்த தமிழ்மக்கள், இந்நிகழ்ச்சி (மணவினையை) மணமென மனமுவப்பக் கூறினார். மணமென்பது மணமக்களின் மணமொத்ததாகும். வாழ்வு முழுவதும் மணம் பெற்றுத் திகழ்வதற்கு ஏதுவான இந்நிகழ்ச்சியை மணம் என்று பெயரிட்டமை ஏற்புடையதாகும்.[10]

## களவு – கற்பு அறிஞர்களின் வரையறை

அகவிலக்கிய மாளிகைக்கு வேண்டும் கட்டுமானப் பொருள்கள் தமிழ்ச் சமுதாயத்திலிருந்தே கொள்ளப்பட்டவை. களவுமுறை நாடெங்கும் காணக்கிடந்த ஓரொழுக்கமாகும். அதற்குத் தமிழ்ச் சமுதாயம் ஊட்டமொழி ஒப்புதல் அளித்தது. ஒவ்வொரு கற்பும் களவின் வழிப்பட்டதுவே என்றும், களவின் வழிவந்த கற்பேதான் சிறப்பினது என்றும் பலர் கொண்டிருக்கும் கருத்து தமிழர் நெறி என்க. களவின்வழி வராது பெற்றோர் தாமே முடித்த மரபுத் திருமணங்கள் சமுதாயத்தாலும் சான்றோராலும் மேலாகவே மதிக்கப்பெற்றன.[11]

இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் செல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடுஞ் செய்யப்படுவது.[12]

கற்பாகத் திருமணமாக முடியுங்கால், களவு நெறி நன்னெறி எனப்போற்றப்படும். இன்றேல் கள்ளத்தனம் என இகழப்படும். கற்பென்னும் மணவாழ்க்கைக்கு முன்னரெல்லாம் களவென்றும் மறைவு நெறி ஒரு தலையாக

நடக்கவேண்டுமோ எனின் இல்லை. களவின் முடிபு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானது.[13]

கற்பொழுக்கம் என்பது விதிப்படி மணஞ்செய்து கொண்ட தலைவனும் தலைவியும் அறநூல்களிற் கொள்ளற்பாலனவற்றைக் கொண்டும் தள்ளற்பாலனவற்றைத் தள்ளியும் இல்லறத்தின் கண்ணே வழுவாது ஒழுகுதல்.[14]

களவு கற்பு என்பன சமுதாயநிலை நோக்கிய சொற்கள். சமுதாயத்திற்கு மறைவு களவு எனவும், வெளிப்படை கற்பு எனவும் படும். உள்ளம் ஒன்றிய காதலர்தம் அன்புநிலை நோக்கின், களவும் கற்பேயாம். சமுதாய ஒழுங்குக்கு உட்படுவான் தூய காதலாளர்கள் மணநிலை கொள்வர். அஃதன்றித் திருமணத்தால் உள்ளம் ஒன்றும் என்றோ, காதல் தூய்மை பெறும் என்றோ அகத்திணைக்கண் பொருள்கொள்ளல் ஆகாது. காதலர்கள் எஞ்ஞான்றும் கற்புடையவர்கள், அன்பினர் என்பது அகத்திணைக் கோளாகும்.[15]

கல் போன்று தளராதிருத்தல் கற்பெனப்படும். ஒருவனும் ஒருத்தியுமாகக் கற்பொழுக்கம் ஏற்றவர் அன்பில் கல்தன்மையராய் நிலைபெற்று நிற்றலே கற்பொழுக்கம் எனப்படும்.[16]

திருமணம் பலவகைகளில் நடைபெறுகின்றன. ஒருவன் அல்லது ஒருத்தி எத்தனை பேரை மணந்து கொள்கிறார்கள் என்பதனைப் பொறுத்துத் திருமண வகை காணப்படுகின்றது.

1. **ஒரு துணை மணம் (Monogamy)**
2. **பல துணை மணம் (Polygamy)**

என்று இருவகையாக இதனைப் பிரிக்கலாம்.

ஒருவரைத் திருமணம் செய்து கொள்வது ஒருதுணை மணம் என்றும், பலரைத் திருமணம் செய்து கொள்வது பலதுணை மணம் என்றும் கூறுவர்.

அவ்வகையில் பெருங்கதைக் காப்பியம் பலதுணை மணம் (Polygamy) முறையில் காணப்படுகின்றது.

பெருங்கதையில் கதைத்தலைவனான உதயணன் வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை, விரிச்சிகை என்ற நான்கு பெண்களை மணந்து கொள்கிறான்.

பெருங்கதையில் களவு மணம், கற்பு மணம் என்றும் இருவகை மணங்களையும் காணமுடிகின்றது.

வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை ஆகியோர் திருமணங்கள் களவு மணம் ஆகும்.

விரிச்சிகை, மதனமஞ்சிகை ஆகியோரின் திருமணங்கள் பெற்றோரால் ஏற்பாடு செய்த கற்பு மணம் ஆகும்.

**உதயணன் - வாசவதத்ததை திருமணம் (முதல் மணம்)**

வாசவதத்தைக்கும் உதயணனுக்கும் நடைபெற இருக்கும் திருமணத்தினை,

**பொலிந்த சுமையொடு பொன்னணி மூதூர்**
**மலிந்தகம் புக்கபின் மண்பொறை கூரப்**
**பெறலரும் பெருங்கிளை இறைகொண் டீண்டி**
**இன்மகிழ் இருக்கை ஏயர் மகனொடு**
**தண்மகிழ் நெடுங்குழல் தத்தொளித் தாமத்து**
**மதிக்கவின் அழித்த மாசறு திருமுகத்**
**தணிக்கவின் கொண்ட ஐயரித் தடங்கண்**
**வனப்புவீற் றிருந்த வாசவதத்தை**
**வதுவைச் செல்வம் விதியிற் கூறுவேன். (பெருங். 2:2: 1-9)**

என பெருங்கதை குறிக்கிறது. ஏயர் மரபினராகிய உதயணனுக்கும், குழல் முதலியவற்றை உடைய வாசவதத்தைக்கும் இடையே நிகழ்ந்த திருமணவிழாவின் இன்பத்தை வரிசைமுறையில் கூறுவேன் என முன்னுரை போன்று கூறுவது எண்ணத்தக்கது.

**திருமணநாளை கணியர் கணித்தல்**

திருமணத்திற்கான நன்னாளினைக் கணியர் கணித்துத் தந்தனர். இதனை,

**தரும்பரி சாரத்துப் பெருங்கணி வகுத்த**
**நன்னாள் இதுவெனப் பன்னா டறிய. (பெருங். 2:2: 24-25)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

**வள்ளுவன் முரசறைதல்**

திருமண நாளை முரசறைந்து ஊராருக்குத் தெரிவித்தனர் என்பதனைப் பல நூல்களில் காணமுடிகின்றது. அதனை, சிலப்பதிகாரம், கம்பராமாயணம், சூளாமணி முதலிய நூல்கள் கூறுகின்றன. அந்த வகையில் பெருங்கதையிலும் காணமுடிகின்றது.

**சிலப்பதிகாரம்**

கோவலன் கண்ணகி இருவரையும் அவருடைய பெற்றோர் ஒரு நன்னாளிலே திருமணக் கோலத்தில் காண விரும்பினர். இதனால் மங்கல மகளிரை யானை மீது ஏற்றி திருமணச் செய்தியை நகர் எல்லாம் தெரிவித்தனர் என்ற செய்தியை,

**இருபெருங் குரவரும் ஒருபெரு நாளில்**
**மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி**
**யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ**
**மாநகர்க் கீந்தார் மணம்.** (1:1: 41-44)

என்ற பாடலின் வழி அறியலாம்.

**கம்பராமாயணம்**

தேவர்களுக்கு ஆதிதேவனான திருமாலின் திருவவதார மூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானும், மனத்திலே இங்ஙனம் கருதியுள்ளவனாக சனகராமன், வண்டுகள் மகிழ்தற்கிடமான கூந்தலையுடைய சீதையினது திருக்கல்யாணம் நாளைக்காகும். அதன் பொருட்டு பூக்களாலும், இரத்தினங்களாலும், சீலைகளாலும், இயற்கையிலே அழகான அந்த மிதிலாப் பட்டணத்தை புதிதாக அலங்கரிப்பீர்கள் என்று சொல்லி தனது கட்டளையை, யானையின் மேலே வைத்த அழகிய பேரிகைமூலமாக வள்ளுவரைக் கொண்டு முரசினை அடிப்பித்துத் தெரிவித்தனர் என்ற செய்தியை,

**மானவர் பெருமானும் மனநினை வினனாகத்**
**தேனநகு குழலாடன் றிருமண வினைநாளைப்**
**பூநகு மணிவாசம் புனைநக ரணிவீ ரென்று**
**ஆனையின் மிசை யானை யணிமுர சறைவித்தான்.** (1:23: 1178)

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

**சூளாமணி**

மாசுதீர்த்த மணியை யொத்த சுயம்பிரபையின் திருமண நன்னாளை, இசையெழுப்புதலையுடைய முரசு கொண்டு எல்லாவிடமும் அறிவித்தனர். இதனை,

**கழுவும் மணிபோல் பவடன் கடிநாள்**
**எழுவும் முரசெங் குமியம் பினவே. (8: 1074)**

என்ற பாடலடிகள் வழி உணரலாம்.

சுயம்வரச் செய்தியை அறிவித்தற்கியன்ற முரசினை, எருத்தின்மேல் ஏறியிருந்து முழக்கி அறிவிப்பீராக என்று முரசறை மரபினர்க்கு தெரிவித்தான். இதனை,

**திருத்தகு சயம்வர முரசந் திண்களிற்**
**றெருத்தின்மே லறைகென விறைவ னேயினான். (10: 1762)**

என்னும் பாடலடிகளால் புலப்படுகின்றது.

இந்த நாள் தொடங்கி வரும் பத்துநாட்களும், திருமணத்திற்கு என்று குறிக்கப்பட்டுள்ளமையால், இவ்வுலகில் வாழும் அனைவரும் வருக, என்றிவ்வாறு கூறி, இடிக்கும் முரசு முழங்கப்பட்டது. இதனை,

**இன்றைநா ளுள்ளுறுத் தீரைஞ் ஞாள்களும்**
**மன்றலஞ் சயமரம் வரைந்த தாதலால்**
**ஒன்றிவா ழுரசரோ டுலக மீண்டுக**
**வென்றுதா னிடிமுர சறைந்த தென்பவே. (10: 1766)**

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

இவ்வாறு சூளாமணியில் வள்ளுவன் முரசறைந்து திருமணச் செய்தியைத் தெரிவித்தான் என்பதனைக் காணமுடிகின்றது.

இதனைப் போன்று பெருங்கதைக் காப்பியத்திலும் உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் நடக்கவிருக்கும் திருமணச்செய்தியை வள்ளுவன் முரசறைந்து தெரிவித்ததனைக் காணமுடிகின்றது.

களிற்றியானைப் படைகளை உடைய பெரிய மன்னனாகிய பிரச்சோதனனுடைய குலமகளாகிய மென்மையையும், அணிகலன்களையும், சீறடியினையும், புருவத்தினையும், கண்ணையும், இனிய நகையையும், பவழம்

போன்ற வாயையும் உடைய வாசவதத்தையோடு கோசம்பி மன்னனாகிய உதயணன் மணம் புரிந்து கொள்ளும் காலம் இதுவாகும் என்று வள்ளுவன் முரசறைந்து தெரிவித்தான். இச்செய்தியை,

**பல்களிற் றியானைப் படைப்பெரு வேந்தன்**
**மெல்லியற் குலமகள் மிடைமணிப் பைம்பூண்**
**சிலம்பொலிச் சீறடிச் சென்றேந்து புருவத்**
**திலங்கொளி வாட்கண் இன்னகைத் துவர்வாய்**
**வாசவ தத்தையொடு வதுவை கூடிக்**
**கோல நீள்மதிற் கொடிக்கோ சம்பி**
**மாலை மன்னவன் மணமகன் ஆகும்**
**காலை இதுவெனக் கதிர்மணிக் கடிப்பிற்**
**கண்அதிர்ந் தியம்ப இன்மொழி பயிற்றிக்**
**கல்லென அறையும் ஒல்லென் கம்பலை**
**அறைந்தறி வுறீஇய பின்றை.** **(2:2: 45-55)**

என்ற பெருங்கதைப் பாடலின்வழி இச்செய்தியினைக் கொங்குவேளிர் கூறுகின்றார்.

**நகர் அலங்கரித்தல்**

திருமணத்தின் பொழுது நகரினை அலங்கரிக்கும் செய்தியினைப் பெருங்கதையில்,

சயந்தி நகரமாந்தர் அத்திருமண விழாவினைப் பெரிதும் விரும்பி வீடுகள்தோறும், தோரணக்கம்பங்களை வானைத்தீண்ட நட்டு, பொன் மாலைகளோடு முத்து மாலைகளையும் ஒன்றாக வளைத்துக் கட்டி அலங்கரித்து அழகுபடுத்தினர். இச்செய்தியை,

**பெரும்பெயர் மூதூர் விரும்புபு துவன்றிப்**
**படையமை நெடுமதிற் கடைமுகந் தோறும்**
**பசும்பொன் தோரணம் விசும்புற நாட்டி**
**அரும்பொன் தாரோ டணிகதிர் முத்தின்**
**இரும்பெருந் தாமம் ஒருங்குடன் வளைஇ.** **(2:2: 56-60)**

என்ற வரிகளின் வழி அறியலாம்.

## நல்ல முழுத்தம் (முகூர்த்தம்) பார்த்தல்

திருமணத்தின் மகிழ்ச்சி ஆரவாரம் சயந்திநகர் முழுதும் எழுந்ததது. நல்ல முகூர்த்தத்தினைக் கணித்தறியும் கணிகன், நாள்கோள் முதலியவற்றை விழிப்புடன் ஆராய்ந்து பார்த்து உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் உயிர் ஒன்றென்றும் உரிமையைத் தரும் திருமணம் நடத்துவதற்கு நல்ல நாளினை (முகூர்த்தம்) அறிந்து கூறினான். இதனை, 'ஓருயிர்க்கிழமை' என்ற சொற்களின் மூலம் ஈருயிர்கள் ஒன்றுபட்டு ஓருயிராக விளங்குகின்ற தன்மையை கொங்குவேளிர் குறிப்பிடுகின்றார். இதனை,

**கடிகமழ் செல்வங் கலந்த காலை**
**இடியுறழ் முரசின் ஏயர்பெரு மகற்கும்**
**பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்**
**வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்**
**ஓருயிர்க்கிழமை ஓரை அளக்கும்**
**பேரிய லாளர் பிழைப்பிலர் நோக்கி**
**வழுவில் செந்தீப் பழுதில வேட்கும்**
**பொழுதுமற் றிதுவெனப் புரையோர்க் குரைப்ப. (2:3: 1-8)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## ஓருயிர்க்கிழமை

சங்க நூல்களில் அகநானூற்றுப் பாடல்களாகிய 86, 136 இவை இரண்டு மட்டுமே பண்டையத் தமிழரின் திருமணமுறையை விரிவாகக் கூறியுள்ளன. 'இம்முறையே தமிழரின் தன்னேரில்லாத தனியுரிமை உடைய திருமணமுறையாகும். இது மிகுதொல் பழங்காலத்தே தமிழகத்து நிலவிய ஈருயிர் ஒன்று சேர் ஓருயிர்க்கிழமை' எனப்படும் திருமணமாகும்.[17] என்ற முனுசாமி அவர்களின் நூலில் 'ஓருயிர்கிழமை' பற்றி கூறியுள்ளமையைக் காணமுடிகின்றது.

## வேள்வித்தீ வளர்த்தல்

பழந்தமிழர் மணத்தில் தீ வளர்த்தல், தீயினை வலம் வருதல் போன்ற வைதீகச் சடங்குகள் இடம்பெறவில்லை. சங்ககால இறுதியில் இத்தகைய

சடங்குகளானது இடம் பெற்றிருப்பதினை அறியலாம். திருமணங்களில் அந்தணர் கலந்து கொண்டதும் மணமக்கள் தீயினை வலம் வந்ததும் கலித்தொகையில் காணப்படுகின்றது. இதனை,

**போதுஅவிழ் பனிப்பொய்கை புதுவது தளைவிட்ட**
**தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறம்சேர்பு,**
**காதல்கொள் வதுவைநாள் கலிங்கத்துள் ஒடுங்கிய**
**மாதர்கொள் மான்நோக்கின் மடந்தைதன் துணையாக,**
**ஓதுடை அந்தணன் எரிவலஞ் செய்வான்போல்**
**ஆய்தூவி அன்னம்தன் அணிநடைப் பெடையோடு,**
**மேதகத் திரிதரூஉம் மிகுபுனல் நல்லூர!** (கலித். 69: 1-7)

என்ற பாடலின்வழி வேள்வித்தீ வளர்த்தல் சங்க இலக்கியத்தில் இடம்பெறுவதனைக் காணமுடிகின்றது.

பார்ப்பனர்குரிய ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய ஆறு தொழிலையுடையவனும், அவற்றுள் வேள்வித் தொழிலின்கண் சிறப்புடையவனும் இடையறாது வேதத்தைப் பயின்ற செந்நாவினை உடையவனும், தாய் மரபும் தந்தை மரபுமாகிய இருமரபானும் தூயவனும் ஆகிய பார்ப்பனன் திருமணப்பந்தர் இடத்திலே நல்லிலக்கணம் அமைந்த இடத்தினை ஆராய்ந்து அங்கு வெள்ளிய மணலைப் பரப்பி முக்குழியமைத்து அவற்றின் சமிதைகளையிட்டு அவியாத வேள்வித்தீயை வளர்த்தான். இதனை,

**அறுதொழின் முத்தீ அருந்துறை போகிய**
**மறைநவில் நாவின் மரபியல் அந்தணன்**
**பல்பூம் பந்தருட் செல்வஞ் சிறக்கும்**
**இருநிலத் திலக்கணம் இயற்பட நாடி**
**வெண்மணல் நிரப்பங் கொளீஇக் கண்ணுறப்**
**புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை**
**முக்குழிக் கூட்டத் துட்பட ஓக்கி**
**ஆற்றாச் செந்தீ அமைத்தனன் மேற்கொள.** (2:3: 9-16)

என்று பெருங்கதையின் வழி அறியலாம்.

வேள்வித்தீ வளர்த்து, அதனை மணமக்கள் வலம் வருகின்ற செய்தியைப் பிறநூல்களிலும் காணமுடிகின்றது.

**நாலாயிர திவ்ய பிரபந்தம்**

தோழீ! நன்றாக ஓதின வைதிகர்கள் சிறந்த வேத வாக்கியங்களை உச்சரிக்க அதற்குரிய மந்திரங்களைக் கொண்டு பசுமையான திருப்பையைப் பரப்பி, சமித்துக்களை வைத்து மிக்க சினத்தையுடைய பராக்கிரமம் மிக்க மதக்களிறு போன்ற கண்ணபிரான் என் கையைப் பிடித்துக் கொண்டு தீவலம் செய்ய நான் கனாக் கண்டேன் என்று ஆண்டாள் கூறுவதன் வழி தீவலம் வரும் செய்தியினை,

**வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்**
**பாசிலை நாணல் படுத்துப்பரிதி வைத்து**
**காய்சின மாகளிறு அன்னான் என்கைப்பற்றி**
**தீவலம் செய்யக் கனாக் கண்டேன் தோழீ! நான். (நாச்சி. திரு: 59)**

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**சூளாமணி**

தூண்டப்பட்ட ஒளிப்பிழம்பையுடைய விளக்கைப் போன்ற சுயம்பிரபையுடனே, திவிட்டநம்பி திருமணத்தின் போது தீயை வலம் வருவது பேரழகுடையது என்றச் செய்தியினை,

**தூண்டிய சுடர்விளக் கன்ன கன்னியோ**
**டாண்டகை யழல்வலஞ் செய்யு மாரணி. (8: 1068)**

என்ற பாடல் வரிகளின் வழி தெளியலாம்.

**சீவகசிந்தாமணி**

காப்பியத் தலைவன் சீவகன், காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை எனும் எட்டு பெண்களைத் திருமணம் செய்து கொள்கிறான். அவன் நாமகளையும். பூமகளையும். வீரத்தால் மண்மகளையும், வீடுபேறு அடைந்ததால் முக்தி மகளையும் மணந்தான் என்று கூறுவதால் இந்நூல் ‘மணநூல்’ என்றும் அழைக்கப்படுகிறது. இத்தகைய சீவகசிந்தாமணியில் திருமண வேள்வி செய்தியினைக் காணமுடிகின்றது.

சீவகன் திருமணத்தின் போது வேள்வி செய்தனர் என்ற செய்தியினை,

**ஊன்திகழ் வேலினான் வேள்வி.** **(3: 823)**

என்ற வரியின் மூலம காணமுடிகின்றது.

### நிறைகுடங்களை அமைத்தல்

பந்தரில் இருந்த நாற்பத்தைந்து கால்களில் ஒவ்வொன்றிலும் ஒரு தெய்வம் இருப்பதாகக் கருதி, அக்கால்கள்தோறும் கூலமுளைகளையுடைய அகலிடத்தே பொன்னாலாகிய நிறைகுடங்களை அழகுற அமைத்தனர். இதனை,

**ஐஒன்ப தின்வகைத் தெய்வ நிலைஇய**
**கைபுனை வனப்பிற் கான்முதல் தோறும்**
**ஆரணங் காகிய அணிமுளை அகல்வாய்ப்**
**பூரண பொற்குடம் பொலிய இரீஇ.** **(2:3: 17-20)**

என்பதன் வழி அறியலாம்.

### உணவுப் பொருள் எஞ்சியிருத்தல்

மணல் பரப்பப்பட்ட அப்பந்தல் இடத்தில் நெய்யோடு கலந்த சிற்றுண்டிகளையும் அறுசுவை அடிசிலையும் அந்தணர் பலரும் பரவ இருந்து உண்டனர். எஞ்சிய உணவுப்பொருள் எல்லாம் ஒரு பக்கத்திலே குவிந்து கிடந்தன என்பதனை,

**வெண்மணன் ஞெமிரிய தண்ணிழற் பந்தருள்**
**ஐஇய வாசஆன் நெய்யொடு கலந்த**
**ஐவகை உணவொடு குய்வளங் கொளீஇ**
**நறிய வாகிய அறுசுவை அடிசிற்**
**பெருஞ்சோற் றமலை பரந்துபலர் மிசையும்**
**மிச்சல் எய்தா உட்குவர் ஒருசிறை.** **(2:3: 21-26)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியமுடிகின்றது.

### மணமக்களை வாழ்த்துதல்

பார்ப்பன முதுமகன் அம்மியிடப்பட்ட மூலையில் பெருமையுடையதொரு மேடையின்மேல் இருந்த அயிராணிக்கு (அரசாணி) முன்னர் வணங்கி ஆவிரை மலர் முதலியவற்றை இடைஇடையே வைத்துத் தொடுத்த அழகிய மாலையினைத் தூக்கி அருந்ததியையும், வதிட்ட முனிவரையும் பொருந்தும் மொழிகளாலே வாழ்த்தினான்.

வேத ஒழுக்கத்தைப் படைத்த நான்முகனுக்குரிய இடத்தில் இருந்து அந்தணர் பலரும் வந்து மணமக்களைப் புறநிலை வாழ்த்தாக வாழ்த்தினர் என்பதனை,

**விசை அம்மிக் குணதிசைக் கோணத்**
**தீடமை பீடிகை பாடுபெற இருந்த**
**பொன்னியி ராணி முன்வயிற் பேணிப்**
**பன்னிய பனுவற் பார்ப்பன முதுமகன்**
**அந்தண் ஆவிரை அலரும் அறுகையும்**
**நந்தி வட்டமும் இடைஇடை வலந்த**
**கோல மாலை நாற்றி வானத்**
**தருந்ததி அரிவையோ டாணிகற் பரவும்**
**பொருந்துமொழிப் புறநிலை புணர்ந்துபலர் வாழ்த்தி**
**நூன்முறை படைத்த நான்முகக் கடவுள்**
**தாண்முதல் தானத்துத் தகைபெற இரீஇ. (2:3: 27-37)**

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

இதனை தொல்காப்பியம்,

**வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப**
**பழிதீர் செல்வமொடு, வழிவழி சிறந்து**
**பொலிகமின் என்னும் புறநிலை வாழ்த்தே. (தொல்.செய். 106)**

வாழ்த்தியதாக கூறுகின்றது.

**அகநானூறு**

பண்டைத் தமிழர் பழக்கதையொட்டியே இந்நாளில் அரிசியும் மலரும் கலந்த அட்சதை இட்டு மணமக்களை வாழ்த்துகின்றனர். இதனை,

**வாலிழை மகளிர் நால்வர் கூடிக்**
**கற்பினின் வழாஅ நற்பல உதவிப்**
**பெற்றோர் பெட்டும் பிணையை ஆகென**
**நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி**
**பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**
**வதுவை நன்மணங் கழிந்த பின்றை. (அக.86: 12-17)**

என்ற அகநானூற்றுப் பாடலின்வழி அறியமுடிகின்றது.

## கடவுளுக்கு உணவுப்பலி கொடுத்தல்

பால் உலையில் வெந்த வெண்சோறு, தேனை நீராக வைத்த உலையில் வெந்த தேன்சோறு, புளிநீரில் வெந்த பொன்னிறமான புளிஞ்சோறு, கருப்பஞ்சாற்றில் சமைத்த அக்காரவடிசில், கருநிற உணவு முதலியவற்றைப் பொன்னாலும், மணியாலும், செம்பாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட அகல்களில் வைத்து தெய்வத்திற்கு உணவுப்பலி கொடுத்தனர். இதனை,

**பாலுலை வெந்த வாலவிழ்க் கலவையும்**
**தேறுலை வெந்த தூநிறத் துழவையும்**
**புளியலை வெந்த பொன்னிறப் புழுக்கலும்**
**கரும்புலை வெந்த கன்னற் றுழவையும்**
**நெய்யுலை வெந்த மைந்நிறப் புழுக்கொடு**
**பொன்னகல் மணியகல் செப்பகல் வெள்ளி**
**ஒண்ணிறப் போனக மண்ணக மலிர**
**அரிவையர் அடுமடை அமிழ்துகொண் டோச்சி. (2:3: 38-45)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## தெய்வங்களை வழிபடுதல்

ஐவகை மணப்பொருள்களையும் (தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கப்பூரம், வெற்றிலை) இவைகளை வலப்பக்கமாக வைத்துச் சந்தனத்தோடு மஞ்சளையும் தடவி இரும்பாற் செய்த அகலிடத்தே நிறைக்கப்பட்ட நெருப்பின்கண் மணப்பொருள்களை இட்டு நறுமணப்புகை உண்டாக்கி, தேவீர்! நீயிர் உமக்குரிய பசும்பொன் உலகைவிட்டு மலையிடத்து இருந்தாலும் அல்லது நிலத்திலே இருந்தாலும் அல்லது கடலிலே இருந்தாலும் அவற்றை விட்டுப் பிரச்சோதன மன்னன் மகளாகிய வாசவதத்தை உனக்கு தருகின்ற உணவு பலியினை விரும்பி ஏற்று அவர்களுக்கு ஆக்கமளியுங்கள் என வேண்டினர்.

இதனை,

**பஞ்ச வாசமொடு பாகுவலத் திரீஇ**
**அஞ்செஞ் சாந்தமொடு மஞ்சள் நீவி**

**இருப்பகல் நிறைந்த நெருப்புநிறை சுழற்றித்**

**தேவர் தூம மேவர எடுப்பி**

**மலையினீர் ஆயினு மண்ணினீர் ஆயினும்**

**அலைதிரைப் பௌவத் தகத்தினீர் ஆயினும்**

**விசும்பினீர் ஆயினும் விரும்புபு வந்துநும்**

**பசும்பொன் உலகம் பற்றுவிட் டொழிந்து**

**குடைநிழற் றானைக் கொற்றவன் மடமகள்**

**மடையமைந் துண்டு மங்கலந் தம்மென**

**ஒப்பக் கூறிச் செப்புவனர் அளிப்ப. (2:3: 46-56)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## பெண்கள் தெய்வங்களை தொழுதல்

முதுபெண்டிர் தம்மைக் கன்னிமகளிர் அன்னப்பறவையின் கூட்டம் போன்று சூழ்ந்துவர தானும் பந்தர்க்கால்களை மெல்ல வலம்வந்து உளுந்தும், நெல்லும், உப்பும், மலரும், வெற்றிலைச் சுருளும், சந்தனமும் ஆகிய மங்கலப் பொருள்களைத் தனது கைகளில் வைத்துக்கொண்டு காந்தள் இதழ் போன்ற தம் செவ்விய விரல்களைக் குவிந்த மொட்டுப்போலக் குவித்து ‘எல்லோரும் இதுபோல ஏழுமுறை செய்யுங்கள்’ என்று வணங்கிக்காட்டினர். அது போல கன்னி மகளிரும் அவ்வாறே செய்தனர். இதனை,

**கன்னி மகளிர் துன்னுவனர் சூழ**

**நான்முகக் கடவுளொடு தாண்முதல் தானம்**

**அன்னத் தொழுதியின் மென்மெல வலங்கொண்**

**டம்மென் சாயற் செம்முது பெண்டிர்**

**உழுந்துஞ் சாலியும் உப்பு மலரும்**

**பசுங்கிளிச் சிறையெனப் பக்கம் நிறைத்த**

**பாகுஞ் சாந்தமும் போகமொடு புணர்ந்த**

**மங்கல மரபின அங்கையுள் அடக்கிக்**

**கொழுமுகைச் செவ்விரல் போதெனக் கூப்பி**

**எழுமுறை இறைஞ்சுகென் றேத்துவனர் காட்ட**

**ஐதேந் தல்குலர் செய்கையிற் றிரியா**

**மடைத்தொழில் கழிந்தபி னடைப்பட நாட்டி.** (2:3: 57-68)

என்ற பெருங்கதைப் பாடலடிகள் வழி அறியலாம்.

### மணமகளை மணமகனின் அருகமர்த்தல்

அழகிய அணிகலன்களை அணிந்திருந்த வாசவதத்தையைக் காஞ்சனை என்பவள் அழைத்து வந்து மணமகனான உதயணன் அருகில் இருக்கச் செய்தனர். இதனை,

**அரம்போழ் அவ்வளை அணிந்த முன்கைச்**

**சுருங்காச் சுடரொளிச் செம்பொற் பட்டம்**

**சூளா மணியொடு துளங்குகடை துயல்வரும்**

**புல்லகம் பொருந்திய மெல்லென் ஓதிப்**

**பொன்னணி மாலை பொலிந்த பூமுடீஇ**

**வண்ணப் பூமுடி வாசவ தத்தையைச்**

**செண்ணக் காஞ்சனை செவ்விதின் தழீஇ**

**இலக்கந் திரியா தியற்பட இரீஇ**

**நலத்தகை மன்னவன் நட்பொடு புணர்த்த.** (2:3: 69-77)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### திருமணச் சடங்கு நிகழ்த்துதல்

மணவறைக்கு அருகில் மணையின் மேலிருந்த பார்ப்பன முதுமகன் கீழ்த்திசையை நோக்கிச் சமிதைத் தொழிலை நிறைவுடன் செய்து முடித்தான். மந்திர வழிப்படி பசு நெய்யினை வேள்வித்தீயில் இட்டு ‘போகமும் கற்பும் ஒருங்கே கூடி நிலை நிற்பனவாக’ என்று அச்சடங்கினது குறிப்புப் பொருளைக் கூறினான். இதனை,

**புண்ணியப் புறநடைப் பண்ணமை இருக்கையன்**

**உறுவரை உதயத் துச்சிமுக நோக்கி**

**அமைதிக் கொப்ப அளந்துகூட் டமைத்த**

**சமிதைக் கிரிகை சால்புளி கழிப்பி**

**மந்திர விழுநெறித் தந்திரம் பிழையாது**

**துடுப்பிற் றோய்த்த சேதா நறுநெய்**

**அடுத்த செந்தீ அங்கழல் ஆர்த்தி.** **(2:3: 78-84)**

என்ற பெருங்கதைப் பாடலின் மூலம் அறியலாம்.

## அம்மி மிதித்தல்

'அம்மி மிதிப்பது ஏனெனிலோ, கௌதம முனிவரின் மனைவியான அகலிகை, இந்திரனால் இச்சிக்கப்பட்டு கற்பிழந்தாள் ஆகலின், அதனைக் கண்ணுற்ற முனிவரின் கடுஞ்சினத்தால் கல்லாகுமாறு சபிக்கப்பட்டாள் என்பதை மணப்பெண்ணுக்கு நினைவூட்டவும் அம்மியாகக் கிடக்கும் கல்லினைக் காலால் மிதிப்பதன் மூலம் அப்படிப்பட்ட குற்றம் இழைக்காமல் வாழ்வதற்கு அவள் உறுதி கொள்வதற்கு அடையாளமாக நடைபெறும் சடங்கு'.[18]

என்றும்,

'அம்மி மிதித்தலுக்குச் சொல்லப்படும் மந்திரத்தின் பொருள்: இந்தக் கல்லைப் போன்று நீயும் நிலையாக இருக்கக் கடவாய், உன் மனமும் உறுதியாக இருக்க வேண்டும். உனக்குத் தீங்குகள் நேராமல் ஒழியட்டும் என்பதே ஆகும். கற்பு வரம் வாங்குவதே இச்சடங்கின் கருத்தாகுமென்பர்.[19]

என்றும் கூறுவதனைக் காணலாம்.

பெருங்கதையில் உதயணன் வாசவதத்தைக்கு நடந்த திருமண விழாவினை அழகு தோன்ற வருணித்துள்ள கொங்குவேளிர், உதயணன் வாசவதத்தையின் திருமணத்தின் போது அவளது தளிரடியைப் பற்றி அம்மி மேல் வைத்ததை,

**செந்தளிர்ச் சீறடி செவ்வனம் பற்றிப்**

**போகமும் கற்பும் புணர்ந்துடன் நிற்கென**

**ஆகுபொருள் கூறி அம்மிமுதல் உறீஇ** **(2:3: 86-88)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இதனைப் போன்ற பிற நூல்களிலும் 'அம்மி மிதித்தல்' சடங்கினைக் காணமுடிகின்றது.

**கம்பராமாயணம்**

விளங்குகின்ற ஒளியையுடைய அம்மிக்கல்லைக் காலால் சீதை மிதித்தாள் என்பதனை,

**இலங்கொளி யம்மி மிதித்து.** (1:22: 1250)

என்ற பாடல் வரியின் வழி அறியலாம்.

**நாச்சியார் திருமொழி**

தனது தெய்வீகத் திருமணத்தைக் கனவில் கண்டதாகப் பாடுகின்றாள் ஆண்டாள். இதனை,

**இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்**
**நம்மை உடையவன் நாராய ணன்நம்பி**
**செம்மை உடைய திருக்கையால் தாள்பற்றி**
**அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ! நான்.** (நாச்சி.திரு: 60)

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம். தோழீ! இப்பிறவிக்கும் மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றுக்கும் நமக்கும் பாதுகாவலனாய் இருப்பவனாகவும் உள்ள நாராயணனான கண்ணபிரான் செம்மையுடைய தனது திருக்கையால் எனது காலைப்பிடித்து ஏழடிகள் வைத்து அம்மியின் மேல் எடுத்து வைக்க நான் கனவுக் கண்டேன் என்று ஆண்டாள் கூறுவதிலிருந்து புலனாகின்றது.

**திருவிளையாடற் புராணம்**

திருவிளையாடற் புராணத்தில் திருமணப்படலத்தில் மீனாட்சியம்மை சுந்தரேசுவரர் திருமணத்தில் அம்மி மிதிக்கும் சடங்கினை,

**மங்கலம் புனைந்த செம்பொ னம்மிமேல் மணாட்டி பாத**
**பங்கய மலரைக் கையாற் பரிபுரம் சிலம்பப் பற்றிப்**
**புங்கவன் மனுவல் ஏற்றி.** (5: 787)

என்ற பாடலில், மங்கலமாக அலங்கரித்த செம்பொன்னால் ஆகிய அம்மியின் மேல், தேவியாரது திருவடித் தாமரை மலரை, சிலம்பு ஒலிக்க திருக்கையால் பிடித்து மந்திரத்தோடு தூக்கி வைத்தான் என்பதனைக் காணமுடிகின்றது.

### பொரியிடுதல்

திருமணத்தில் மற்றொரு முக்கியமான சடங்கு 'பொரியிடுதல்' ஆகும். மணமகள் தன் கணவன் நீண்ட தீர்க்காயுளுடன் இருக்க வேண்டும் என்று அக்கினியில் பொரியினால் ஹோமம் செய்ய வேண்டும். மணமகள் இரண்டு கைகளையும் ஒன்றாக சேர்த்து வைத்துக் கொள்ளுவாள். அந்த கைகள் நிறையுமாறு அவளுடைய சகோதரன் நெல்பொரியைக் கொடுப்பான். பிறகு அந்தப் பொரியின் மீது சிறிது நெய் சேர்த்து மணமகன் அவளுக்குப் பதிலாக மந்திரங் கூறி அவள் கைகளைப் பிடித்து பொரியை அக்கினியில் ஹோமம் செய்வான். அப்பொழுது சொல்லப்படும் மந்திரத்தின் பொருள்: 'என்னுடைய கணவன் நீண்ட ஆயுள் உள்ளவனாக இருக்கட்டும், நூறு ஆண்டுகள் வாழட்டும்' என்பதாகும்.[20]

பிறகு மணமக்கள் அக்கினியை வலமாக வந்து முன்போல் மணமகளின் வலது கால்கட்டை விரலைப்பிடித்து அம்மி மீது வைப்பான். இவ்வாறு மூன்று முறை மணமக்கள் அக்கினியை வலம் வந்து பொரியிடல் வேண்டும், பொரி உதவிய சகோதரனுக்கு அவரவர் வசதிக்கு ஏற்ப மரியாதை செய்தல் வேண்டும். மணமகன் மைத்துனன் கைக்குப் பொன் மோதிரம் அணிவித்து மாலைசூட்டி, அல்லது பட்டு உத்தரியமோ வாங்கிக் கொடுத்தல் வேண்டும்.[21]

இதனைப் பெருங்கதையில் கொங்குவேளிர்,

**நன்னெய் தீட்டிய செம்மலர் அங்கைப்**
**பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின். (2:3: 89-90)**

என்ற பாடலின் மூலம், மணமக்களின் கைகளிலே மங்கலப் பொரியினைக் கொடுத்து வேள்வித்தீ பொலிவுறும்படி அதை செய்தான் என்பதனைக் காணமுடிகின்றது.

### நாலாயிர திவ்ய பிரபந்தம்

நாச்சியாரின் பாசுரத்தில் இச்சடங்கு இடம்பெற்றுள்ளது. இதனை,

**வரிசிலை வாள்முகத்து என்னைமார் தாம்வந்திட்டு**
**எரிமுகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி**
**அரிமுகன் அச்சுதன் கைம்மேல் என்கை வைத்து**
**பொரிமுகந்து அட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்.**

**(நாச்சி.திரு: 61)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. தோழீ! எனது தமையன்மார்கள் வந்து அக்கினியை நன்றாக எரியச் செய்து அதன் முன்னால் என்னை நிறுத்தி நரசிம்மனாய் அவதரித்த கண்ணபிரானுடைய திருக்கையின் மேல் என்னுடைய கையை வைத்துப் பொரிகளை அள்ளிப் பரிமாற நான் கனவுக்கண்டேன் என்று கூறுவதன் மூலம் பொரியிடுதல் சடங்கினை இங்கு காணமுடிகின்றது.

**வில்லிபாரதம்**

**செங்கண் கரிய குழலாள் பொரி சிந்தினாளே.** **(வில்லி.1:5: 95)**

இப்பாடலின் வழி சிவந்த கண்களையும் கரிய கூந்தலையுமுடையாளான திரௌபதி, அக்கினியில் நெற்பொரியைச் தூவினாள் என்பதனை அறியமுடிகின்றது.

**அந்தணன் மணமக்களை வாழ்த்துதல்**

பார்ப்பன முதுமகன், மேருவும் நாவன்மரமும் பிரியாமல் நிலைத்திருப்பது போன்று பிரிவின்றி நீடுழி வாழ்க! என்று மணமக்களை வாழ்த்து கூறி திருமணச் சடங்குமுறை பிறழாமல் செய்தான். இதனை,

**நன்னிலை உலகினுள் நாவல் போலவும்**
**பொன்னணி நெடுமலை போலவும் பொழில்வயின்**
**மன்னுக இவரெனத் தன்னெறி பிழையான்**
**விதியிற் கூறிய விளங்கிழை வேட்கும்**
**அதிரா நெறியின் அத்தொழில் கழிந்தபின்.** **(2:3: 91-95)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**வாசவதத்தை தடுமாற்றம்**

தான் பிறந்த இல்லத்திற்குரிய சுற்றத்தார் நிறைந்திருந்து, தன் உடன்பிறந்த பாலகுமரர் மைத்துன முறைமையினை செய்துதர, தாயும் தந்தையும் தீமுன்னர் நின்று நீரினை வார்த்துக் கொடுக்கத் தன்னுடைய திருமணமானது நடைபெறாமல், திருமணமானது நடைபெறுவதாக ஆனதே என்ற எண்ணத்தால் மனமானது சுளித்தாள் போல தாழ்ச்சியோடு நடக்க அறியாமல் தடுமாறி நடக்கின்றாள் வாசவதத்தை என்று கூறுவதன் வழி வாசவதத்தையின் தடுமாற்றத்தினைக் கொங்குவேளிர் குறிப்பிடுகின்றார்.

முகம் சுளித்து தடுமாற நடந்தாளென்று கூறினாலும், அவளது மனம் உதயணனிடம் விருப்பமில்லை என்று கொள்ளல் இயலாது. இதனை,

**மதியின் அன்ன வாண்முகம் பொலிய**

**ஓடுகொடி மூக்கின் ஊடுபோழ்ந் தொன்றாய்க்**

**கூடுதல் வலித்த கொள்கைய போலப்**

**பொருது போந்துலாம் போதரித் தடங்கண்**

**அமிழ்துசேர்ந் தனகெ விதழ்நாண் இறக்கமொடு**

**பிறந்தஇற் பெருங்கிளை நிறைந்தொருங் கீண்டப்**

**பால குமரர் தோள்புகன் றெடுப்ப**

**நாடு நகரமுங் கூடுதற் கருளி**

**யாயு மெந்தையுந் தீமுன் னின்று**

**வாயிற் கூடுதல் வராதிவண் வந்தென**

**வலிபுணர் வதுவைக்குச் சுளியுநள் போல**

**நடத்தல் தேற்றா மடத்தகை மாதரை.** (2:3: 96-107)

என்ற பாடலின் வழி தெளியலாம்.

## உதயணன் வாசவதத்தைக்குக் கற்பித்தல்

உதயணன் அவள் கைப்பற்றித் தீயினை முறையாக வலம்வந்து குற்றமற்ற நன்மக்களைப் பெறுவாயாக என்று கூறிப் பின்னர் அவளது விரலைப் பற்றி துன்பமுறும் காலம் வந்த பொழுதிலும் மாறாத காதலோடு விளங்குவாயாக என்று கூறித் தன் விரலால் அவள் நெஞ்சினை நீவினான். இவ்வாறு செய்வது ஓர் சடங்காகும். பின்னர்த் தென்திசையில் பரப்பியிருந்த தருப்பையின் மீது வாசவதத்தையை நடக்கச்செய்து திரும்ப மணமேடைக்கு அழைத்து வந்து அமர்ந்தான். பின் அவர்களை அந்தணர் வாழ்த்தினர். இதனை,

**வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்**

**தளை யவிழ் தாரோன் வலமுறை வந்து**

**மறுவில் காதன் மக்களைப் பெறுகென**

**முறைமையிற் பிழையாது முகிழ்விரல் பற்றித்**

**தகாஅக் காலந்த தலைவரும் எனினும்**

**பகாஅக் காதலொடு பத்திமை....**

**செஞ்சுடர் போன்ற அங்குலி நுழையா**

**வெஞ்சுடர் வீரன் நெஞ்சுமுதல் நீவித்**

**தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை**

**மென்மருங் கெழிலியை மெல்லென நடாஅய்**

**வதுவைத் தானம் பொதுவந் தொன்றி**

**அந்த ணாளர் ஆசிடை கூற. (2:3: 108-119)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## அருந்ததி காட்டல்

மணவினையில் மணமக்கள் தீவலம் வந்து அம்மி மிதித்து அருந்ததி காட்டும் வினை நடைபெறும். மணமகன் தன் மனைவிக்குத் துருவ நட்சத்திரத்தையும் அருந்ததி நட்சத்திரத்தையுங் காட்டி வணங்க வேண்டும். சப்தரிஷிகளின் பத்தினிகளில் வசிட்டரின் பத்தினி அருந்ததியே மிக பதிவிரதையாகவும் சலனம் அற்றவளாகவும் இருப்பவள். அதேபோல் நீயும் இருப்பதோடு ஏழு பேருடன் எட்டாவதாக விளங்கி கற்பினாலும் பாக்கியத்தினாலும் விருத்தி அடையட்டும் எனக்கருதியே அருந்ததி நட்சத்திரத்தை மணமகன் மணமகளுக்குக் காட்டுவதன் பொருளாகும். அருந்ததி என்பதற்கு கணவன் மனதை அனுசரிப்பவள் எனப் பொருளாகும்.[22]

அருந்ததிகாட்டல் சடங்கினை பல நூல்களில் காணமுடிகின்றது.

## சங்க இலக்கியம்

சங்க இலக்கியத்திலும் அருந்ததியைக் கற்புக்கு எடுத்துக்காட்டாய் கூறியுள்ளமையை,

**வடமீன் புரையும் கற்பின் மடமொழி அரிவை. (புறநா: 122-8)**

வடதிசையில் தோன்றும் அருந்ததியை ஒக்கும் கற்பினை உடையவள் என்ற பாடலிலும்,

**அருந்ததி அனைய கற்பின். (ஐங். 442-4)**

அருந்ததியை ஒத்த கற்பினை உடையவள் என்ற பாடலிலும் காணமுடிகின்றது.

**கம்பராமாயணம்**

சீதை, எதிரிலே நின்ற கலங்குதலில்லாத கற்பு நிலையையுடைய அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்தாள் என்பதனை,

**எதிர்நின்று கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டார்.**

**(பால.கடிமணப். 1335)**

என்ற பாடலடி உணர்த்துகின்றது.

**சூளாமணி**

பரவுகின்ற ஒளியையுடைய அருந்ததியை, மயில் போன்ற சாயலையுடைய சுயம்பிரபைக்கு முன்னரே நன்கு சுட்டிக்காட்டினர். இதனை,

**வானநெறி யெங்கும் வளர் சோதி வடமீனைக்**

**கானமயி லன்னவடன் முன்னைநனி காட்ட.**

**(8: 1106)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**சீவகசிந்தாமணி**

விளங்கும் ஒளியையுடைய வானத்திலே தோன்றும் அருந்ததி மீனை இலக்கணைக்குக் காட்டினான் என்பதனை,

**விளங்கொளி விசும்பிற் பூத்த அருந்ததி காட்டி.**

**(2469)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

**சிலப்பதிகாரம்**

அருந்ததியை ‘சாலி ஒரு மீன்’ என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். இதனை,

**சாலி யொருமீன் தகையாளை. (1:1: 51)**

என்ற பாடலின் வழி உணரலாம். வானத்திலுள்ள ஒப்பற்ற நட்சத்திரமாகிய அருந்ததி போலும் கற்புடைய கண்ணகி என்று கண்ணகியின் கற்பிற்கு அருந்ததி உவமையாகின்றதனைக் காணமுடிகின்றது.

அருந்ததியின் கற்பு கண்ணகியின் கற்பிற்கு நிகராகும் என்று கூறுவதனை,

**தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்.** (1:1: 27)

என்ற பாடல் வரியில் காணமுடிகின்றது.

அருந்ததி என்னும் சொல்லிற்கு ஒரு நட்சத்திரம், வசிட்டன் மனைவி, கற்பில் சிறந்தவள் என்னும் பொருளை நா. கதிரைவேல் பிள்ளையின் தமிழ்மொழி அகராதி குறிப்பிடுகின்றது.

**பெருங்கதை**

**வாசவதத்தைக்கு அருந்ததி காட்டல்**

மணமக்கள் வடகிழக்குத் திசையில் அமைக்கப்பட்டிருந்த இடத்தில் முறைப்படி வந்த அமர்ந்தனர். உதயணன் வானத்தின் வடபகுதியில் ஒளிமிக்கு விளங்கிய சிறந்த மீனாகிய அருந்ததியினை வாசவதத்தைக்குக் காட்டி, அவளை தன் நெற்றியின் மேலாகக் கைகளைக் குவிக்கச்செய்து, நிலைப்பெற்ற இவ்வுலகிலே 'யான் நின்னைப் போன்று மாசறு கற்புடையேள் ஆகும்படி அருள்வாய்' என்று மூன்று முறை வணங்கும்படி செய்தான்.

இதனை,

**வெந்திறல் வேந்தன் பைந்தொடி யோடும்**
**உத்தர கோணத் தத்தக அமைத்த**
**ஏற்றுரி அதன் மிசை ஆற்றுளி இருந்து**
**படுசுடர் செக்கர்ப் பசலை தீர**
**விடுசுடர் மதியமொடு வெண்மீன் இவர்ந்த**
**வடபான் மருங்கிற் சுடர்மீக் கூரிய**
**கற்புடை விழுமீன் காணக் காட்டிப்**
**பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி**
**மன்னிய உலகினுள் நின்னியல் பாக**
**என்வயின் அருளென மும்முறை இறைஞ்சுவித்து.**

(2:3: 120-129)

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## சதுர்த்தி நோன்பிருத்தல்

புதுமணமக்களின் அவாவினை அடக்கி நான்கு நாட்கள் சதுர்த்தி நோன்பிருந்து பாதுகாவலுடன் உடல் முதலிய மூன்று கருவிகளும் மாறுபடாதபடி இருந்து செய்யவேண்டிய சடங்குகள் அனைத்தும் செய்து திருமணவிழாவானது முற்றுப்பெற்றது.

இதனை,

**எதிர்த்த விரதமொ டியல்பிற் பிழையாது**
**சதுர்த்தி இருந்து கதிர்த்த காப்பொடு**
**மெய்ம்முதல் திரியாது வேண்டுங் கிரிகையிற்**
**கைம்முதற் கேண்மை கழுமிக் கழிந்தபின்.** (2:3: 130-133)

என்பவற்றின் வழி அறியலாம்.

## பள்ளியறையின் மாண்பு

யானை மருப்பாற் செய்து பொன்னாலும் மணியாலும் அழகு செய்யப்பட்ட திண்ணிய கால்களை உடையதும், வெள்ளிய பூவேலையால் அழகு செய்யப்பட்ட பள்ளிக்கட்டிலின் மேல் சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், உறுதூவி என்ற ஐவகைப் படுக்கையினையும் அழகுற அடுக்கி வயிரம் முதலியவற்றை அழகுறப் பரப்பி அடிமுதல் முடிவரையில் மலர்மாலைகளால் அலங்கரித்து காமப்பண்பினைத் தூண்டுதற்குக் காரணமான ஒப்பனைகள் செய்த பள்ளிக்கட்டில் என்று பள்ளியறையின் மாண்பு கூறப்படுகிறது. இதனை,

**மருப்பினும் பொன்னினும் மணியினும் புனைந்த**
**திருத்தகு திண்கால் திருநிலை பெற்ற**
**வெண்பூம் பட்டின் திண்பிணி அமைந்த**
**பள்ளிக் கட்டில் வெள்ளிதின் விரிந்த**
**கோடுயர் பல்படை சேகுறச் சேர்த்தி**
**வயிரமும் வெள்ளியும் பவழமும் பொன்னும்**
**மணியு முத்தும் அணிபெறப் பரப்பி**
**அடிநிலை அமைத்து குடிநிலை கானும்**
**தாம நாற்றிக் காமங் குயின்ற**

**கோலச் செய்கை வாலணிப் பொலிந்த**
**எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய**
**மயிலியன் மாதர் இயல்பிற் படுத்த**
**கட்டின் மீமிசை.** (2:3: 134-146)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**மணமக்களைக் கட்டிலேற்றுதல்**

உதயணனுக்கு அன்போடு தகுந்தவற்றை அறிந்து, அரசருக்குச் செய்யும் முறைமையினையும் உணர்ந்து, வாசவதத்தையைக் காஞ்சனை என்பவள் அழைத்து வந்து அப்பள்ளிக் கட்டிலின் மேல் இருக்கச் செய்தாள். தலைமைத் தன்மையுடைய உதயணனை அழகுற அப்பள்ளிக் கட்டிலின்மேல் இருக்கச்செய்து அவ்வுதயணனுடைய கையைப் பற்றி வாசவதத்தையின் உச்சி முதல் அடி வரை தீண்டச் செய்தனர். இதுவும் ஒருவகைச் சடங்காகும். பின்னர்ப் பொன்தட்டில் வைத்து மங்கலச் சோற்றினை இருவர்க்கும் முறைப்படி ஊட்டினர். பின்னர், உதயணனையும் வாசவதத்தையையும் பள்ளிக்கட்டிலேற்றினர். இதனை,

**கட்டலர் கமழும்**
**ஒண்டார் மார்பின் உதயண குமரற்குத்**
**தண்டாக் காதலொடு தக்கவை அறிந்து**
**விண்ணவர் கிழவன் வீற்றிடங் கடுப்ப**
**மண்ணக மன்னர் மரபறிந் தியற்ற**
**அவ்வளைப் பணைத்தோள் அதிநா கரிகியைக்**
**கைவயிற் பிழையாது காஞ்சனை தழீஇ**
**உண்மை யுணரா நுண்மைப் போர்வையிவள்**
**பெண்மை காணிணோ பிழைப்பிலன் யானெனத்**
**தன்னொளி சமழ்த்திவள் பெண்ணொளி புகற்ற**
**மண்ணார் மணிப்பூண் மாதரை இரீஇயபின்**
**கண்ணார் குருசிலைக் கவின்பெற ஏற்றித்**
**தகைமலர்க் கோதை முடிமுதல் தீட்டிச்**
**செம்பொன் தால மலிரப் பெய்த**

**மங்கல அயினி மரபுளி உறீஇ**

**ஒல்லென் சும்மையொடு பல்வளந் தரூஉம்**

**உருமண் ணுவாவின் பெருநகர் மாந்தர்**

**ஆசில் செங்கோல் அவந்தியன் மடமகள்**

**வாசவ தத்தையொடு வத்தவர் இறைவனை**

**முட்டில் செல்வமொடு முறையிற் பிழையாது**

**கட்டிலேற் றினராற் கருதியது முடித்தென்.** (2:3: 146-167)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

## உதயணன் அருகில் வாசவதத்தையை இருத்துதல்

காமனுடைய அம்பு போன்ற குளிர்ந்த கண்களையும், நிறமிக்க மாலையினையும் உடைய வாசவதத்தையினைக் காஞ்சனை என்பவள் அழைத்துவந்து மலையுடன் மாறுபட்ட மார்பையுடைய உதயணகுமரனுடன் இருத்தினர். இதனை,

**நாணுக்கவின் கொண்ட நனிநா கரிகத்**

**தியாணர்ப் பூந்துகில் அணிந்த அல்குல்**

**இலைப்பூண் கவைஇ முலைப்புறம் புதைஇப்**

**பொற்கொடி இழையொடு நற்குடன் தாழ**

**ஏகவுத் தரியம் இடைச்சுவல் வருத்த**

**வட்டுடைப் பொலிந்த வண்ணக் கலாபமொடு**

**பட்டுச்சுமந் தசைந்த பரவை அல்குல்**

**இயைந்தணி பெற்ற ஏன்ற அவ்வயிற்**

**றசைந்தணி கொண்ட அம்மென் சாயல்**

**தாமரை எள்ளிய காமரு திருமுகத்**

**தின்பக் காமன் எய்கணை போலச்**

**செங்கடை போழ்ந்த சிதரரி மழைக்கண்**

**வண்ணக் கோதை வாசவ தத்தையைச்**

**செண்ணக் காஞ்சனை செவ்விதின் தழீஇ**

**இகல்வரை மார்பற் கியைய இரீஇயபின்.** (2:4: 117-131)

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

### மணமக்கள் பாற்சோறுண்ணல்

நல்ல முகூர்த்தத்திலே பொன்னால் இயற்றிய அழகிய உண்கலங்களில் இனிய பாற்சோற்றை மணமக்கள் உண்டனர். இதனை,

**ஒத்த ஓரை நோக்கி ஓங்கிய**

**கைத்தொழில் நுனித்த வித்தக வாளர்**

**பொன்புனை நன்கலத் தின்பதம் ஆர்ந்தபின்.** (2:4: 137-139)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### அந்தணர் வாழ்த்தி ஓதல்

பொற்பூவால் பிணைக்கப்பட்ட மல்லிகை மாலையினைச் செருகிய திருத்தமுடைய சிகையினையும், மணிக்குழையையுடைய காதினையும், நறுஞ்சாந்தினையும், ஆடையினையும் உடைய அந்தணர் பலர் மன்னன் மகனுக்குச் செய்யவேண்டியதை குறைவில்லாமல் வந்து செய்து, ‘தேவர்களும் முனிவர்களும் உங்களைப் பெரிதும் விரும்பி ஆயுளும் செல்வமும் நுகர்ச்சியும் பொலிவும் அருள்க’ என்று மணமக்களை வாழ்த்தி ஓத வேண்டுவனவற்றை அச்சடங்கு முறையினை உணர்ந்து ஓதினர். இதனை,

**மணியறைத்தன்ன மாண் இருங் குஞ்சி**

**அணிவலஞ் சுரிந்த அமைதிக் கேற்ப**

**வளர்பிறை அன்ன மல்லிகைக் கத்திகை**

**கிளர்பொன் போதொடு களையறப் பிணித்த**

**வாக்கமை சிகைமுதற் பாற்பட அடைச்சி**

**மகரங் கவ்விய மணிக்குழைக் காதினர்**

**தகரங் கலந்த தண்ணறுஞ் சாந்தினர்**

**பானிற வெண்டுகில் ஆனத் தானையர்**

**இறைமகற் கியன்ற குறைவில் செல்வமென**

**டந்தணர் ஈண்டி அடித்துகள் ஆற்றி**

**மந்திர விதியின் வாய்ப்பூச் சியற்றித்**

**தந்தொழின் முடித்துத் தலைவனைக் குறுகி**

**வெண்ணிற மலருந் தண்ணறுஞ் சாலியும்**

**புண்ணியப் புல்லும் பொன்னொடு முறைமையின்**

**மண்ணார் மணிப்பூண் மன்னனொடு மாதரைச்**

**சென்னியும் உச்சியும் சேடுபடத் தெளித்துக்**

**கூப்பிய கையர் காப்பொடு பொலிந்த**

**அமரரு முனிவரும் அமர்வன ராகி**

**மேயின தருகென மிகப்பல வாழ்த்தி**

**மறையிற் கிரிகையின் முறையறிந் தோழி.** (2:4: 140-160)

என்பதன் வழி அறியலாம்.

## உடன்மயிர் களைந்தது

திருமணம் முடிந்த ஆறாம் திங்கள் பந்தலிட்டு மணவறை அமைத்து அதில் மணமக்களை இருக்கச் செய்து, மகளிர் அவர்கட்கு உணவூட்டியபின், அந்தணர் வாழ்த்தி மறைஓத, நன்னல நாவிதன் மணமகன் முகத்தில் மயிர் களைந்தான் என்ற செய்தி, 'ஆறாம் திங்கள் உடல்மயிர் களைந்தது', 'மண்ணு நீராட்டியது' என்ற இரு காதைகளில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அச்சடங்கின் பொருள் பற்றிய விளக்கம் எதுவும் தென்படவில்லை.

நாவிதன் கத்தியினைக் கையில் எடுத்து அதனை பட்டும் பருத்தியும் கலந்து நெய்த துணியில் துருவையும் கிழிப்பினையும் போக்கி சாணைக் கல்லிலே தீட்டி தெளிவுடன் இருந்து மணமக்களுக்கு உடலின் மயிர் களைந்தனர். பின்னர் உறுப்புகளைத் திருத்தியும் அழகு செய்தலும் ஆகிய இருவகைத் தொழிலையும் அவன் செய்து முடித்தான். இது ஓர் சடங்காகும். இதனை,

**மின்வாள் அழித்த மேதகு கைவினைப்**

**பொன்வாள் பற்றிப் பன்மாண் பொலிகென**

**வலப்பாற் சென்னி வகைபெறத் தீட்டி**

**.....**

**பரப்பும் விதிர்ப்பும் பருப்பும் இன்றி**

**அணித்தலைச் சார்ங்கம் அணிபெற எழுதி**

**இருவகைக் கம்மம் உருவெளி திகழ**

**வல்லோர் முடித்த பின்றை. (2:4: 161-199)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

## உடன்மயிர்களையும் சடங்கு முற்றுபெறல்

'நீ நின் தேவியோடு இவ்வுலகத்தில் இன்பமும் செல்வமும் பெற்று மகிழ்ந்து தேவர்கள் பாதுகாத்து நிற்ப நீடூழி வாழ்க!' என மணமக்களை வாழ்த்தி உடன்மயிர் களையும் சடங்கானது முற்றுபெற்றது. இதனை,

**பல்லோர்**

**அருங்கல வெறுக்கை ஆர வீசி**

**விருப்புறு மனத்தவர் விண்ணவர் காப்ப**

**மன்னுக வேந்தே மண்மிசை நீடென**

**அன்னவை கலந்த ஆர்வ நாப்பண்**

**எண்ணுவரம் பறியா இன்பச் செல்வமொடு**

**மண்ணுவினை முடிந்தன்றான் மயிர்வினை மகிழ்ந்தென்.**

**(2:4: 199-205)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## மங்கலநீர் கொண்டு வருதல்

திருமணத்திற்கு முந்தியதாக மணமகள் நீராட்டு நடைபெற்றது. மங்கல நீரை முதுபெண்டிர் கொண்டு வந்ததாக அகநானூறு கூறுகிறது. பெருங்கதையில் மங்கல நீர் சுமந்து வந்தவர்கள் கன்னிப்பெண்கள் என்ற மாற்றத்தைக் காண்கிறோம். அகநானூற்றில்,

**உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்**

**பொது செய் கம்பலை முதுசெம் பெண்டிர்**

**முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர. (அக. 86: 8-10)**

என்னும் பாடலில், தலையில் நன்நீரக் குடத்தினைத் தாங்கியும், கையில் அகன்ற பாத்திரத்தை ஏந்திக் கொண்டும், திருமணத்தை செய்து வைக்கும், கலகலப்புடன் கூடிய முதிய மங்கல பெண்டிர் நீர்க்குடங்களை முன்னேயும்

பின்னேயும் முறைமுறையாகத் தந்திட மணமகளை நன் நீராட்டினர் என்ற செய்தியினைக் காணமுடிகின்றது. பெருங்கதையில்,

மங்கல நீர் கொண்டு வர ஐம்பெருங்குழு, எண்பேராயம், உறவினர், விருந்தினர் எனப்பலரும் சூழந்து சென்றனர். பேரழகு கொண்ட கன்னிமகளிர் ஆயிரத்தெட்டுத் தண்ணி பொற்குடங்களை ஒவ்வொருவரும் ஒருகுடம் என தனது தலையில் வைத்து யானையின் மீது அமர்ந்து சென்றனர். வாள், தோட்டி, குடை, பொற்குடம், ஆலவட்டம், சங்கு, கண்ணாடி, விளக்கு, சாமரை, பொன்மீன், பொற்றவிசு, பொன், முரசு, கொடி, சக்கரம், ஓமாலிகைத்திரள் ஆகிய பதினாறு மங்கலப் பொருள்களை மகளிர் முடிமேல் வைத்துச் சென்றனர். இதனை,

**இடுமணி யானை இரும்புறத் திருப்பப்**
**படுகண் முழவொடு பல்லியங் கறங்க**
**ஏம முரசம் இழுமெனச் சிலைப்பக்**
**காமர் சங்கம் வாய்வதின் முழங்க**
**வரித்த பூங்கொடி விரித்துவிசும் பிவரப்**
**பத்திரப் படாகை பலவயின் நுடங்கச்**
**சாதிங் குலிகமொடு சமரம் ஒழுகிய**
**மேதகு முளைக்காற் கோதை துயல்வரக்**
**குத்துமுளை செறித்த வித்தக விதானத்துத்**
**தண்ணெழில் நடுவண் நுண்எழில் நுனித்த**
**அயின்முனை வாளும் வயிரத் தோட்டியும்**
**கொற்றக் குடையும் பொற்பூங் குடமும்**
**வலம்புரி வட்டமும் இலங்கொளிச் சங்கும்**
**வெண்கண் ணாடியும் செஞ்சுடர் விளக்கும்**
**கவரியுங் கயலுந் தவிசுந் திருவும்**
**முரசும் படாகையும் அரசியல் ஆழியும்**
**ஒண்வினைப் பொலிந்த ஓமாலிகையுமென்(று)**
**எண்ணிரண் டாகிய பண்ணமை வனப்பிற்**
**கடிமாண் மங்கலங் கதிர்வளை மகளிர்**

**முடிமிசை ஏந்தி முன்னர் நடப்ப.** (2:5: 16-35)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

மங்கலநீர் கொண்டு வருகின்ற குளமானது சிறப்புடையது. சுற்றிலும் யானை மருப்பினால் ஆன தூண்களை நட்டு அவற்றின் குறுக்கே இரும்புச் சட்டங்களைப் பொருத்திப் பாதுகாக்கப்பட்டது. அதனுடைய நுழைவு வாயிலைக் காவலளர்கள் காத்து நின்றனர். அக்குளத்தின் நீரினை மாசுப்படுத்துவோர் கடுமையாக தண்டிக்கப்படுவர் என்ற வாசகம் அடங்கிய தூண்கள் காணப்படுகின்றன. பறவைகள் எச்சம் முதலியவற்றைக் கழித்து மாசுபடுத்தக் கூடும் என்பதால் அவற்றை குளத்தின் மேல் பறக்க விடாமல் பாதுகாத்தனர். அக்குடங்கள் நிறையும்படி முகந்து அதனை செந்தாமலை மலர்களாலே மூடி அதன் தண்டுகளாலே இறுகக்கட்டிப் பாதுகாத்து நீர்க்குடங்களை ஏந்தி சென்றனர். இச்செய்தியை,

**மருப்புநிலைக் கந்தின் இருப்பெழுப் போக்கி**
**வயவர் காக்கும் வாயிற் செல்வமொடு**
**கயவர் துன்னாக் கட்டிற் றாகிப்**
**படையமை இட்டிகைப் பாடமைப் படுகால்**
**இடமமைத் தியற்றிய ஏந்துநிலைக் கோணத்துக்**
**கழறுகால் அமைத்த கட்கின் வாவியுள்**
**நிழல்திகழ் தெண்ணீர் நீலஞ் சூழ**
**பறவைத் தொழுதிப் பக்கம் நீக்கி**
**நிறைய முகந்து முறைமையின் ஏந்தி**
**ஐஞ்நூற் றிரட்டி அணியிதழ்த் தாமரைச்**
**செந்நீர் போதொடு செறிய வீக்கிப்**
**பூஞ்சுமட் டிரீஇப் போற்றுவனர் தந்த**
**தேங்கமழ் நறுநீர் திறவதின் பற்றி.** (2:5: 38-50)

என்னும் பாடற்பகுதி வழி தெளியலாம். இவ்வாறு கொண்டு வந்த மங்கல நீரால் உதயணனும் வாசவதத்தையும் நீராட்டப்பட்டனர் என்ற செய்தியினைக் காணமுடிகின்றது.

### நெய்யேற்றுதல் சடங்கு

பொற்றொடி! நீ உன்னுடைய கணவனால் விரும்புவதற்குக் காரணமான குறிப்பினை உடையவளாய், மனைவிக்குரிய உரிமையில் மிகவும் உயர்ந்து நிகழ்ந்து கற்புடைமையாலே மேம்படுக! என்ற பல வாழ்த்துரைகளைக் கூறி நெய்யேற்றுதல் சடங்கினை நிகழ்த்தினர். இதனை,

**கொண்டோன் வேட்குங் குறிப்பினை யாகித்**
**தண்டாப் புலமொடு மகளிரைத் தழீஇத்**
**திருமனைக் கிழமையின் ஒருமீக் கூரிக்**
**கற்புமேம் படீஇயர் பொற்றொடி பொலிந்தென**
**நற்பல கிளவி பற்பல பயிற்றி**
**நெய்தலைப் பெய்த பின்றை. (2:5: 91-96)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

பலவகை மணப்பொருள்களால் உடல் உறுப்புகளில் பூசுவதற்கு தகுந்தாற் போல செய்து அமைத்தது 'ஒரு நாள் பூசியவிடத்தும் ஓரியாண்டு விடாது கமழ்வதும்' போன்ற மென்மை முதலிய பண்புகளை உடையதுமாகிய வாசவெண்ணெயை உடலில் பூசி, நூல்களை ஓதி உணர்ந்த நால்வகை சான்றோர், வாசவதத்தையின் உடலில் நீரை ஊற்றி முறைப்படி நீராட்டினர் என்ற செய்தியை,

**மெய்வயின்**
**மென்மையு நேயமு நன்மையு நாற்றமும்**
**ஒருநாட் பூசினும் ஓரியாண்டு விடாஅத்**
**திருமாண் உறுப்பிற்குச் சீர்நிறை அமைத்துக்**
**கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய**
**வாச வெண்ணெய் பூசினர் போற்றி**
**நூல்வழி நுனித்த நுழைநுண் ணுணர்வினர்**
**நால்வகைக் கோலத்து நால்வகை மாக்கள்**
**தாமரை மூய தமனியக் குடநீர்**
**தாமுறை சொரிந்துதம் முறைமையின் ஆட்டி. (2:5: 96-105)**

என்ற பாடலின் மூலம் காணமுடிகின்றது.

### மங்கல நீராடல் முற்றுப்பெறல்

மகளிர் வாசவதத்தையோடு மங்கல நீராடி விரும்பி ஆடினர், ஆடுவர் உதயணனோடு ஆடி மகிழ்ந்தனர். இவ்வாறு மங்கலநீராட்டு முறைப்படி நிகழ்ந்து முடிந்தது. இதனை,

**வேந்தன் மகளொடு விளையாட்டு விரும்பி**
**வண்ண மகளிரு மைந்தரு மயங்கி**
**மண்ணுநீ ராட்டின் மரபுளிக் கழிந்தபின். (2:5: 119-121)**

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

மேற்கூறப்பட்ட திருமணச் சடங்குகள் பிறபண்பாட்டுத் தாக்கத்தினால் நிகழ்ந்துள்ளது என்பதனை அறிய முடிகின்றது.

### உதயணகுமாரனை ஒப்பனை செய்தல்

மணிமுடி முதலாக பல வகை அணிகலன்களால் அணியப்பட்டு ஒப்பனை செய்யப்பட்ட உதயணன் பார்ப்பதற்கு முருகக்கடவுளைப் போன்று இருந்தான். இதனை,

**கனமணி முடியுங் கதிர்முத் தாரமும்**
**இனமணிப் பூணும் ஏக வட்டமும்**
**வயிரக் குழையும் வல்வினைப் பொலிந்த**
**நெடுந்தோள் வளையுங் கடுங்கதிர்க் கடகமும்**
**……**
**இளையவன் படிவம் ஏற்ப இயல்புறீஇச்**
**சித்திர இருநிதிச் செந்நெறி நுனித்த**
**வித்தக வினைஞர் தம்முடன் வந்து**
**வடிவு கண்டிடும் வத்தவர் பெருமகன்**
**ஒடிவில் வென்றி உதயண குமரன்**
**ஒருமெய் சேர்ந்திவை பெருமை பெறுகென**
**அருளின் அணியின் அல்லதை இவற்கிவை**
**உருவென அணியா உறுப்புமுதல் அணிதலிற்**
**புண்ணிய முடையவிப் பொன்னணி கலனென**

**எண்ணிய நெஞ்சமொடு நுண்வினைப் பொலிந்த**

**கோல வித்தகர் வாலணி புனைய. (2:5: 138-160)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### வாசவதத்தையை ஒப்பனை செய்தல்

வாசவதத்தையை மங்கல நீராட்டிய மகளிர் பின்னர், புத்தாடையினை உடுத்தி, அம்மகளிருள் நன்றாக மணக்கோலம் செய்யும் கைவன்மை உடையவளும் அத்துறையில் மேலும் கற்றவளும் வாசவதத்தையின் கூந்தலை ஈரம் புலர வாரி அவளை அலங்கரித்து அழகு செய்தனர். இதனை,

**ஈர நுண்டுகில் அகற்றி ஏருடைக்**

**கோடிப் பூந்துகில் கொய்து விளிம்புரீஇச்**

**…..**

**ஒழுக்குமுறை அறிந்து வழுக்கிலள் வைத்து**

**முடிக்கல முதலா முறைமுறை தோன்றும்**

**அடிக்கலம் ஈறா அணிந்தழகு பெறீஇ. (2:5: 164-180)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

### மணமக்கள் கூடியிருத்தல்

உதயணனும் வாசவத்தையுமாகிய மணமக்கள் இருவரும் உடலானும் உள்ளத்தாலும் ஒன்றுபட்டு மகிழ்ந்து விளையாடி இன்புற்றிருந்தனர். இதனை,

**மன்பெரும் போகத்து மகிழ்ந்துவிளை யாடி**

**இன்புற் றனரால் இருவரும் இயைந்தென். (2:5: 186-187)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### மன்னர் திருமணக்காலக் கடமை

சான்றோர் அனைவரும் கூடி திருவிழா எடுத்து, இறைவனை வழிபடுவதும் பின்னர் நகரத்தை வலம் வருவதும் மன்னரது திருமணக்காலத்தில் செய்யக்கூடிய கடமையாகும் என்று கூற, அது கேட்டு உதயணனும் அதற்கு உடன்படுகிறான். இதனை,

**பூம்புரி மாடத்துப் போற்றெனப் புகாஅத்**

**தேவ குலத்தொடு திருநகர் வலஞ்செயல்**

**காவல குமரர் கடிநாட் கடனென. (2:6: 4-6)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

## உதயணன் இறைவழிபாடு செய்தல்

வாசவதத்தை முதலிய சுற்றத்தாரோடு இறைவனை வணங்கி வாழ்த்துப்பாடல்களைப் பாடி, ‘இறைவனே! எளியேன் பிறவிப் பெருங்கடனீந்தி முத்திநிலையை எய்துவேனாகத் திருவருள்புரிக் என்று வேண்டி, கைகுவித்து வணங்கி பூப்பலி முதலிய பலிகளைக் கொடுத்துத் தெய்வக்கடனைக் கழித்தான். இதனை,

**உரிமைச் சுற்றமொ டொருங்குடன் துன்றிக்**
**கதிவிளக் குறூஉங் கருத்தினன் போல**
**விதியிற் சேர்ந்து துதியிற் றுதித்துப்**
**பெறற்கரும் பேதையைப் பெறுகெனப் பரவிச்**
**சிறப்பெதிர் கொள்கைச் சித்திக் கிழவன்**
**பேரறம் பேணிய சீர்நெறிச் சிறப்பின்**
**தெய்வதை அமர்ந்தெனக் கைம்முதல் கூப்பி**
**விரவுமலர்ப் போதொடு வேண்டுவ வீசிப்**
**பரவுக்கடன் கழித்தனன் பைந்தா ரோனென். (2:6: 162-170)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

## வாசவதத்தையின் புதுமணக்கோலம்

வாசவதத்தை புத்தாடைகளை உடுத்தி, மங்கலகரமாக வெண்சாந்தும், வெண்மலர் மாலைகளும் அணிந்து பூங்கொடியை ஒத்த புதுமணக் கோலம் கொண்ட வாசவதத்தையை,

**பானீர் நெடுங்கடற் பனிநாள் எழுந்த**
**மேனீர் ஆவியின் மெல்லி தாகிய**
**கழுமடிக் கலிங்கம் வழுவில வாங்கி**
**ஒண்மணிக் காசிற் பன்மணிப் பாவை**
**கண்ணிய காதல் உண்ணெகிழ்ந்து விரும்பி**
**ஆடற் கவாவும் அமிழ்தஞ் சேரா**

**ஊடுபோழ்ந் துறழ ஒலிபெற உடீஇ**

**மாலையுஞ் சாந்து மங்கல மரபின்**

**நூவிற் றிரியாது நுண்எழில் புரியப்**

**புதுவது புனைந்த பூங்கொடி புரையும்**

**வதுவைக் கோலத்து வாசவ தத்தை.** (2:7: 154-164)

என்ற வரிகளின் மூலமாக வாசவதத்தையின் புதுமணக்கோலத்தினை அறியலாம். வாசவதத்தையும் உதயணகுமாரனும் சயந்திநகரத்தில் திருமணம் செய்து இன்பமாக வாழ்ந்தனர்.

### உதயணன் - பதுமாபதி மணம் (இரண்டாம் திருமணம்)

காமன் கோட்டத்தில் பதுமாபதியைக் கண்ட உதயணன் அவள்மீது காதல் கொள்கிறான். இருவரும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்கின்றனர். பதுமாபதி காமன் கோயிலை வலம் வந்து பின் தானம் வழங்குகிறாள். உதயணன் தன்னை ‘மாணகன்’ என்னும் பெயருடன் தன்னை பார்ப்பனன் என்றும் பொய்யாக அறிமுகப்படுத்திக்கொண்டான். உதயணன் அவளை எண்ணி காதல் துன்பத்தினால் வருந்துகிறான். அதனைப் போன்று பதுமாபதியும் அவனை எண்ணி வருந்துகிறாள். உதயணனை பதுமாபதி அவள் இடத்திற்கு அழைத்துச் செல்கிறாள். அங்கு இருவரும் விருப்பம் கொண்டு களவுப் புணர்ச்சியில் ஈடுபடுகின்றனர்.

### களவுமணப் புணர்ச்சி

பெரும் புகழினையுடைய உதயண மன்னனும். சிறந்த பெண்மை நலமுடைய பதுமாபதியும் களவுப் புணர்ச்சியில் ஈடுபட்டு பிறர் தங்களை அறியாதபடி மறைந்து இருந்தனர். இதனை,

**பேரிமை யண்ணலும் பெருநல மாதரும்**

**ஆரிருள் போர்வை யாக யாவரும்**

**அறிதற் கரிய மறையரும் புணர்ச்சியொடு**

**கரப்பறை யமைத்துக் கைபுனைந் தோர்க்கும்**

**உரைக்க லாகா வுறுபொறிக் கூட்டத்துப்**

**புதவணி கதவிற் பொன்னிரை மாலை**

**மதலை மாடத்து மறைந்தொடுங் கினரென்.** (3:13: 91-97)

என்ற வரிகளின் மூலம் அவர்களது களவு மணத்தினை அறியலாம்.

பதுமாபதி தன் தோழி யாப்பியாயினியோடு சேர்ந்து உதயணனை நன்கு பார்த்துக்கொண்டாள். பதுமாபதியும் உதயணனும் களவொழுக்கத்தில் ஈடுபட்டு நாட்களைக் கழித்தனர். இதனை பதுமாபதி தன்தாய் முதலானோர்க்குத் தெரியாமல் பார்த்துக்கொண்டாள். இதனை,

**ஒள்ளிழை தோழியொ டுதயணற் பேணிக்**

**கழிபெருங் காமங் களவினிற் கழிப்பி**

**ஒழுகுவனண் மாதோ வுரிமையின் மறைந்தென். (3:14: 294-296)**

என்பவற்றின் மூலம் களவுப்புணர்ச்சி வெளிப்படுகின்றது.

அப்பதுமாபதியோடு வத்தவ நாட்டு மன்னனாகிய உதயணன் ஒரு திங்கள் இன்புற்று வாழ்ந்தான் என்பதனை,

**வைக றோறு மெய்வகை தெரிவார்**

**செய்வளைத் தோளியைச் சேர்ந்துநல னுகர்வதோர்**

**தெய்வங் கொல்லெனத் தெளித லாற்றார்**

**உருவினு முணர்வினு மொப்போ ரில்லென**

**வரிவளைத் தோளியொடு வத்தவர் பெருமகன்**

**ஒழுகினன் மாதோ வொருமதி யளவென். (3:15: 69-74)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

### உதயணன் பதுமாபதியை பலரறி மணம் செய்ய எண்ணுதல்

பொன்னால் ஆன வளையல்களையும், பருத்த தோள்களையும் அணிகலன்களையும் உடைய அப்பதுமாபதியை, இனி இல்லறத்திற்குரிய கற்பொழுக்கத்தின் வழி பலரறிமணம் செய்வதற்கான வழியை எண்ணிக் கொண்டிருந்தான் உதயணன். இதனை,

**பொற்றொடிப் பணைத்தோண் முற்றிழை மாதரை**

**இற்பெருங் கிழமையொடு கற்புக்கடம் பூட்ட**

**வரையும் வாயி றெரியுஞ் சூழ்ச்சியுள். (3:21: 6-8)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### தருசகன் பதுமாபதிக்கு திருமணம் செய்ய எண்ணுதல்

சிவந்த கடையினையுடைய வேல் போன்ற கண்களையும் வளையல்களையும் பருத்த தோள்களையும் உடைய தன் தங்கை பதுமாபதிக்கு உதயணனைத் திருமணம் செய்து வைக்க தருசகன் எண்ணினான். இதனை,

**செங்கடை வேற்கண் வெள்வளைப் பணைத்தோட்**

**டங்கையைப் புணர்க்குஞ் சிந்தைய னாகி.** (3:21: 18-19)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

இச்செய்தியை அறிந்த பதுமாபதி மாணாக்கனை எண்ணி வருந்துதலும், பின் தன் தோழி யாப்பியாயினி மூலம் மாணாக்கனும் உதயணனும் வேறு வேறானவர் அல்லர் ஒருவரே என்று உணர்ந்து திருமணத்திற்கு பதுமாபதி உடன்படுவதனையும் காணமுடிகின்றது.

### தருசகன் தாயார் உடன்படல்

தருசக மன்னனுடைய தாயார் இச்செய்தியை சான்றோர் மூலம் கேட்டறிந்து தேன் போன்ற இனியமொழிகளையும், குழையினையும் உடைய பதுமாபதியைக் காமவேளை ஒத்த வளைந்த வில்லையுடைய வத்தவ மன்னனுக்குத் திருமணம் செய்ய நினைத்தனைக் கேட்டு அவள் பெரிதும் மகிழச்சியுற்றாள். இதனை,

**பெருமூ தாளரை விடுத்தலிற் கேட்டே**

**திருமா தேவியுந் தேன்புரை தீஞ்சோற்**

**கணங்குழை மகளைக் காம னனைய**

**வணங்குசிலைத் தடக்கை வத்தவர் பெருமகற்**

**கெண்ணின னெனவே யுண்மலி யுவகையள்**

**அதிநா கரிகத் தந்தணிக் கணியும்**

**முற்றணி கலங்கள் கொற்றவி கொடுப்ப.** (3:22: 49-55)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### திருமணத்திற்கு ஏற்பாடு செய்தல்

நல்ல நாளில் திருமணத்தினை நடத்துதல் நல்லதாக இருக்கும் என்று எண்ணிய தருசக மன்னன். பெருங்கணியாகிய கணிவன் ஆராய்ந்து கூறிய

நன்னாளிலே திருமணத்திற்காக நகரம் முழுதும் அழகாக அலங்கரித்தது காண்போருக்கு வியப்பினை உண்டாக்கியது. இதனை,

**நன்னாட் டலைப்பெய னன்றென வெண்ணிக்**
**கோட்டமி லுணர்விற் கொற்றவன் குன்றாச்**
**சேனைப் பெருங்கணி செப்பிய நன்னாட்**
**டானைத் தலைத்தாட் டானறி வுறுத்தலின்**
**வையக விழவிற் றானுஞ் செய்கையின்**
**அழுங்க னன்கை ராவணந் தோறும்**
**செழும்பல் யாணர்ச் சிறப்பின் வழாஅது**
**வண்ணப் பல்கொடி வயின்வயி னெடுத்தலின்**
**விண்வேய்ந் தன்ன வியப்பிற் றாகி. (3:22: 183-191)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## திருமணச்சடங்கு

பெரிய மதில்களால் அழகு கொண்ட இராசகிரிய நகரத்தில் வாழ்கின்ற கற்றுக் கேட்டு ஆராய்ந்து உணர்ந்த ஆடவரும் பெண்களும் பெருமகிழ்ச்சியோடு சேதி நாட்டரசனாகிய உதயணகுமரனையும் தேன்மணம் கமழும் கூந்தலை உடைய பதுமாபதியையும் தன் முன்னோரது மரபிற்கு ஏற்றவாறு 'திருமுழுக்குச் சடங்கு' செய்து பிறதீமைகள் அண்டாதவாறு நறுநெய்யைப் பதுமாபதியின் தலையில் தேய்த்து உயர்ந்த நுதலையுடைய பெரிய யானையின் மீது ஏற்றி சென்று அவளை தூயநீரால் திருமுழுக்குச் செய்து பின் அழைத்து வந்து ஒப்பனை செய்யும் இடத்தில் அமரவைத்தனர். இதனை,

**பெருமதி லணிந்த திருநகர் வரைப்பின்**
**ஆய்ந்த கேள்வி மாந்தரு மகளிரும்**
**ஆரா வுவகைய ராகிய காலைச்**
**சேரார்க் கடந்த சேதியர் மகனையும்**
**மதுநா றைம்பாற் பதுமா பதியையும்**
**மரபிற் கொத்த மண்ணுவினை கழிப்பிய**
**திருவிற் கொத்துத் தீதுபிற தீண்டா**

**நெய்தலைப் பெய்து மையணி யுயர்நுதல்**

**இருங்களிற் றியானை யெருத்திற் றந்த**

**பெருந்த ணறுநீர் விரும்புவன ராட்டிப்**

**பவழக் கொட்டைப் பொற்செருப் பேற்றித்**

**திகழ்செய் கோலத் திருமணை யிரீஇ.** (3:22: 192-203)

என்னும் பாடற்பகுதி வழி அறியமுடிகின்றது.

## பதுமாபதியை அலங்கரித்தல்

சிவந்த கயல்மீன் போன்ற கண்களையுடைய பதுமாபதியை அவளுடைய தமக்கைமார்கள் அணிகலன்களை அணியச்செய்து அலங்கரித்தனர். கூந்தலில் பத்துவகையான நறிய நீரை தெளித்து நறுமணப் புகையை புகைத்து வாரிமுடித்து நறிய முல்லை மாலையால் தொடுக்கப்பட்ட கொண்டைமாலையை அணிவித்தனர். மேலும் அணிகலன்கள் அவளது மெல்லுடல் தாங்குகிறதா என்று ஆராய்ந்து அணிவித்தனர். பச்சை, சிவப்பு, நீலம், கருப்பு, பொன்னிறம் ஆகிய ஐந்து வண்ணங்களையுடைய அழகிய மேகலையை அணிவித்து புதிய ஆடையை உடுத்தி, மைதீட்டிய கண்ணை உடைய அப்பதுமாபதியின் இடை வருந்தும்படி முத்துமாலைகளையும் மலர்மாலைகளையும் அவளின் தோள்களில் அணிவித்தனர். மேலும், பொன் வளையல் முதலாக கடகம் ஈறாக உள்ள அணிகலன்களையும், சூடகம் என்னும் வளையலோடு அணியும் பவள வளையலையும் அணிந்து, பாடகம், நூபுரம் என்னும் காலணிகளை அணியசெய்தனர். இவ்வாறு அவளை அழகுற ஒப்பனை செய்து அலங்கரித்தனர். இதனை,

**செங்கயற் கண்ணியை நங்கை தவ்வையர்**

**கோல மீத்தக வாலணி கொளீஇத்**

**……**

**சூடகத் தேற்ற சுடரொளிப் பவளமொடு**

**பாடக நூபுரம் பரட்டுமிசை யரற்ற**

**ஆடமைத் தோனியை யணிந்துமுறை பிறழாது**

**வதுவைக் கேற்ற மங்கலப் பேரணி**

**அதிநா கரிகியை யணிந்தன ரமைய.** (3:22: 204-238)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**உதயணனை அலங்கரித்தல்**

உதயணனை அவனுடைய தோழர்கள் ஒப்பனை செய்தனர். அழகின் மேல் அழகு செய்து அவனைக் கண்டவர்கள் ‘காமவேளே இவன்’ என்று துணியும்படி காட்சியளித்தான். இதனை,

**ஓங்கிய பெரும்புக ழுதயண குமரனைத்**
**தாங்கருந் தோழர் தாம்புனைந் தணியக்**
**கடிநாட் கோலத்துக் காம னிவனென**
**நெடுநகர் மாந்தர் நெஞ்சந் தெளியக்**
**காட்சிக் கமைந்த மாட்சி யெய்த. (3:22: 239-243)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

**உதயணன் மணமண்டபம் புகுதல்**

கணிமகன் கணித்து தந்த நாளில் தருசகன் வந்து வேள்விச் சாலையில் முறைப்படி தீமுட்டுவித்து ‘இனி வத்தவ மன்னனாகிய உதயணகுமரன் இத்திருமண மண்டபத்தில் எழுந்தருளுக!’ என்று கூறியவுடன் வேறுசில அரசிளங்குமரர்களோடு உதயணன் திருமண மண்டபத்திற்குள் புகுந்தான். இதனை,

**வெற்ற வேந்தன் கொற்றப் பெருங்கணி**
**கூறிய முழுத்தங் குன்றுத லின்றி**
**……….**
**தீவேள் சாலை திறத்துளி மூட்டிப்**
**புகுதுக வத்தவ னென்றலிற் பூந்தார்**
**அரசிளங் குமரரொ டண்ணல் புகுதர. (3:22: 244-257)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

**பதுமாபதி வருகை**

ஒளியுடைய திங்கள் போன்ற முகத்தை உடைய பதுமாபதியை பாதுகாத்து பண்பில் தோழியரை ஒத்தவரும் ஆகிய ஆயிரத்தெட்டுக் காவள்மகளிரும், பசிய அணிகலன்களை அணிந்திருந்த அவளது பிற தோழிகளும் பதுமாபதியினை

மணப்பந்தலுக்கு அழைத்து வந்து உதயணனுக்கு பக்கத்தில் அமர வைத்தனர். இதனை,

**கதிர்மதி முகத்தியைக் காவல் கண்ணி**
**ஆயிரத் தெண்மர் பாங்கிய ரன்னோர்**
**பாசிழைத் தோழியர் பாடகஞ் சுடரத்**
**தண்பெரும் பந்தருட் கண்பிணி கொள்ள**
**உயர்வினு மொழுக்கினு மொத்தவழி வந்த**
**மங்கல மன்னற்கு மந்திர விழுநெறி**
**ஆசான் முன்னின் றமையக் கூட்டித்**
**தீமாண் புற்ற திருத்தகு பொழுதில்.** (3:22: 258-265)

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

## உதயணன் பதுமாபதியை மணம்புரிந்து கொள்ளல்

உதயணன் பதுமாபதியை அத்திருமண வேள்வி முன்னர் அமர வைத்து அவ்வேள்வியில் செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாம் முறைப்படி செய்து, செம்பொன்னால் செய்யப்பட்ட பட்டத்தினை அப்பதுமாபதியினது முகமானது மேலும் அழகுறும்படி சூட்டி, ஏனைய பல சடங்குகளையும் செய்து முடித்தனர். இத்திருமணமானது இனிதே முடிந்தது.

அன்பால் தலைவன் தலைவி இருவரும் ஒன்றுபட்டு இன்ப வாழ்க்கையைத் தொடர காவிதிபட்டம் பெற்ற மகளிர் கட்டிலின் மீது மலர்மாலைகளைப் பரப்பினர். அக்கட்டிலில் பட்டம் கட்டப்பெற்ற சிறிய நுதலை உடைய பதுமாபதியோடு கருதிவந்த காரியத்தை முடித்தவனாய் உதயணன் வீற்றிருந்தான். இதனை,

**ஏதமில் காட்சி யேயர் பெருமகன்**
**நன்னுதன் மாதரை நாட்கடிச் செந்தீ**
**முன்முத லிரீஇ முறைமையிற் றிரியா**
**விழுத்தகு வேள்வி யொழுக்கிய லோம்பிச்**
**செம்பொற் பட்டம் பைந்தொடிப் பாவை**
**மதிமுகஞ் சுடர மன்னவன் சூட்டித்**
**……**

**பட்டச் சின்னுதற் பதுமா பதியொடு**

**கட்டிலே றினனாற் கருதியது முடித்தென். (3:22: 271-285)**

என்ற வரிகளின் மூலம் பதுமாபதி உதயணனின் திருமணத்தினைக் காணமுடிகின்றது.

## உதயணன் - மானனீகை திருமணம் (மூன்றாம் திருமணம்)

உதயணன் மானனீகையை பந்தாட்டத்தின் போது கண்டு அவள்மீது காதல் கொள்கிறான். பின்னர் அவளை வாசவதத்தைக்கு ஒப்பனை செய்யும் வண்ணமகளாய் இருக்கச் செய்கிறான். தன் மனைவி வாசவதத்தையின் நெற்றியில் மானனீகைக்கு யவனமொழியில் காதல் தூது விடுக்கிறான். முதலில் அவனது காதலை ஏற்கமறுத்த மானனீகை அவனது வற்புறுத்துதலால் ஏற்றுக்கொள்கிறாள்.

## உதயணன் மானனீகை களவுப்புணர்ச்சி

திருமகள் விரும்பம் கொண்டு வீற்றிருப்பதற்கு தகுந்த மார்பினையுடைய உதயணமன்னனும் மானனீகையும் ஒருவதை ஒருவர் சந்தித்து ஊடியும் கூடியும் நீண்ட பொழுது விளையாடியும் களவுப்புணர்ச்சி கொண்டனர். இதனை,

**திருத்தகு மார்பன் கருத்தொடு புகுந்து**

**விருப்பொடு தழுவி நடுக்கந் தீரக்**

**கூடிய வேட்கையி னொருவர்க் கொருவர்**

**ஊடியுங் கூடியு நீடுவிளை யாடியும். (4:13: 172-175)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம். உதயணன் மானனீகையோடு களவுப்புணர்ச்சி கொண்டான் என்ற செய்தியைக் காஞ்சனமாலை என்ற தோழியின் மூலம் ஒற்றறிந்து கொண்ட வாசவதத்தை அவளை தண்டிக்க எண்ணுகையில் கோசல மன்னனின் கடிதத்தினைக் கண்டு மானனீகை தன் தங்கை முறையள் என்பதை அறிந்து வாசவதத்தை செய்த தவறுக்கு அவளிடம் வருந்தினாள். பின்னர் உதயணனுக்கே அவளை மணம் முடிக்க எண்ணினாள் என்பதனையும் காணமுடிகின்றது.

## மானனீகையை வாசவதத்தை அலங்கரித்தல்

வாசவதத்தை மானனீகையின் கூந்தலில் நறிய நெய்யினையும், எண்ணெயினையும் தடவி, நறிய நீரால் அவளை நீராட்டிப் பின்னர், ஆடையை

உடுத்தி அலங்காரம் செய்து பதுமாபதியும் தானும் மானனீகையும் ஒரே பொற்கலத்தில் உணவு உண்டனர். இச்செய்தியினை,

**தழீஇக் கொண்டு தானெதி ரிருந்து**
**தண்ணென் கூந்த றன்கையி னாற்றிப்**
**பண்ணிய நறுநெயு மெண்ணெயும் பெய்து**
**நறுநீராட்டிச் செறி துகி லுடீஇப்**
**பதுமையுந் தானு மினியன கூறிப்**
**பொருவில் பக்கத்துப் பொற்கல மேற்றி**
**வருகென மூவரு மொருகலத் தயில. (4:14: 157-163)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## உதயணன் மானனீகையை மணம் செய்து கொள்ளல்

புதிய மணப்பெண்ணாகிய மானனீகைக்குத் திருமணக்கோலம் செய்து விடுக என்று வாசவதத்தை பதுமாபதிக்குக் கூறிய பின்னர், அவ்விடத்தில் நின்ற பணிப்பெண்ணிடம் நம் வேந்தரிடம் மானனீகையைத் திருமணம் புரிதல் வேண்டும் என்னும் இச்செய்தியை அறிவித்து வா என்று கூறினாள். அச்செய்தியைக் கேட்டதும் உதயணன் மகிழ்ந்து தன் சுற்றத்தார் பலரது முன்னிலையில் பெருந்தேவியாகிய வாசவதத்தையும் பதுமாபதியும் விரும்பி மானனீகையை மணம் செய்விக்க, அந்தணர்கள் மணச்சடங்குகளை கூறி நிற்க, உதயணன் மானனீகையோடு தீவலம் வந்து அவளை மணம் செய்து கொள்கிறான். இதனை,

**அதுநிகழ் வேலையிற் புதுமண மாதரை**
**வதுவைக் கோலம் பதுமை புனைகென்**
**றங்கொரு சிலதியைச் செங்கோல் வேந்தன்**
**தன்பான் மணநிலை சாற்றென் றுரைப்பப்**
**பிணைமலர்த் தொடையற் பெருமக னவ்வயிற்**
**பணைநிலைப் பிடிமிசைப் பலர்வரச் சாற்றி**
**விரைபரித் தேரொடு படைமிடைந் தார்ப்ப**
**முரசுமுழங்கு முற்றத் தரசுவந் திறைகொளக்**
**கோலத் தேவியர் மேவினர் கொடுப்ப**

**ஓவிய ருட்கு முருவியை யுதயணன்**

**நான்மறை யாளர் நன்மணங் காட்டத்**

**தீவலஞ் செய்து கூடிய பின்றை.** (4:14: 170-181)

என்ற வரிகளின் மூலமாக இதனை அறியலாம்.

## உதயணன் - விரிசிகை திருமணம் (நான்காம் மணம்)

விரிசிகை என்பவள் காட்டில் வளர்ந்த ஒரு கன்னியாவாள். இவள் இளமைப் பருவத்தில் உதயணனால் மாலைச்சூட்டப் பெற்றவள். அவன்சூடிய மாலையை அன்றி வேறொன்றையும் அணியாதவளாகி அவனையே எண்ணி வாழ்ந்தாள். பருவமுதிர்ச்சியடைகிறாள். இதனை அறிந்த அவளது தந்தை உதயணனைக் கண்டு நடந்தவற்றைக் கூறினார்.

## விரிசிகையை மணம் செய்துகொள்ளும்படி அவள் தந்தை கூறல்

முன்னொரு நாளில் நீ அவளுக்கு சூட்டிய மாலையினை எண்ணி உன்னையே எண்ணி வாழ்ந்து வருகிறாள். அதனால் அவள் உன்னுடைய பத்தினியே ஆவாள். அவளை உனக்கு மணம் முடித்துக் கொடுக்க விரும்புகிறேன். அவளை வாழ்க்கைத் துணையாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அத்துறவோன் கூறுகிறார். இதனை,

**வண்டார் தெரியல் வாண்முகஞ் சுடரப்**

**பண்டே யணிந்தநின் பத்தினி யாதலிற்**

**பயந்தனர் கொடுப்ப வியைந்தன ராகுதல்**

**முறையே யென்ப விறைவ வதனால்**

**யானே முன்னின் றடுப்ப நீயென்**

**தேனேர் கிளவியைத் திருநா ளமைத்துச்**

**செந்தீக் கடவுண் முந்தை யிரீஇ**

**எய்துத னன்றெனச் செய்தவ னுரைப்ப.** (4:15: 73-80)

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## விரிசிகையின் வதுவையை வாசவதத்தைக்குக் கூறல்

உதயணன் அத்துறவோன் கூறிய திருமணச்செய்தியை வாசவதத்தைக்கு கூறினான். இதனை,

**மாதவ னுரைத்த வதுவை மாற்றம்**

**காவற் றேவிக்குக் காவல னுணர்த்த. (4:15: 81-82)**

என்னும் பாடற்பகுதி வழி இச்செய்தியை அறியலாம்.

### வாசவதத்தை உடன்படல்

வாசவதத்தை முன்னாளிலே அவன் அவளுக்கு மலர்சூட்டுவதனைக் கண்டமையால், 'பெருமானே! இக்காரியம் மிகவும் நன்றேயாம்!' என்று கூறி உடன்படுகிறாள்.

இதனை,

**மணிப்பூண் வனமுலை வாசவ தத்தை**

**பணித்தற் கூடாள் பண்டே யறிதலின்**

**உவந்த நெஞ்சமொடு நயந்திது நன்றெனை. (4:15: 83-85)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

### மணச்செய்தியை அறிவித்தல்

விரிசிகையை 'பலரறி மணம்' செய்யும் செய்தியை தன்னாட்டு மக்களுக்கும், பிற நகர மக்களுக்கும் அறிவிக்கும்படி கூறினான். நன்னாளில் முரசறிந்து கூறி, நகரம் முழுவதும் தேவர்கள் கூடிவாழும் பூமிபோலப் பொலிவுறும்படி ஒப்பனை செய்வித்தான். இதனை,

**நாடு நகரமு மறிய நாட்கொண்டு**

**பாடிமிழ் முரசம் பல்லூ ழறைய**

**மாக விசும்பின் வானோர் தொக்க**

**போக பூமியிற் பொன்னகர் பொலிய. (4:15: 94-97)**

என்ற வரிகளின் மூலம் இதனை அறியலாம்.

### விரிசிகையைப் புனைதல்

வெட்டிவேரும், தகரமும், சந்தனம், அகில், கருப்பூரம், கந்தூரி, குங்குமம் என்னும் இவற்றை சேர்த்து அவள் கூந்தலில் தேய்த்து மெல்ல வாரி அழகுற முடித்தனர். நறுமணப் புகையை கூந்தலில் காட்டி அழகுற முடித்தனர். முன்பு உதயணனால் சூட்டப்பெற்ற மலரானது வாடியிருந்ததால் அதில் புதிய மலரினை சேர்த்து அணிவித்தனர். 'சிறுநெற்றாலி' என்னும் அணிகலனை அழகுற அவளுக்கு

அணிவித்தனர். அவளது காவி உடையினை அகற்றிவிட்டு புதிய பட்டாடையை அழகாக உடுத்தினர். இதனை,

**வேரியுந் தகரமும் விரையு முரிஞ்சி**
**ஆர்கலி நறுநீர் மேவர வாட்டித்**
**துய்யறத் திரண்டு தூறலு மிலவாய்**
**நெய்தோய்த் தன்ன நிறத்த வாகிக்**
**………**
**கோடி நுண்டுகில் கோல மாக**
**அவ்வரி யரவின் பையெனப் பரந்த**
**செல்வ வல்குற் றீட்டிவைத் ததுபோல்**
**வல்லிதின் வகைபெற வுடீஇ.** (4:16: 6-38)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

## விரிசிகை அரண்மனையை அடைதல்

மலர்களை மிதித்தால் கூட வருந்தி மிகவும் சிவக்கின்ற அழகு விளங்குகின்றவள் விரிசிகை. நன்னாளில் அங்கு வழியில் பரவிகிடந்த மலர்களுள் சில மலர்களை மிதித்ததால் அவளின் அடிகள் சிவந்து வருந்தும்படி மெல்ல மெல்ல நடந்து வீதியில் வருகிறாள். மங்கல முரசும், பல்வேறு இசைக்கருவிகளும் இசைக்க, அரசர்க்குரிய மங்கலப் பொருள்கள் (கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல்) பலவற்றையும் பணிமகளிர் ஏந்தி வர, அவ்விரிசிகை அரண்மனையில் புகுகின்றாள். இதனை,

**கொடிபட நுடங்குக் கடிநகர் வாயில்**
**முரசொடு சிறந்த பல்லியங் கறங்க**
**அரச மங்கல மமைவர வேந்திப்**
**பல்பூம் படாகை பரந்த நீழல்**
**நல்லோர் தூஉ நறுநீர் நனைப்பச்**
**சேனையு நகரமுஞ் சென்றுட னெதிர்கொள**
**ஆனாச் சிறப்போ டகன்மனை புகுதலின்.** (4:17: 100-106)

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

**உதயணன் விரிசிகையை மணந்து கொள்ளல்**

உதயணின் மூன்று தேவிமார்களாகிய வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை ஆகியோர் மணவேள்வியின் முன்னின்று மரபறிந்து செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாம் செய்தனர். அவ்விரிசிகைக்குத் திருமண நாளில் நல்ல அணிகலன்களை எல்லாம் பொருத்தமுற அணிவித்தனர். அவளுடைய தாயும், தந்தையும் போலத் தேவியர்கள் மூவரும் அவள் கையினைப் பிடித்து உதயணன் கையில் கொடுத்தனர். வேள்வித் தீயின் முன்னர் அவர்களுக்கு மணம் செய்து வைத்தனர். இதனை,

**தானை வேந்தன் றானெறி திரியான்**
**பூவிரி கூந்தற் பொங்கிள வனமுலைத்**
**தேவியர் மூவருந் தீமுன் னின்றவட்**
**குரிய வாற்றி மரபறிந் தோம்பி**
**அருவிலை நன்கல மமைவர வேற்றிக்**
**குரவர் போலக் கூட்டுபு கொடுப்பக்**
**கூட்டமை தீமுதற் குறையா நெறிமையின்**
**வேட்டவட் புணர்ந்து.** (4:17: 107-114)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**நால்வருடன் உதயணன் இன்புற்று வாழ்தல்**

இரவும், பகலும் எப்பொழுதும் அன்பால் உள்ளம் மகிழ்ந்து அத்தேவியோடு கூடி இனிய இன்பம் அடைந்து ஊடலும் கூடலும் கொண்டு தனது வாழ்க்கைத் துணைவியர்களாகிய வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை, விரிசிகை நால்வருடன் இன்பத்தோடு வாழ்ந்தான். இதனை,

**வியனுல கேத்த**
**அன்பு நெகிழ்ந் தணைஇ யின்சுவை யமிழ்தம்**
**பனியிருங் கங்குலும் பகலு மெல்லாம்**
**முனிவில னுகர்ந்து முறைமுறை பிழையாது**
**துனியும் புலவியு மூடலுந் தோற்றிக்**
**கனிபடு காமங் கலந்த களிப்பொடு**

**நற்றுணை மகளிர் நால்வரும் வழிபட**

**இழுமென் செல்வமொ டின்னுயி ரோம்பி**

**ஒழுகுவனன் மாதோ வுதயண னினிதென். (4:17: 114-122)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**இசைச்சன் - யாப்பியாயினி மணம்**

உதயணன் தன் தோழன் இசைச்சனுக்கு தாயும் தந்தையும் இல்லாமையால் அவனுக்கு மணம் முடித்த பின்னரே தான் பதுமாபதியை மணம் முடித்து கொள்வதாக கூறினான். இதனை அறிந்து தருசகன் பதுமாபதியின் தோழியாகிய அழகுமிக்க யாப்பியாயினி என்பவளை அவளுக்கு மணம் முடிக்க எண்ணி அதனை அவர் தன் தாயிடம் கூற அவளும் அதனையறிந்து மகிழ்ந்தாள்.

யாப்பியாயினியை இசைச்சனுக்கு மணம் செய்து வைக்கின்ற நன்னாளில், மறைவிதிப்படி வளர்த்த வேள்வித்தீயின் முன்னிலையிலே யாப்பியாயினியை மணம் செய்து வைத்தபின்னர் அப்பதுமாபதியை மணம் செய்து வைப்பதாக தருசகன் நகரத்தார் அறியும்படி கூறினான். இதனை,

**தங்கை தலைமை தன்னையு முவந்து**

**கொங்கலர் கோதையைக் கொடுக்குநா ளாதலின்**

**இலக்கணச் செந்தீத் தலைக்கையி னிரீஇ**

**இழுக்கா வியல்பி னிசைச்ச குமரன்**

**விழுப்பெரு விதியின் வேட்டவட் புணர்கென**

**முழுப்பெருங் கடிநகர் முழுதுட னுணரக்**

**கோப்பெரு வேந்தன் யாப்புறுத் தமைத்தபின். (3:22: 72-78)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

யாப்பியானி - இசைச்சன் இவர்களின் திருமணம் ஏழு நாட்கள் நடைபெற்றதாகக் கொங்குவேளிர் கூறுகின்றார். இதனை,

**இயைந்த வதுவை யெழுநா ணீங்கலும். (3:22: 104)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**யூகியின் மணம்**

பிரச்சோதன மன்னன் பரதகன் என்னும் அமைச்சனுடைய தங்கையும், குளிர்ந்த கண்ணையும் அழகினை உடையவளும் ஆகிய ‘திலகசேனை’ என்பவளையும், சாலங்காயன் என்னும் அமைச்சனுடைய தங்கையாகிய நீலநிறமுடைய கண்டோர் நெஞ்சை மயக்கும் கண்களையும் ஒளிவிடுகின்ற கதிர்களையுடைய நெற்றியினை உடைய பார்ப்பனியாகிய ‘யாப்பி’ என்பவளையும் திருமணம் செய்து வைத்தான். இதனை,

**பரதகன் றங்கை பறந்தரி சிந்திய**
**மதரரி மழைக்கண் மடம்படு காரிகைத்**
**திலகமா சேனையென் றுலகறி பவளையும்**
**சாலங் காயற் கிளையோ ளாகிய**
**நீல வுண்க ணிலவுவிடு கதிர்நுதற்**
**பாக்கிய மமைந்த பார்ப்பியாப் பியையும்**
**ஆகிய வறிவி னரும்பொருட் கேள்வி**
**யூகிக் கீத்துப் பாகுபட லின்றி**
**யாதே யாயினு மாகவினி யெனக்கென**
**மாதாங்கு திண்டோண் மகிழ்ந்தன னோக்கி.** (5:7: 125-134)

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

**உருமண்ணுவா - இராசனை மணம்**

பதுமாபதிக்குக் கண்போன்ற தோழியும் அழகுடையவளும் வேல் போன்ற கண்களை உடையவளும் ஆகிய இராசனை என்னும் பெயரையுடையவளும், அணிகலன்களை உடையவளும் ஆகிய அக்கண்ணியை உருமண்ணுவா என்னும் அமைச்சனுக்கு திருமணம் செய்து வைத்து பெரிய திருமண வரிசைகளையும் உதயணன் வழங்கினான். இதனை,

**பண்பார் சாயற் பதுமா பதிதன்**
**கண்போ றோழி காண்டகு காரிகை**
**இயைந்த வேற்க ணிராசனை யென்னும்**
**வயங்கிழை மாததொடு வதுவை கூட்டிப்**

**பெருங்கடிச் சிறப்பும் பெயர்த்தொருங் கருளி. (4:9: 15-19)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

## நரவாணதத்தன் - மதனமஞ்சிகை திருமணம்

### நரவாணதத்தன் இளமைப்பருவம்

உதயணின் மகன் நரவாணதத்தன் இளமைப்பருவத்தில் அழகும், குணமும் கொண்டு சான்றோனாக வளர்ந்தான். கோமுகன், அரிசிகன், அழகு மிக்க பூதி, தவந்தகன் என்னும் நால்வரும் உதயணனின் அமைச்சரது பிள்ளைகள். இவர்கள் நரவாணதத்தனுக்கு ஆருயிர் தோழராயினர். கல்வி, வித்தைகளை கற்றுத் தேர்ந்தான். நல்ல வில் முதலிய படைக்கல நூல்களையும் முறைப்படி பயின்றவன். அரசனுக்குரிய கொடைக்கடமைகளையும் மேற்கொள்பவன். இச்செய்தியை,

**குலக்குவிளக் காகத் தோன்றிக் கோலமொடு**
**நலத்தகு சிறப்பி னல்லோர் நாப்பண்**
**இலக்கணம் பொறித்த வனப்புடை யாக்கையின்**
**…..**
**நற்பொருண் ஞான நவின்றுதுறை போகி**
**விற்பொரு ணன்னூல் விதியி னுணித்துப்**
**படைக்கலக் கரணம் பல்வகை பயிற்றிக்**
**கொடைக்கடம் பூண்ட கொள்கைய னாகி. (5:8: 25-43)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

### நரவாணதத்தனது காளைப்பருவம்

இளமைப்பருவத்தினைக் கடந்து காளைப்பருவம் அடைந்து காமனே இவன் என்று எண்ணும் வகையில் விளங்கினான். இதனை,

**குறைவில் செல்வமொடு குமார காலம்**
**நிறையுற வுய்த்து நீர்மையின் வழாஅ**
**ஏமஞ் சான்ற விந்நில வரைப்பிற்**
**காம னிவனெனக் கண்டோர் காமுறத்**
**தாளுந் தோளுந் தருக்கி நாளும்**
**நடவா நின்ற காலை. (5:8: 44-49)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

### மதனமஞ்சிகை

தலைக்கோல் பட்டம் பெற்ற அழகும் தகுதியும் பெற்ற கணிகை மகளிர் இரண்டாயிரத்தைந் நூற்றுவருள் தலைவி 'கலிங்கசேனை' என்பவள். அவளது மகள் மதனமஞ்சிகை பேரரழகு கொண்டவள் ஆவாள். இதனை,

**வானோ ருலகி னல்லது மற்றவட்**

**கீனோ ருலகி னிணைதா னில்லெனக்**

**கண்டோ ராயினுங் கேட்டோ ராயினும்**

**தண்டாது புகழுந் தன்மைய ளாகித்.** (5:8: 62-65)

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

மான்போன்ற பார்வையை உடையவளும், கண்டோரை விருப்பமுறச்செய்யும் அழகிய மென்மையினையும், பணிவுடைய மொழியினையும், பருத்த தோளையும், சிறிய நுதலையும், மிளிர்கின்ற கண்ணையும் உடையவள் மதனமஞ்சிகை என்னும் நங்கை. அவள் ஒருநாள் தன் தோழியரோடு மாடத்தில் பந்தாடினாள். அப்பந்து உலா வந்த நரவாணனின் மேல்விழ, தன் மேல் பந்தினை எரிந்தவர் யாரென மேலே பார்த்தான். அவளைக் கண்டு காதல் கொண்டு அவள் யாரென தெரியாமல் அவள் எரிந்த பந்தினைக் கையில் எடுத்துக்கொண்டு சோலையில் தங்கினான். தன் நண்பன் கோமுகனிடம் கூற, அவன் அப்பந்தினை கையில் வாங்கி அதிலுள்ள கைச்சுவட்டினைத் தெளிவாக கண்டு அவளை ஓவியமாக வரைந்தான். இவள் மதனமஞ்சியையே என்றும் உரைத்தான்.

### கோமுகன் மதனமஞ்சிகையினை பரிசங்காட்டல்

நரவாணதத்தன் கோமுகனைப் பரிசங்காட்ட அனுப்பினான். அவன் அப்பொருள்களை எடுத்துக்கொண்டு கலிங்கசேனையைச் சந்திக்க சென்றான். அங்கு சென்று அவன் நிகழ்ந்தவற்றைக் கூற அவள் மகிழ்ந்தாள். ஆனால், உதயணனுடைய அனுமதியின்றி நரவாணதத்தன் மதனமஞ்சிகையை மணத்தல் பொருந்தாது என்று கூறி அப்பரிசப் பொருள்களை வாங்காமல் மறுத்தாள். இதனை,

**பந்துகைக் கொண்டு மைந்தன் போகிக்**
**காழார் வனமுலைக் கணிகையர் சேரித்**
**தோழ னுள்ளத் தாழ்நனி கலக்கிய**
**மாதர் மனைவயிற்றூ துவனாகிப்**
**பல்காற் சென்று மெல்லெனச் சேர்ந்து**
**……**
**தலைக்கோன் மகளிர் தன்மை கூறிக்**
**கற்கெழு கானவன் கைக்கோ லுமிழ்ந்த**
**எற்படு சிறுதீ யெழுச்சியிற் காமம்**
**மிகுமனத் துவகையி னொல்லை விருப்பம்**
**முறையின் முறையின் முறுக மூட்டிக்**
**கொடித்தேர்க் கோமான் குறிப்பி னல்லதை**
**அடித்தியை யருளுதல் யாப்பின் றெமக்கென**
**படிற்றுரை மகளிர் பரிய மறுப்ப.** **(5:8: 117-140)**

என்னும் பாடற்பகுதி வழி அறியலாம்.

**கோமுகன் உதயணனிடம் கூற அவன் ஏற்றல்**

கோமுகனும் இச்செய்தியை உதயணனிடம் கூறினான். மகனின் உள்ளத்தை உணர்ந்து கொண்ட உதயணன் வாசவதத்தையிடம் கூற தாய் தந்தை ஆகிய இருவரும் மதனமஞ்சிகையை நரவாணதத்தனுக்கு மணம்முடிக்க சிறப்புடையவளே என்று மகிழ்ந்தான். பின் ஒரு கோடி பொன்னைப் பரிசமாகக் கொடுத்தனர். கலிங்கசேனை அப்பரிசத்தை மகிழ்ச்சியாக ஏற்றுக்கொண்டாள். இதனை,

**இருங்கண் வையகத் தேந்தலு முரியன்**
**மருந்தேர் கிளவி மதமைஞ் சிகைதன்**
**காமரு நோக்கங் காணக் கூடும்**
**ஏம வைக லியல்வதா மெனினென**
**அன்றுகை நில்லாது சென்ற வுள்ளமொடு**
**பகன்மதி போலப் பசந்த குமரன்**
**இகன்மிசை யுள்ளத் தெவ்வங் கேட்டுத்**

**தலைப்பெருந் தேவியுந் தந்தையுங் கூடிக்**

**குலப்பெருந் தேவியாக் கோடி விழுநிதி**

**சிறப்பின்விட் டிருந்து நலத்தகு கிழமைக்**

**கியாவரு முரியோ ரிவளி னில்லெனக்**

**காவல் வேந்தன் காணங் காண்டலின்.** (5:8: 141-152)

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

**நரவாணதத்தன் மணம்**

நிறைந்த காதலோடு உடம்பட்ட மதனமஞ்சிகையினது திருமணத்தைக் கலிங்கசேனை முதலிய மகளிர் முடிவு செய்த பின்னர்த் திங்களை ஒத்த முகத்தையுடைய மதனமஞ்சிகையை உதயணமன்னனுடைய மகனாகிய நரவாணதத்தன் திருமணம் செய்து, இன்புற்று வாழ்ந்தான். இதனை,

**உறாஅர் போல வுற்ற காதலொடு**

**மறாஅர் மாதர் வதுவை வலித்தபின்**

**மதிபுரை முகத்தியை மன்னவ னொருமகன்**

**வதுவைச் செல்வமொடு வான்றோய் வியனகர்**

**விதியி னெய்தி விழவு முந்துறீஇப்**

**பதனறிந்து நுகருமாற் பண்புமிகச் செறிந்தென்.** (5:8: 153-158)

என்னும் பாடற்பகுதி வழி நரவாணதத்தனின் திருமணச் செய்தியினை அறியலாம்.

## தொகுப்புரை

**பெருங்கதையில் மணம்** என்னும் இவ்இயலின் வழி ஆராய்ந்து பெறப்பட்ட கருத்துக்கள் பின்வருமாறு தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

பெயர் சுட்டாமை என்னும் அகமரபு பெருங்கதையில் இல்லை. களவு மணம் நிகழ்கிறது, கூடவே பெயர் சுட்டும் மரபும் காணப்படுகின்றது. இது அகப்பொருள் மரபில் ஏற்பட்ட நெகிழ்வு ஆகும். சங்க அகப்பாடல் மரபினோடு ஒப்புமையுடைய சடங்குகளாகப் பெருங்கதையில் திருமணத்திற்கு நன்னாள் பார்த்தல், மணமக்களை வாழ்த்துதல், மங்கல நீர் கொண்டு வருதல் போன்றவற்றைக் கூறலாம். சங்க அகப்பாடல் மரபினோடு மாற்றம் உடைய சடங்குகளாகப் பெருங்கதையில் அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், பொரியிடுதல், சதுர்த்தி நோன்பிருத்தல், உடன்மயிர் களைதல், நெய்யேற்றுதல் சடங்கு முதலானவற்றைக் கூறலாம். இது பிற பண்பாட்டுத் தாக்கத்தினால் ஏற்பட்டுள்ளது. திருமணம் என்பதற்கு மணம், மன்றல், வதுவை. வதுவை மணம், வரைவு என்று பல சொற்களால் காணமுடிகின்றது. தொல்காப்பியர் களவு மணம், கற்பு மணம் என்று பண்டைய தமிழர்கள் திருமணத்தினை இரண்டாகக் குறிப்பிடுகின்றார். ஆண், பெண் உறவில் பொய்த்தன்மை வந்த பிறகே திருமணம் என்னும் சடங்கு உருவாகியது. பெருங்கதைக் காப்பியத்தில் பலதுணை மணம் (Polygamy) காணப்படுகின்றது. உதயணன் நான்கு பெண்களை மணக்கிறான் (வாசவதத்தை, பதுமாபதி, மானனீகை, விரிசிகை). வாசவதத்தை உதயணன் திருமணத்திற்கு நன்நாள் கணிக்கப்பட்டு, முரசறைந்து கூறி அதன் பின்னரே மணம் செய்யப்பட்டது. நகர் அலங்கரிக்கப்பட்டு விழாக்கோலம் கொண்டு உதயணின் திருமணம் நடைபெற்றது என்பதனை காணமுடிகின்றது. ஓருயிர்க்கிழமை பெருங்கதையில் காணப்படுவதனைக் காணலாம். அதாவது ஈருயிர்கள் ஒன்றுபட்டு ஓருயிராக ஆனது. வேள்வித்தீ வளர்த்து அவற்றின் முன்னர் திருமணம் நடைபெற்றது. அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் போன்ற சடங்குகளை பற்றி கொங்குவேளிர் கூறுகின்றார். பொரியிடுதல் போன்ற சடங்கினை காணமுடிகின்றது. மணமக்களை அலங்கரித்து ஒப்பனை செய்யும் மரபும் காணப்படுகின்றது.

சான்றெண் விளக்கம்

1. ஞா. தேவநேயன், தமிழர் திருமணம், பக். 1V.
2. க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும். பக்.33.
3. பதினோராவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி-3, பக்.87.
4. ந. சஞ்சீவி, மங்கல மனைமாட்சி, பக்.37.
5. இலங்கை முஸ்லிம்களின் திருமண சம்பிரதாயங்கள், பக்.42.
6. பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள், பாகம் 1, பக்.184.
7. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, பக்.278.
8. சு. சிவபாதசுந்தரம், சைவக்கிரியை விளக்கம், பக்.37.
9. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.122.
10. சரவண ஆறுமுக முதலியார், தமிழர் திருமண முறைகள், கட்டுரை, பக்.351.
11. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.15.
12. திருக்குறள், கழகவெளியீடு, பக்.2
13. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.68.
14. வே. முத்துச்சாமி ஐயர், தொல். பொருளதிகார ஆராய்ச்சி, பக்.30.
15. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.100.
16. பொ.அ. துரையரங்கசாமி, தொல்காப்பிய நெறி, பக்.211.
17. வே. முனுசாமி, வாழ்வும் இலக்கியமும், பக்.66.
18. க. அன்பழகன், தமிழர் திருமணமும் இனமானமும்.
19. சசிவல்லி, திருமணச்சடங்குகள், பக்.218.
20. சசிவல்லி, திருமணச்சடங்குகள், பக்.221
21. மேலது. பக்.221
22. மேலது, பக்.220

பெருங்கதைக் காப்பியம் பல அகமரபுக் கூறுகளைக் கொண்டுள்ளது. அவ்வகமரபுக் கூறுகள் முந்தைய இயல்களில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. இவ்வியல் அகமரபுக் கூறுகளின் வெளிப்பாட்டு முறைகள் குறித்து ஆராய முற்படுகிறது. படைப்பாளன் தான் கூறவந்த கருத்தைப் படிப்போர் நன்கு உணரும்படிச் செய்வதற்குப் பல கலைநுணுக்கக்கூறுகளைக் கையாளுதல் பொதுவான மரபாகும். அத்தகு கலைநுணுக்கக் கூறுகளை ‘வெளிப்பாட்டு உத்தி’ என்றும் குறிப்பர். அவ்வுத்திகள் குறித்த விளக்கம், வகை, பயன், அவை பெருங்கதையில் இடம்பெறுகின்ற பாங்கு போன்றவை இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## உத்தி

கவிஞன் தன்னுடைய உணர்ச்சியைக் கருத்தாக மாற்றுவதற்குச் சில உத்திகளை மேற்கொள்கிறான். இவ்வுத்திகளே இலக்கிய வடிவங்களாக அமைகின்றன. பொதுவாக உத்தி என்பது படைப்பாளன் தான் கூற வந்த செய்திகளை வெளிப்படுத்துவதற்கு உவமை, உருவகம், படிமம், குறியீடு, நனவோடை போன்ற உத்திகளைப் பயன்படுத்துகிறான். அகப்பாடல்கள் தமக்கெனச் சில தனித்த உத்தி நிலையைக் காட்டுகின்றன. தனது படைப்பினை வாசகர் புரிந்து கொள்வதற்குப் பயன்படுத்தும் நுட்பமே உத்தி எனலாம்.

## வெளிப்பாட்டு உத்தி

படைப்பாளி தான் சொல்ல வந்த கருத்தினை வாசகனிடம் சரியான உணர்ச்சியோடு கொண்டு செல்லப் பயன்படுத்தும் உத்தியே வெளிப்பாட்டு உத்தியாகும். ஓர் இலக்கியத்தின் வெற்றி தோல்விகளுக்கு இவ் உத்தி காரணமாக அமைகிறது.

## உத்தி குறித்த இலக்கண நூல் வரையறை

### தொல்காப்பியம்

உத்தி என்னும் சொல் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது.

**ஒத்த காட்சி உத்தி வகை விரிப்பின்**
**நுதலியது அறிதல் அதிகார முறையே.** **(பொரு. மர. 111)**

என்னும் நூற்பாவில் முப்பத்திரண்டு உத்திகள் கூறப்படுகின்றன. இவை மட்டுமல்லாமல் பிறவும் வருமென தொல்காப்பியர் உத்திகளுக்கு விளக்கம் தருகின்றார்.

**நன்னூல்**

நன்னூல் எழுத்ததிகாரம் பொதுப்பாயிரத்தில், உத்தியின் முப்பத்து இரண்டு வகைகளும் தந்திர உத்தியின் விளக்கமும் கூறப்பட்டுள்ளது.

**நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி**
**ஏற்புழி அறிந்து இதற்கு இவ்வகையாம் எனத்**
**தகும்வகை செலுத்துதல் தந்திர உத்தி. (நன். பொது.15)**

என்று பவணந்தி முனிவர் கூறுகின்றார். அதாவது, ஒரு நூற் பொருளை நூல் வழக்கோடும், உலக வழக்கோடும் பொருந்துமாறு காண்பித்து ஏற்குமிடத்தை அறிந்து இவ்விடத்தில் இவ்வாறு சொல்லுதல் பொருந்தும் என நினைத்துத் தக்கபடிச் சொல்லல் தந்திர உத்தி என்கிறார்.[1]

**உரையாசிரியர் கூறும் உத்தி குறித்த விளக்கம்**

**இளம்புரணர் உரை (உத்தி)**

உத்தி என்பது வடமொழிச் சிதைவு. அது சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது.[2]

**சேனாவரையர் உரை (உத்தி)**

'தந்திர உத்தி' என்னும் சொல்லுக்கு 'நூல் புணர்ப்பு' என்று தெளிவாகப் பொருள் உரைக்கின்றார்.

**அகராதி தரும் உத்தி விளக்கம்**

உத்தி என்பதற்கு இலக்கண நூல்கள் தருகின்ற விளக்கத்தினைப் போன்று அகராதி நூல்களும் விளக்கமளிக்கின்றன. அதாவது, பேரகராதி, அபிதான சிந்தாமணி, தமிழ் மொழியகராதி, ஆங்கில அகராதி, இலக்கியச் சொல்லகராதி, கிரியா போன்ற அகராதிகள் உத்தி என்ற சொல்லுக்கு விளக்கமளித்துள்ளன.

**பேரகராதி**

உத்தி என்னும் சொல்லுக்கு, 'செல்வம், சொல், தந்திரஉத்தி, திருவுறுப்பு, தூக்கங்கள், தேமல், பாம்பின் படப்பொறி, ஆபரணத்தொங்கல், சீதேவி உருவம்

பொறித்த தலையணி, பேச்சு, யுக்தி’ எனப் பலபொருள்களைப் பேரகாதி கூறுகின்றது.[3]

**சதுரகராதி**

கடல், செல்வம், சொல், தந்திரவுத்தி, திருவுறுப்பு, தூக்கங்கள், தேமல், பாம்பின் படப்பொறி.

**கழகத் தமிழ் அகராதி**

யுக்தி, தந்திரம், கருதலளவை, பாம்பின் படப்பொறி, தேமல், சேர்க்கை, இசைவு, இணக்கம், தக்கதன்மை, பேச்சு அறிவு, சீதேவி என்னுந் தலைக்கோலம்.

**தமிழ் தமிழ் அகரமுதலி**

சொல், சூழ்ச்சி, செல்வம், சீதேவி உருவம் பொறித்த தலையணி, தேமல், பாம்பின் படப்பொறி, தந்திரவுத்தி, அறிவு, கருதலளவை, சேர்க்கை, இணக்கம், தக்கதன்மை, ஆபரணத் தொங்கல், அபின்.

**லி.்.ப்கோ தமிழ் அகராதி**

பேச்சு, சேர்க்கை, யுக்தி, இலக்கிய உத்தி, அணிகலத் தொங்கல், இலக்குமி உருவம் கொண்ட ஒரு தலையணி, நல்ல பாம்பின் படப்பொறி, தேமல்.

**அபிதான சிந்தாமணி**

உத்தி எனப்படுவது ‘ஒரு இலக்கணத்தால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கொடும், உலக வழக்கொடும் பொருந்திக்காட்டி அப்பொருளை மற்றோர் இலக்கியப் பொருளினை ஏற்கும் இடமறிந்து, இவ்விடத்திற்கு இது ஆகுமெனத் தக்க வகையில் செலுத்துவதாகும்’.[4]

**தமிழ் மொழியகராதி**

அனுமானம், அறிவு, சேர்தல், அபின், இசைவு, நுணுக்கம், செல்வம், சொல், தந்திர உத்தி, திருவுறுப்பு, தூக்கங்கள், தேமல், படப்பொறி.[5]

**இலக்கியச் சொல்லகராதி**

சொல்லல், புணர்ப்பு, தேமல், பாம்பின் படப்பொறி.[6]

**கிரியா**

ஒரு சொல் அதிக அளவு பலனை அளிப்பதற்கு ஏதுவாக உருவாக்கப்படும் திறமையான வழிமுறை; ஒன்றைச் செயல்படுத்துவதற்கு உரிய திறமையான திட்டம் effective means; Technique விளம்பர உத்திகளை கையாண்டு விற்பனையைப் பெருக்கலாம். தொழில் முறை உத்திகள் தெரிந்தவர்.

இலக்கியம், இலக்கணம் முதலியவற்றில் திறம்பட வெளிப்படுத்தும் முறை, Literary Device நனவோடை உத்தி நாவல்.[7]

**நிகண்டு தரும் உத்தி விளக்கம்**

**பிங்கல நிகண்டு**

இது உத்தி என்பதற்கு நான்கு பொருள்களைத் தருகின்றது. அவை,

1. **பாம்பின் படப்பொறி**
2. **தேமல்**
3. **உரைத்தல்**
4. **சீதேவி என்னும் தலைக்கோலம்**

என்பன. இதனை,

**உரகபடப் பொறி சுணங்குஉரை யாடல்**

**ஓர்திரு வுறுப்பும் உத்தி யாகும். (3194)**

என்று இந்நிகண்டின் அடிகள் வழி அறியலாம்.

**நாமதீப நிகண்டு**

நாமதீப நிகண்டு உத்தி என்னும் சொல் மூன்று பொருள்களில் பயன்படுவதாகக் கூறுகிறது. அவை,

1. **படப்பொறியின் பெயர்**
2. **தலைக்கோலத்தின் பெயர்**
3. **உபாயத்தின் பெயர்**

என்பனவாகும். இவற்றை,

**பை பணம் படம்பொறிப் பேர் உத்தி (262: 1)**

**…தொங்கல் உத்தி பிஞ்ஞகமே**

**செய்தலைக் கோலம் சேகரமுமாம். (432: 1-2)**

என்று நாமதீப நிகண்டின் அடிகள் வழி அறியலாம்.

## உத்தி தொடர்பாக ஆய்வறிஞர்கள் தரும் விளக்கம்

'உந்து' என்னும் அடிப்படைச் சொல் பல்வேறு பொருள்நிலைகளைக் கொண்டுள்ளது. இந்த 'உந்து' என்ற சொல்லின் திரிபே 'உத்தி' என்றானது. 'யுக்தி' என்றும் வடமொழியில் குறிப்பிடுகின்றனர். 'உத்தி' என்பது குறித்து பல்வேறு கருத்துக்கள் அறிஞர்களால் விளக்கப்படுகின்றது. இதனை ஆங்கிலத்தில் (Technics) என்றழைப்பர்.

கவிஞனின் தனித்தன்மைகளே 'உத்தி' என்று அறியப்படுகின்றது. ஒரு இலக்கியம் சிறப்பாக அமைவதற்கு இத்தகைய 'உத்தி' முறையே தேவையான ஒன்றாக உள்ளது.

இலக்கியவாதி ஒரு கருத்தினை அல்லது செய்தியைத் தெரிவிப்பதற்கு நேரடியாக இல்லாமல் உத்திமுறைகளின் வழி வெளிப்படுத்துவதனை அறியலாம். ஒரு படைப்பாளியின் தனித்தன்மைக்கு ஏற்பவும், படைப்பாற்றலுக்கு ஏற்பவும் 'உத்தி' முறையில் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும்.

உத்தி (Technique) என்ற சொல்லுக்குச் சொல்லல், மொழிதல் என்று தமிழ்மொழி அகராதியும், இலக்கியச் சொல் அகராதியும் பொருள் தருகின்றன.

கலைஞனுக்கு தான் சொல்ல நினைக்கிற பொருளின் மீது பிடிப்பு ஏற்படும் போது தான் உத்தி முறையில் மிகுந்த நாட்டம் ஏற்படுகிறது.[8]

படைப்பாளிகள் எவ்வளவு பெரிய மேதையாக இருந்தாலும் அவருடைய படைப்பில் நல்ல உத்தி நுணுக்கங்கள் இல்லை என்றால் படைப்புச் சிறக்காது.[9]

கவிஞன் ஏதேனும் நோக்கம் பற்றி ஒரு சொல், தொடர், பொருண்மை, கருத்து, பொருள், உணர்வு, பாத்திரம், செயல், நிகழ்ச்சி, இடம், காலம், கனவு, கடிதம், வருணனை, விளக்கம், ஆடல், பாடல், காட்சி, நிறம் என ஏதேனும் ஒன்றினை ஆளும் போது அதில் உத்தி தேர முடிகின்றது.[10]

**உவமை**

அணிகளில் சிறந்ததாகவும், முதன்மையாகவும், எல்லா அணிகளுக்கும் அடிப்படையானதாகவும் அமைவது உவமை. இது எல்லா இலக்கியத்திற்கும் ஏற்றதும் உரியதுமான உத்தியாகும் என்கிறார் ச.வே. சுப்பிரமணியன்.

**உவமை குறித்து நூல்கள் தரும் விளக்கம்**

**தொல்காப்பியர்**

**வினை பயன் மெய் உரு என்ற நான்னே**
**வகை பெற வந்த உவம் தோற்றம்**

**(தொல்.பொருள்.உவமை: 1)**

என்று தொல்காப்பியர் உவமையினைப் பற்றி கூறுகின்றார்.

**மதுரைக்காஞ்சி**

**எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கின்**
**கண்ணுள் வினைஞரும். (மதுரை. காஞ். 516-518)**

என்ற வரிகளின் மூலம் உவமையினைப் பற்றிக் கூறுகின்றது.

**மணிமேகலை**

**உவம மாவது ஒப்புமை அளவை. (மணி. 27: 41)**

என்ற வரிகளின் மூலமாக உவமையினை அறியலாம்.

**உவமை குறித்து ஆய்வறிஞர்கள் தரும் விளக்கம்**

**பரிமாற் கலைஞர்**

**உவமை என்னும் தவலருங் கூத்தி**
**வல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து**
**காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி**
**யாப்பறி புலவர் இதயம்**
**நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே.**

என்று உவமையினைப் பற்றி வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் கூறுகின்றார்.[11]

**கோ. சுந்தரமூர்த்தி**

அணி அழகு சேர்ப்பதென்பது கவிதையின் பொருளை இன்னும் ஆர்வம் உடையதாகவும், ஆழம் உடையதாகவும் ஆக்குவது என்று பொருள் என்கிறார் கோ. சுந்தரமூர்த்தி.[12]

**ரா. சீனிவாசன்**

உவமை என்பது கவிஞனின் அனுபவப்பொருளாகும். பொருள் என்பது அவன் காணும் புதிய பொருளாகும். அவன் ஏற்கனவே கண்டு சுவைத்த பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்தி வைத்து அப்பொருளின் உயர்வு தாழ்வுகளை அளந்து அறிவிக்கின்றன எனக் கூறலாம் என்கிறார் ரா. சீனிவாசன்.[13]

**மா. இராமலிங்கம்**

பொருளின் இயல்பான தன்மையினை அறிந்து தெளிவதற்கு உவமைகள் உதவுகின்றன. பொருளாவது, கருத்தாவது எவ்வளவு சிறியதாயினும் உவமை அதனைப் பெரியதாக மிகைப்படுத்தி நன்கு விளக்கம் தரும். உவமையைப் பொருளின் உண்மைத் தன்மையை அறிவதற்கு ஏற்ற அளவையாக புலவோர் கருதுவர் என்கிறார் மா. இராமலிங்கம்.[14]

**சிலம்பொலி செல்லப்பன்**

சொல்லப் புகுவதனைத் தக்க ஒப்புமை கொண்டு உணர்த்துவது உவமை. பேச்சிலும் எழுத்திலும் உவமையைக் கையாளாதவர் எவருமிலர் எனலாம். புலி போலப் பாய்ந்தான், மான் போல ஓடினாள் என எளிய மக்களும் உவமை கூறக் காண்கிறோம். உவமைகள் புலவர்பால் வெளிப்படும் போது உயரிய கருத்துகளை வெளிப்படுத்துவனவாகின்றன. அணிகட்கெல்லாம் தாயாக விளங்குவது உவமை அணியே! சொல்லப் புகும் கருத்து உவமையால் வலிவு பெறுகிறது என்கிறார் சு. செல்லப்பன்.[15]

**பெருங்கதை உவமை**

வெளிப்பாட்டு உத்திகளில் ஒன்றான உவமை பெருங்கதைக் காப்பியத்தில் பயின்றுவந்துள்ள பாங்கு ஆராயத்தக்கது. பெருங்கதையில் நானூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் உவமைகள் ஆளப்பட்டுள்ளன. கிடைக்காது மறைந்த பகுதிகளும் கிடைத்திருக்குமானால் இன்னும் பல உவமைகளை நாம் பெற்றிருக்கக் கூடும்.

பெருங்கதையாகிய தங்க வளையலில் உவமைகளாய மணிக்கற்களைப் பொருத்தமுறப் பதித்து ஆசிரியர் ஒளி கூட்டியுள்ளார் என்கிறார் சு. செல்லப்பன்.[16]

1. **உவமை உத்தி**

- **உருவ உவமைகள்**
- **பழமொழி உவமைகள்**
- **அழகு உவமைகள்**
- **உணர்வுவமைகள்**

என்று நான்கு வகையாகக் கூறலாம்.

**உருவ உவமைகள்**

ஒரு படைப்பாளி தன்னுடைய படைப்பினில் பல உத்திகளைக் கையாண்டு மேலும் அழகுபடுத்துவார். அது போன்று மனிதனின் உடல் உறுப்புகளை உவமையாகக் கூறும் உத்தியினைக் கொங்குவேளிர் பெருங்கதையில் கையாண்டு உள்ளார்.

1. **கூந்தல்**
2. **முகம்**
3. **நுதல்**
4. **புருவம்**
5. **கண் (உண்கண், மழைக்கண், தடங்கண், நெடுங்கண், வேற்கண்)**
6. **மூக்கு**
7. **காது**
8. **வாய்**
9. **தோள்**
10. **கை, விரல், நகம்**
11. **வயிறு**
12. **கொப்பூழ்**
13. **இடை**
14. **தொடை**
15. **கணைக்கால்**

போன்ற உருவ உவமைளை கொங்குவேளிர் கூறியிருப்பது இவ்வியலில் விரித்துக் கூறப்படுகிறது.

1. **கூந்தல்**

சங்க இலக்கியங்களில் கூந்தலின் வேறு பெயர்களாக அளகம், கூந்தல், பித்தை, முச்சி, ஓதி, கூழை, கதுப்பு, குழல் போன்றவை கூறப்படுகின்றன. ஆற்றின் கருமையான அறல் (அறல் - மென்மையான மணல்) போன்ற கூந்தல், கருமுகில் போன்ற கூந்தல், நறுமணமுடைய கூந்தல், இருங்கூந்தல் (கருங்கூந்தல்) என்று கூறப்படுகின்றது. கரிய இருண்ட கூந்தல், நிறத்தால் மேகத்திற்கும், நீல மணிக்கும், கரிய வண்டுகளுக்கும், கரிய மைக்கும், இருளுக்கும் உவமிக்கப்பட்டது. கூந்தலில் சுருள்களும் மடிப்புகளும் ஆற்று அறலுக்கு உவமிக்கப்பட்டன. அவர்களின் அடர்ந்த கூந்தல் மயிலின் தோகைக்கும், பொன் அணியால் வகிர்க்கப்பட்ட ஓதி மின்னல் பாயும் மேகத்திற்கும் உவமிக்கப்பட்டன.

கலித்தொகையில் கூந்தல் ‘ஐம்பால்’ என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. கலித்தொகை இலக்கியம் (131-39) பெண்களை ‘மணங்கமழ் ஐம்பாலார்’ என்று குறிப்பிடுகிறது.

சில பெண்கள் குளித்து முடித்துப் பின்னாமலும் முடியாமலும் அப்படியே முதுகுப் புறமாக பறக்கவிட்டிருந்த செய்தியை நெடுநல்வாடை,

**ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்துப்**
**பின் அமை நெடுவீழ் தாழ துணைதுறந்து**
**நல்நுதல் ஊறிய சில்மெல் ஓதி. (136-138)**

கூறுகின்றது.

பெருங்கதையில்,

**அஞ்ச லோதியை நெஞ்சு வலியுறீஇச் (1:36: 78)**

அழகிய சிலவாகிய கூந்தலையுடைய வாசவதத்தையை நெஞ்சு வன்மையுறும்படி செய்தாள் சாங்கியத்தாய்.

**நன்மணி யைம்பா னருமதைக் கரற்றிய (1:36: 304)**

நன்னிறமுடைய நீலமணி போன்ற நிறமுடைய கூந்தலை உடைய நருமதை.

**காரிருங் கூந்தல் கையினேந்த** (1:40: 195)

காரெனக் கறுத்த தனது கூந்தலைக் கையிலேந்திக் கொண்டு தன் காதலன் தன்னை பிரிந்தால் அப்போதே உயிர் பிரியக்கூடிய பேரன்புடைய மகளிர்.

**அணியறு லன்ன வைம்பாற் கூழையர்** (1:41: 52)

அழகியஅறல் (கருமணல்) போன்ற ஐம்பாலாகிய கூந்தலையுடைய பேதை மகளிர்.

**தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்** (1:43: 141)

பூந்துகள் பொருந்தியிருந்த தாழ்ந்த கரிய கூந்தலையுடைய மகளிர்.

**சூருறு மஞ்ஞையிற் சோர்ந்த கூந்தலர்** (1:44: 22)

அச்சமுற்ற மயில்களின் தோகை போன்று அவிழ்ந்த கூந்தலையுடைய மகளிர்.

**குறுநெறிக் கொண்ட கூழைக் கூந்தலுள்** (1:46: 221)

பேதை பருவ மகளிர் தமது முதுகினை மறைக்கும்படி சீப்பினாலே வாரப்பட்டுக் குறிய நெறிப்பினைக் கொண்ட கூழையாகிய கூந்தலை உடையர்.

**குவளைக் கோதை கொண்ட கூந்தலர்.** (1:46: 245)

குவளை மலர் மாலை சூட்டிய கூந்தலையுடைய பணிமகளிர்.

**விம்முவன னடுங்கும் பொம்ம லோதியை** (1:55: 119)

அச்சமிக்க பார்வையோடு விம்மி நடுங்கி நின்ற மிக்க கூந்தலையுடைய வாசவதத்தை.

**கோலங் கொண்ட குறுநெறிக் கூழை** (2:15: 91)

நீலமணி நீண்டு வளர்ந்தாலொத்த அழகினைக் கொண்ட குறிய நெறிப்பினையுடைய கூந்தலினையும், அக்கூந்தலைக் கை செய்யாது ஒரே சிகையாக முடிக்கப்பட்ட அழகினையும் உடைய விரிசிகை என்னும் குறுமகள்.

**தாழிருங் கூந்தலைத் தணப்ப நின்றதோர்.** (2:17: 46)

தாழ்ந்த கரிய கூந்தலையுடைய வாசவதத்தை.

**நெறிதாழ் ஓதி நெஞ்சின் அகத்தே** (2:17: 148)

அறல்பட்டுத் தாழ்ந்த கூந்தலையுடைய வாசவதத்தை.

**மழைக்கால் அன்ன மணியிருங் கூந்தல்** (2:19: 34)

மழைக்கால் போன்றதும் நீலமணி போன்ற நிறமுடையதுமாகிய கரிய கூந்தல்.

**வண்டுளர் ஐம்பால் வயங்கிழை மாதரை. (2:20: 96)**

வண்டு கிண்டுதற்குக் காரணமான மலர்மணம் பொருந்திய கூந்தலையும் விளங்குகின்ற அணிகலனையும் உடையவளாகிய வாசவதத்தை.

**புதுமலர்க் கோதை புனையிருங் கூந்தற் (3:5: 26)**

புதிய மலர் மாலையணிந்த கரிய கூந்தலையுடைய பதுமாபதி.

**மணியிருங் கூந்தன் மாசுகண் புதைப்பப் (3:9: 153)**

வாசவதத்தையின் நீலமணி போன்ற நிறமுடைய நெறிப்புடைய கரிய கூந்தல் அழுக்கு மூடப்பின்னிப் பிணைந்து சடையாகி இருப்பதனாய் கனாக் கண்டான் உதயணன்.

**அலர்ததை யைம்பா லணியிழை யேறிப் (3:13: 12)**

மலர்செறிந்த கூந்தலையும் அழகிய அணிகலன்களையும் உடைய பதுமாபதி.

**நீலத் தன்ன நெறியிருங் கூந்தலைப் (3:21: 79)**

நீலமணி போன்ற நிறமுடைய நெறிப்புடைய கரிய கூந்தலையுடைய பதுமாபதி.

**மதுநா றைம்பாற் பதுமா பதியையும் (3:22: 196)**

தேன் மணம் கமழும் கூந்தலையுடைய பதுமாபதி.

**மாவீ ழோதிதன் கோயில் புக்கபின் (4:5: 39)**

வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய அப்பதுமாபதி தன் மண்டபத்திற்குச் சென்று புகுந்த பின்னர்.

**நலங்கிளர் நறுநுது னாறிருங் கூந்தல் (4:5: 96)**

மணம் கமழும் கரிய கூந்தலையும் குற்றமற்ற கற்பினையும் உடைய வாசவதத்தை.

**வடுவாழ் கூந்தல் வாசவ தத்தை (4:6: 55)**

வகிர்ந்த கோடு ஆழ்ந்து கிடக்கும் கூந்தலையுடைய வாசவதத்தை.

**நடுங்கிய நெஞ்சமொ டொடுங்கீ ரோதி. (4:7: 77)**

நடுங்கிய நெஞ்சத்தோடு வெள்ளத்தால் இடிக்கப்படுகின்ற கரை போன்று தன் நெஞ்சு விம்முதலுற்றுச் சடையாக அடங்கிய நெய்ப்புடைய கூந்தலை உடைய வாசவதத்தை.

**வரிக்குழற் கூந்தல் வசுந்தரி தன்மகள். (4:12: 146)**

அறலையும் சுருளையும் உடைய கூந்தலையுடைய வசுந்தரி மகளாகிய மானனீகை.

**தேன்றேர் கூந்தற் றேவியர் பலருளும்.** (4:13: 43)

வண்டுகள் இரை தேடுகின்ற கூந்தலையுடைய தேவிமார் பலருள்ளும்.

**சில்லென் கூந்தலை மெல்லென வாரிக்** (4:16: 11)

சிலவாகப் பகுக்கப்படும் அவள் (விரிசிகை) கூந்தலை மெல்ல வாரினர்.

சங்க அகப்பாடல்கள் கூந்தல் குறித்துக் குறிப்பிடும் ஓதி, ஐம்பால், கூழை போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 2. முகம்

சங்க இலக்கியத்தில் மகளிர் முகம் முழுமதிக்கு வடிவாலும் ஒளியாலும் உவமிக்கப்பட்டது. அது தாமரை மலருக்கும் உவமிக்கப்பட்டுள்ளது. இதனைப் போன்று கொங்குவேளிரும் மகளிரின் முகத்தினை **மதி, தாமரை, நிலா கதிர்** போன்ற பொருள்ளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

இதனை பெருங்கதையில்,

**தாமரை முகத்தி தலைக்கை யாகப்** (1:34: 76)

செந்தாமரை மலர் போன்ற திருமுகத்தை உடையாள் வாசவதத்தை.

**கதிர்மதி முகத்தியைக் காண்டலு முண்டென** (1:34: 84)

திங்கள் போன்ற முகத்தையுடைய அவளை நான் காணவும் கூடுமோ என்று உதயணன் எண்ணுகிறான்.

**மதிக்கவின் அழித்த மாசறு திருமுகத்து** (2:2: 6)

மாசின்மையானே மதியின் கவினை அழித்த திருமுகத்தை உடையவள் வாசவதத்தை.

**தாமரை எள்ளிய காமரு திருமுகத்து** (2:4: 126)

தாமரையைப் பழித்த அழகுடைய விரும்புதற்குக் காரணமான முகத்தை உடையவள் வாசவதத்தை.

**கூடுமதி அன்ன சேடணி திருமுகத்து** (2:15: 79)

முழுமதி போன்ற அழகுடைய முகத்தை உடையவள் விரிசிகை

**தாமரை யன்னதன் தகைமுக மழுங்கா** (2:16: 15)

செந்தாமரை மலரை ஒத்த அழகுடைய விரிசிகை முகத்தினது ஒளி மருங்கா நிற்பவும்

**மதிபுரை முகத்திக்கு மற்றிது கூறும்** (2:17: 104)

திங்களை ஒத்த முகத்தையுடைய வாசவதத்தை.

**குழையணி காதிற் குளிர்மதி முகத்திக்குத்** (2:18: 5)

குழையணிந்த காதினையும், குளிர்ந்த திங்கள் மண்டிலம் போன்ற முகத்தினையும் உடைய வாசவதத்தை.

**திலதஞ் சுடருந் திருமதி வாண்முகம்** (3:5: 23)

திலகம் ஒளிருகின்ற அழகிய திங்கள் போன்ற ஒளி படைத்த முகத்தையுடைய பதுமாபதி.

**ஒருங்குண் டாடிய கருங்கண் மதிமுகம்** (3:9: 52)

திங்கள் மண்டிலம் போன்ற முகத்தினை உடைய யாப்பியாயினி.

**திருமதி முகத்தியைச் சேர்ந்து கைவிடாஅ** (3:13: 36)

திங்கள் மண்டிலம் போன்ற முகத்தையுடைய அப்பதுமாபதி.

**நிலாவுறு திருமுக நிரந்துடன் மழுங்கிக்** (3:14: 122)

ஒளி பொருந்திய தனது அழகிய முகம் ஒருசேர ஒளி மழுங்கித் தனது கரிய புருவம் முரிந்து வளைந்து இடம்பெயரவும் பதுமாபதி ஊடல் கொண்டாள்.

**ஒண்கதிர் மதிமுக மொளியொடு சுடரச்** (3:22: 224)

ஒள்ளிய கதிரையுடைய திங்கள் போன்ற திருமுகம் மேலும் ஒளியோடு விளங்கும்படி இருந்தாள் பதுமாபதி.

**கோளேர் மதிமுகங் கோட்டி நோக்கக்** (4:12: 136)

திங்கள்கோள் போன்ற தன் முகத்தை வளைத்துத் தன் தோழிமார் குழுவினை நோக்கினாள் வாசவதத்தை.

சங்க அகப்பாடல்கள் முகம் குறித்துக் உவமிக்கப்படும் தாமரை, முழுமதி போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

### 3. நுதல்

நுதல் என்பதற்கு நெற்றி என்ற வேறு பொருள் உள்ளது. சுடர்நுதல், வாள்நுதல், ஒள்நுதல், நறுநுதல் (பிறை நிலா போன்ற நுதல், ஒளியுடைய நுதல், அழகான நுதல், நறுமணமான நுதல்) ஆகிய சொற்கள் அடையோடு சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளன.

பெருங்கதையில்,

**செம்பொற் சுண்ணஞ் சிதர்ந்த திருநுதல்** (1:33: 120)

செம்பொன்னாலியன்ற சுண்ணம் சிதறிய அழகிய நுதலை உடையவள் வாசவதத்தை.

**பிறைநுதன் மாதர் பிறந்த யாண்டினுள்** (1:36: 265)

மறை போன்ற நெற்றியையுடைய வாசவதத்தை பிறந்த அவ்வியாண்டினுள்ளே.

**தேங்கமழ் கோதைஎன் திருநுதன் மாதரை** (2:1: 75)

தேன்மணக்கும் மாலையினையும் அழகிய நெற்றியினையும் உடைய வாசவதத்தை.

**நறுநுதற் பணைத்தோள் நங்கை** (2:8: 73)

நறிய நெற்றியினையும் மூங்கில் போன்ற தோளினையும் உடைய வாசவதத்தை.

**முரிந்தேந்து புருவம் பொருந்திய பூநுதல்** (2:15: 87)

வளைந்துயர்ந்த புருவத்திற்கேற்ற பொலிவுடைய நுதலினையும் உடையவள் விரிசிகை.

**பனிப்பிறை அழித்த படிமைத் தாகிய**
**அணித்தகு சிறுநுதல் அழன்றுவியர் இழிய.** (2:16: 22-23)

பிறையைப் பழித்த தன்சிறிய நெற்றியினின்றும் வியர்வை துளியா நிற்ப வாசவதத்தை ஊடினாள்.

**அந்தியுண் முளைத்த வெண்பிறை போலச்**
**செந்தீச் சிறுநுதன்** (2:19: 88-89)

செக்கர் வானத்தே, தோன்றிய வெண்பிறை அச்செக்கர் வானத்துள்ளே மூழ்கி மறைந்தாற் போன்று வாசவதத்தையின் சிறிய நெற்றி.

**நன்னுதன் மடவோய் நன்றல மற்றிவை** (3:15: 38)

நல்ல நுதலையுடைய பேதையே என்று உதயணன் யாழ் நரம்பின் குற்றங்களைக் கூற சொன்ன யாப்பியாயினியைக் கூறினான்.

**வாணுதன் மாதரை** (4:7: 2)

ஒளிபொருந்திய நெற்றியையுடைய வாசவதத்தை.

**ஒண்ணுதற் குற்றது மெய்கொலென் றுள்ளிப்** (4:10: 154)

ஒள்ளிய நுதலையுடைய வாசவதத்தை.

சங்க அகப்பாடல்கள் நுதல் குறித்துக் குறிப்பிடும் சுடர்நுதல், வாள்நுதல், ஒள்நுதல், நறுநுதல் போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

### 4. புருவம்

சங்க இலக்கியத்தில் புருவத்தினை வில்லைப் போன்ற புருவங்கள் என்று கூறுவதனைக் காணமுடிகின்றது.

பெருங்கதையில்,

**எழுதி யன்ன வேந்துநுண் புருவம்** (1:40: 321)

ஓவியமாக எழுதி வைத்தாற் போன்ற எழிலுடைய உயர்ந்த நுண்ணிய புருவமிரண்டும் சினத்தால் நெற்றியில் ஏறி நெருங்கி வளையும்படி ஊடல் கொண்டாள் தலைவி.

**சிலையணி அழித்த சென்றேந்து புருவத்து** (2:12: 91)

வில்லினது அழகை அழித்தனவும் நீண்டு உயர்ந்தனவுமாகிய புருவத்தை உடைய மகளிர்.

**முரிந்தேந்து புருவம் பொருந்திய பூநுதல்** (2:15: 87)

நீண்டு முரிந்து உயர்ந்த புருவத்தினையும், அப்புருவத்திற்கேற்ற பொலிவுடைய நுதலினையும் உடையவள் விரிசிகை.

**திருவில் அன்ன சென்றேந்து புருவம்** (2:16: 25)

இந்திரவில்லை ஒத்த நீண்டுயர்ந்த புருவம் நெரிந்து வளைந்திருக்கும் வாசவதத்தை. சங்க அகப்பாடல்கள் புருவத்தினைக் குறிப்பிடும் போது வில்லினை உவமையாகக் கூறுவது போன்று பெருங்கதையிலும் காணப்படுகிறது.

### 5. கண்

நேத்திரம், நாட்டம், நோக்கம், சால்/சக்கு, அக்கி, தாரை, விலோசனம், பார்வை, அம்பகம் இவையனைத்தும் கண்ணைக் குறிக்கும் வேறுபெயர்களாகும்.

வடிவும் பிறழ்ச்சியும் மருட்சியும் பற்றிக் கூற கயல், கெண்டை, மான் முதலியவற்றிற்கு உவமிக்கப்பட்டன.

சங்க இலக்கியத்தில் கண் வர்ணனைகள் - கயல்மீன் போன்ற கண், மாவடுவை கத்தியால் பாதியாக கத்தியால் நறுக்கினாற் போன்ற கண், மையிட்ட கண்(உண்கண்), குவளை மலரைப் போன்ற கண், செவ்வரி படர்ந்த கண்கள்,

மழைக்கண், மலர்க்கண், பூங்கண் என்று கூறப்பட்டுள்ளது. இதனைப்போன்று பெருங்கதையில்,

1. **உண்கண்**
2. **மழைக்கண்**
3. **தடங்கண்**
4. **நெடுங்கண்**
5. **வேற்கண்**

என கண்களைக் கொங்குவேளிர் பல பெயர்களில் அழகுறக் கூறியுள்ளார்.

### ❖ உண்கண்

**மலரே ருண்கண் மாதர்க் கமைந்த (1:35: 60)**

குவளை மலர் போன்ற மையுண்ட கரிய விழிகளையுடைய வாசவதத்தை.

**வடிவே லுண்கண் வருபனி யரக்கித் (1:36: 99)**

வடித்த வேல் போன்ற மையுண்ட கண்களிற் பெருகும் நீரைத்துடைத்துக் கொண்டாள் வாசவதத்தை.

**கருங்கே ழுண்கண் கலக்கமொ டலமரப் (1:43: 142)**

மகளிரின் கரிய நிறமுடைய மையுண்ட கண்கள் கலக்கமெய்தியது.

**குவளை யுண்க ணிவளொடு புணர்ந்த (3:17: 118)**

குவளை மலர் போன்ற மையுண்ட கண்களையுடைய பதுமாபதி.

**வடிக்கே ழுண்கண் வயங்கிழை குறுகி (4:10: 90)**

மாவடுப்பிளவு போன்றனவும் நிறமிக்கனவும் காண்போர் உள்ளத்தை உண்பனவும் ஆகிய கண்களை உடைய பதுமாபதி.

**நீல வுண்க ணிலவுவிடு கதிர்நுதற் (5:7: 129)**

நீல நிறமுடைய கண்டோர் நெஞ்சை உண்ணும் கண்களை உடையவள் சாலங்காயன் என்னும் அமைச்சனுடைய தங்கை யாப்பி.

❖ **மழைக்கண்**

**பெருமதர் மழைக்கண் வருபனி யரக்கிக்** (1:33: 136 )

பெரிய மதர்த்த குளிர்ந்த கண்ணினின்றும் பெருகும் நீரைத் துடைத்துக் கொண்டாள் வாசவதத்தை.

**அங்கலுழ் பணைத்தோட் செங்கடை மழைக்கண்** (1:40: 367)

மூங்கில் போன்ற தோளினையும் சிவந்த கடையினையுடைய குளிர்ந்த கண்ணையும் உடைய வாசவதத்தை.

**பிறழ்ச்சியொ டுலாவும் பெருமதர் மழைக்கண்** (1:46: 163)

தனது பெரிய மதர்ப்புடைய குளிர்ந்த கண்கள் கண்ணீரைச் சுமந்த பிறழ்ந்துலாவாநின்ற அச்சமுடைய பார்வையோடு துன்பமுற்றால் வாசவதத்தை.

**அரிமதர் மழைக்க ணனந்த ரெய்திய** (1:51: 87)

செவ்வரியோடிய மதர்த்த தனது குளிர்ந்த கண்களிலே துயில் மயக்கம் எய்தப் பெற்ற அழகிய மாமை நிறமுடைய வாசவதத்தை.

**பல்பனி பரந்த சில்லரி மழைக்கண்** (1:55: 117)

பலவாகிய துளிகள் தோன்றியப் பரவிய சிலவாகிய செவ்வரியோடிய குளிர்ந்த கண்களையுடைய வாசவதத்தை.

**செங்கடை போழ்ந்த சிதரரி மழைக்கண்** (2:4: 128)

செவ்வரி கருவரி பரந்த குளிர்ந்த கண்களை உடையவள் வாசவதத்தை.

**கருங்கடை மழைக்கண்.** (2:8: 65)

கரிய கடையினையுடைய குளிர்ந்த கண்களையுடைய பரத்தையர்.

**ஓடரி சிதரிய ஒள்ளரி மழைக்கண்** (2:16: 16)

ஒள்ளிய அழகிய குளிர்ந்த வாசவதத்தையின் கண்கள் தீப்போலச் சிவந்தன.

**அலரெனக் கிடந்த மதரரி மழைக்கட்** (3:5: 24)

செந்தாமரை மலர்கள் போன்று அமைந்து கிடந்த மதர்த்த செவ்வரிபரந்த குளிர்ந்த விழிகளையுடைய பதுமாபதி.

**போதுபிணைத் தன்ன மாதர் மழைக்கண்** (3:16: 17)

நெய்தன் மலரை இரட்டையாகப் பிணைத்து வைத்தாற் போன்ற அழகிய குளிர்ந்த கண்களையுடையவள் பதுமாபதி.

**ஒள்ளிய மழைக்கட் டேவியை யுள்ளி. (5:3: 200)**

ஒள்ளிய செவ்வரி பரந்த குளிர்ந்த கண்ணையுடைய வாசவதத்தை.

❖ **தடங்கண் (Large eyes)**

**காமங் கனிந்த கருந்தடங் கண்ணின். (1:40: 191)**

காமப்பண்பு கனிந்தொழுகும் தன்கரிய பெரிய கண்களையுடையப் பெண்.

**பதம்பார்த்து மலரும் பனிமலர்த் தடங்கண் (1:40: 324)**

காதலனுடைய காமச் செவ்வி தேர்ந்து மலர்வனவும் குளிர்ந்த அம்மலர் போல்வனவும் ஆகிய தலைவியின் பெரியகண்.

**கொண்டுவந் தாடுங் கொழுமலர்த் தடங்கட் (1:42: 50)**

கொழுவிய மலர் போன்ற பெரிய கண்களையுடையவள் வாசவதத்தை.

**வடியேர் தடங்கண் வாளென மிளிரும் (1:44: 153)**

வாசவதத்தையின் மாவடுப் போன்ற பெரியதன் கண்கள் வாள் போன்று மிளிராநின்றது.

**படைமலர்த் தடங்கண் பனிசுமந்ந்து வீழ (1:46: 210)**

காமவேள் படைக்கலமாகிய மலர் போன்ற பணிமகளிரின் பெரியகண்களில் இருந்து நீர்த்துளிகள் பெருகி விழுந்தன.

**நீலத் தன்ன கோலத் தடங்கண் (1:47: 244)**

நீலமலர் போன்ற அழகுடைய பெரிய கண்களையுடைய கோப்பெருந்தேவி.

**நீடுமலர்த் தடங்கண் பாடுபிறழ்ந் துறழ (1:48: 126)**

மலர் போன்ற பெரிய நெடிய கண்கள் அங்குமிங்குமாகப் பக்கங்களிலே பிறழ்ந்து மாறுபடும்படி நோக்கினாள் வாசவதத்தை.

**வருத்தமுற் றலமரும் வாளரித் தடங்கட் (1:53: 11)**

துன்புற்றுச் சுழலாநின்ற வாள் போன்ற செவ்வரியோடிய பெரிய கண்களையுடைய வாசவதத்தை.

**வடியி னன்ன வாளரித் தடங்கட் (1:55: 55)**

மாவடுப்பிளவும் வாளும் போன்ற செவ்வரியோடிய பெரிய கண்களையுடைய நனிநாகரிக மகளிர்.

**அணிக்கவின் கொண்ட ஐயரித் தடங்கண் (2:2: 7)**

திருமுகத்து அழகிற்கு மேலும் அழகாந்தன்மையுடைய பெரிய கண்களையுடைய வாசவதத்தை.

**வடிவேற் றடங்கண் வாசவதத்தை (4:5: 11)**

வடித்த வேல் போன்ற பெரிய கண்களையுடைய வாசவதத்தை.

**வடிமலர்த் தடங்கண் வாசவ தத்தையென் (4:7: 100)**

செந்தாமரை மலர் போன்ற பெரிய கண்களையுடைய வாசவதத்தை.

**பூவிரிந் தன்ன போதமர் தடங்கண் (4:15: 7)**

கருங்குவளை மலர் மலர்ந்தாற் போன்ற பெரிய விழிகளை உடையவள் விரிசிகை.

### ❖ நெடுங்கண்

**மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற (1:33: 123)**

மதர்த்த செவ்வரியோடிய தன் நெடிய கண்களையுடைய வாசவதத்தை.

**ஐயரி பரந்த வரிமலர் நெடுங்கண் (1:40: 218)**

அழகிய வரிபரவிய எழிலுடைய மலர்போன்ற தனது நெடிய மையுண்டு மதர்த்த கண்களையுடைய காரிகை.

**கயலேர் நெடுங்கண் கடும்பனி கால (1:40: 359)**

கயல்மீன் போன்ற நெடிய கண்கள் துளிப்பக் கலங்கி அந்நீர்ப்பெருக்கினைச் சினந்து நோக்கினாள் சேனை வணிகன் மகள்.

**அயலிடு நெடுங்க ணரும்பனி யுரைத்தர (1:44: 9)**

வேல் போன்ற தமது நெடிய கண்களிலே தடுத்தற்கரிய நீர்த்துளிகள் துளிப்ப மகளிர் நின்றனர்.

**வடுப்போழ்ந் தன்ன வாளரி நெடுங்கண் (1:46: 223)**

பேதை மகளிரின் வாள் போன்ற செவ்வரி படர்ந்த நெடிய கண்களில் கண்ணீர்த்துளிகள் வீழ்ந்தன.

**தாமரைச் செவ்விதழ்த் தலைக்கேழ் விரித்த**
**காமர் நெடுங்கண் (2:14: 62-63)**

செந்தாமரை மலரின் சிவந்த இதழ் போன்று சிறந்த நிறத்தைப் பரப்பிய அழகிய நெடியகண்ணையுடைய வாசவதத்தை.

**செருவேல் பழித்த சேயரி நெடுங்கண்** (2:15: 85)

வேலைப் பழிப்பனவும் சிவந்த வரி படர்ந்தனவும் ஆகிய நீண்ட கண்களை உடையவள் விரிசிகை.

**தலைப்பெருந் தாமரைச் செம்மல ரன்ன**
**நலத்தொடு புணர்ந்த விலக்கண நெடுங்கண்** (3:6: 52-53)

பெரிய சிவந்த மலரையொத்த அழகோடு கூடிய நல்லிலக்கணமுடைய உதயணனின் நெடிய கண்கள்.

**துணைபிரி மகளி ரிணைமலர் நெடுங்கண்** (3:7: 32)

தன்கணவரைப் பிரிந்துறையும் மகளிருடைய இணைந்த மலர் போன்ற நெடிய கண்கள்.

**அரிமலர் நெடுங்க ணகவயிற் போகாப்** (3:7: 84)

செவ்வரி பரந்த மலர் போன்ற நெடிய கண்களையுடைய பதுமாபதி.

**புலவியி னடுங்கிப் பூப்புரை நெடுங்கண்** (3:24: 171)

பட்டத்தேவி துன்பத்தால் நடுங்கி மலரையொத்த தன் நெடிய கண்கள் இமை மூடாமல் வருந்தினாள்.

**சிந்தரி நெடுங்கணெனன் னெஞ்சகங் கிழிப்பக்** (4:13: 70)

மானனீகையின் செவ்வரி சிதறிய நெடிய கண்ணாகிய வேல் என் நெஞ்சினைக் கிழித்தது என்கிறான் உதயணன்.

- **வேற்கண்**

**மாறடு வேற்கண் வாசவ தத்தை** (2:14: 38)

வேல் போன்ற கண்களையுடைய வாசவதத்தை.

**செங்கடை வேற்கண்** (3:21: 18)

சிவந்த கடையினையுடைய வேல் போன்ற கண்களை உடையவள் பதுமாபதி.

**நீல வேற்க ணிரைதொடிக் கீகெனப்** (4:11: 46)

கரிய வேல் போன்ற கண்ணை உடைய மகளிர்.

சங்க அகப்பாடல்கள் கண்ணினைக் குறித்துக் குறிப்பிடும் உண்கண், மழைக்கண் போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 6. மூக்கு

**நேர்கொடு சிவந்த வார்கொடி மூக்கின்** **(2:15: 83)**

நேர்மை கொண்டு சிவந்த நெடிய மூக்கினை உடையவள் விரிசிகை.

**வீழ்ந்தொளி திகழும் விழுக்கொடி மூக்கிற்** **(4:15: 8)**

நீண்டு ஒளிலினாற் நிகழ்கின்ற சிறந்த கொடி போன்ற மூக்கினை உடையவள் விரிசிகை என்று கூறப்படுகிறது.

## 7. காது

சங்க இலக்கியத்தில் காதினைக் கூற கத்தரிக்கோலின் கைப்பிடியைப் போன்ற காது என்று கூறுகின்றனா்.

பெருங்கதையில்,

**தாள்வாட் டன்ன தகையமை காதின்** **(2:15: 89)**

வள்ளையினது வாடிய தண்டினை ஒத்த அழகமைந்த செவியினை உடையவள் விரிசிகை.

**காலென வடிந்த காதணி** **(4:16: 26)**

நீல நெடிய மயிரினைக் கத்தரிக்கும் கருவியாகிய கத்தரிகையின் கால் போல வடிந்து தூங்கும் காதுகளில் அணியாக வைத்து புனையப்பட்டாள் விரிசிகை.

சங்க அகப்பாடல்கள் காது குறித்துக் குறிப்பிடுவதற்கு கத்தரிக்கோலின் கைப்பிடியைக் கூறுவது போன்று பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 8. வாய்

சங்க இலக்கியத்தில் வாய் பற்றிக் கூற பவளம் போன்ற வாய் என்று கூறுவதனைக் காணமுடிகின்றது. வாயிதழ்கள் பவழம், ஆம்பல் மலர், இலவு இதழென உவமிக்கப்பட்டுள்ளன.

பெருங்கதையில்,

**தேமொழித் துவர்வாய்** **(1:53: 56)**

இனிய மொழியினையும் பவளம் போன்ற சிவந்த வாயினையும் உடைய காஞ்சனமாலை.

**வையெயிற்றுத் துவர்வாய் வாசவ தத்தை தன்** **(1:54: 21)**

கூரிய பல்லொழுங்கினையும் பவழம் போன்ற வாயினையும் உடைய வாசவதத்தை.

**கவரிதழ்ச் செவ்வாய்க் காஞ்சன மாலைகை** **(1:56: 67)**

மலர் போன்று சிவந்த வாயினையுடைய காஞ்சனமாலை.

**இலங்கொளி வாட்கண் இன்னகைத் துவர்வாய்** **(2:2: 48)**

இனிய நகையினையுடைய பவழ வாயையும் உடைய வாசவதத்தை.

**முகைமலர்க் கோதை முறுவற் செவ்வாய்க்** **(2:9: 95)**

கோதையையும் முறுவலையும் செவ்வாயையும் உடைய வாசவதத்தை.

**பவழக் கடிகை பழித்த செவ்வாய்** **(2:15: 81)**

பவழத் துணுக்கிகைப் பழித்த சிவந்த வாயினையுடைய விரிசிகை.

**தீயுண விளியுந் தேமொழிச் செவ்வாய்க்** **(2:18: 92)**

பூசலிடாநின்ற இனியமொழியினையும் சிவந்த வாயினையும் உடைய காஞ்சனமாலை.

**பவழச் செவ்வாய் படிமையிற் றிறந்து** **(4:10: 148)**

பவழம் போன்று சிவந்த வாயைப் பாவைதிறப்பது போலத் திறந்தாள் பதுமை.

**கொவ்வைச் செவ்வாய்** **(4:12: 35)**

கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயினை உடைய பதுமாபதி.

**…குயின் மொழிச் செவ்வாய்**

**மானனீகை** **(4:13: 64-65)**

குயில் போன்ற இன்மொழியையும் சிவந்த வாயையும் உடைய மானனீகை.

சங்க அகப்பாடல்கள் வாய் குறித்துக் குறிப்பிடும் பவளவாய், செவ்வாய், போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 9. தோள்

தோள் என்ற சொல்லுக்கு கண் மற்றும் கண்ணிமை ஆகிய பொருள்களும் உண்டு. சங்க இலக்கியத்தில் **தோள் என்பதைக் குறிக்க பணைத்தோள், மூங்கிலைப் போன்ற தோள், மென்மையான தோள்** என்று கூறுவதனைக் காணமுடிகின்றது. தோள்களின் மென்மைக்கும் திரட்சிக்கும் பருமைக்கும் இவை உவமிக்கப்பட்டுள்ளன.

இதனைப் போன்று பெருங்கதையில்,

**பிதிர்சுணங் காகமொடு பெருந்தோ ணீவிக்** **(1:37: 163)**

தன் அடியில் வணங்கிய வாசவதத்தையை பிரச்சோதன மன்னன் தன்னிருகைகளாலும் தழுவி எடுத்து அவளது தேமல் படர்ந்த மெய்யினையும் பெரிய தோளையும் தடவியவனாய் தாயினிடம் செல்க என்றான்.

**பூளை மெல்லணைப் பொதியவிழ்ந் தன்ன**

**மென்தோள்** (1:40: 333-334)

பூளைப் பூவானாய மெல்லிய அணைகட்டவிழந்தாற் போன்ற மெல்லிய தோளினை உடைய தலைவி.

**நறுநுதற் பணைத்தோள் நங்கை** (2:8: 73)

நறிய நெற்றியினையும் மூங்கில் போன்ற தோளினையும் உடைய வாசவதத்தை.

**நெடுந்தோள் அரிவை நின்னைப் பெற்றதூஉம்** (2:11: 152)

நெடிய தோளையுடைய மிருகாபதி.

**வள்ளியம் பணைத்தோண் முள்ளெயிற் றமர்நகை**

(2:14: 56)

சங்கு வளையல் அணிந்த மூங்கில் போன்ற தோலினை உடைய புன்முறுவல் உடைய வாசவதத்தை.

**அணைபுரை மென்மை அமைபடு பணைத்தோள்** (2:15: 72)

பஞ்சணையை நிகர்த்த மென்மையுடையதும் அழகிய மூங்கில் போன்றதுமாகிய தோளினை உடைய விரிசிகை.

**வால்வளைப் பணைத்தோள் வாசவ தத்தாய்** (2:17: 113)

சங்க வளையலணிந்த மூங்கில் போன்ற தோளினை உடைய வாசவதத்தை.

**காம்பொசிந் தன்ன கவினை யாகிய**

**நலங்கிளர் தடந்தோள்.** (2:19: 130-131)

மூங்கில் அசைந்தாற் போன்ற அழகுடைய நலமிக்க பெரிய தோளினை உடைய வாசவதத்தை.

**ஆடமைத் தோளியை யணிந்து முறைபிறழாது** (3:22: 236)

மூங்கில் போன்ற தோளை உடைய அப்பதுமாபதியை ஒப்பனை செய்து முன்னோர் முறையினின்றும் பிறழாமல் திருமணத்திற்காக அலங்கரித்தனர்.

**புதுமலர்க் கோதைப் பூங்கொடிப் பணைத்தோட்**

**பதுமா நங்கை** **(3:22: 266- 267)**

புதிய மலர்மாலையையும் பொலிவுடைய தொடியினையும் பருத்த தோளையுமுடைய பதுமாபதி.

**வேயிருந் தடந்தோள்** **(4:12: 74)**

மூங்கில் போன்ற பருத்ததோளையுடைய காஞ்சனமாலை.

**காம்பேர் தோளி கையி னீக்கலும்** **(4:13: 224)**

மூங்கில் போன்ற தோளையுடைய வாசவதத்தை அவனைத் தன் கையால் தடுத்தாள்.

**பணைவேய் மென்றோட் பதுமா தேவி** **(5:4: 99)**

பருத்த மூங்கிலையொத்த மெல்லிய தோளையுடைய பதுமாபதி.

சங்க அகப்பாடல்கள் தோள் குறித்துக் குறிப்பிடும் பணைத்தோள், மென்தோள் போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 10. கை, விரல், நகம்

சங்க இலக்கியத்தில் மகளிரின் மெல்லிய விரல்களுக்குக் காந்தள் முகையும், நறவத்தின் இதழ்களும், ஞாழல் மலர்களும் உவமையாயின. விரல்களின் நகங்கள் முருக்கிதழுக்கும், கிளியின் மூக்கிற்கும் உவமைப்படுத்தப்பட்டன.

இதனைப் போன்று பெருங்கதையில்,

**காந்த ளழித்த கைம்முகிழ் கூப்பிக்** **(1:34: 239)**

காந்தல் மலரின் அழகைக் கெடுத்த தன் கைம்மலரைக் கூப்பி ஆசானை வணங்கினாள் வாசவதத்தை.

**வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்** **(2:3: 4)**

உதயணன் வாசவதத்தை திருமணச் சடங்கு கை பிடித்தலே ஆகலின், ‘வடிமலர்த்தடக்கை’ எனக் கையினைக் கூறினர்.

**பூந்துடுப் பன்ன முன்கையிற் பொலிந்து**

**கொழுமுகை குவித்த செழுமென் சிறுவிரல்**

**கிளிவாய் அன்ன ஒளிவாய் உகிரின்.** **(2:15: 74-76)**

காந்தள் துடுப்பை ஒத்த முன்கையினையும், அம்முன்கையின்கண் அக்காந்தளினது சிற்றரும்புகளை ஒத்த மெல்லிய சிறு விரல்களையும், கிளியின் அலகை ஒத்த ஒளி வாய்ந்த நகத்தினையும் உடையவள் விரிசிகை.

**தாமரைத் தடக்கையின் தாமம் பிணைஇ (2:16: 90)**

உதயணன் தடக்கையாலே மாலை புனைந்து காதலிக்கு அளித்தான்.

**முகைநலக் காந்தண் முகிழ்விர னோவத் (3:7: 50)**

காந்தளரும்பு போன்ற அழகுடைய தனது கூப்பிய விரல் வருந்தும்படி பொய்கையில் மலரும் செங்கழுநீர் மலர் ஒன்றைக் கையில் பற்றினாள் பதுமாபதி.

**கிள்ளை வாயி னன்ன வள்ளுகிர்**

**நுதிவிரல் சிவப்ப (4:7: 42-43)**

கிளியின் அலகு போன்ற கூர்த்த நகத்தினையுடைய தன் விரலின் நுனி சிவக்கும்படி யாழ் இசைத்தாள் வாசவதத்தை.

**காந்த ணறுமுகை கவற்று மெல்விரல் (4:7: 209)**

காந்தளினது நறிய அரும்பினைப் பழிக்கும் அழகிய மெல்லிய விரல்கள் கொண்ட கைகளையுடையவள் வாசவதத்தை.

**செந்தளிர் பொருவச் சிவந்த கையாற் (4:12: 221)**

செவ்விய தளிர்போலச் சிவந்த கைகளையுடையவள் மானனீகை.

சங்க இலக்கியத்தில் மகளிரின் மெல்லிய விரல்களுக்குக் காந்தள் முகையும், கிளியின் மூக்கிற்கும் உவமையாவது போன்று பெருங்கதையிலும் காணமுடிகிறது.

### 11. வயிறு

**பசலை பாய்ந்த திதலைத் தித்தி**

**அசைந்த அவ்வயிறு (1:43: 128-129)**

பொன்னிறம் பாய்ந்த தேமலாகிய திதலையையுடைய சுருங்கிய அழகிய வயிற்றினை உடைய மகளிர்.

**திதலை யவ்வயி றங்கையி னதுக்கி (1:44: 25)**

தேமல் படர்ந்த தமது அழகிய வயிற்றை அழகிய தம் கையாலே பிசைந்து கலங்கினர் மங்யைர்.

**வனப்புவீற் றிருந்து வாக்கமை அவ்வயிற்** (2:15: 69)

திருத்தமமைந்து அழகு குடியிருந்த வயிற்றினை உடையள் விரிசிகை என்று இவ்வாறு கொங்குவேளிர் உவமித்துக் கூறியுள்ளதைப் பெருங்கதையில் காணமுடிகின்றது.

## 12. கொப்பூழ்

கொப்பூழ் என்பதற்கு நாபி, கொப்புள், தொப்புள், உந்தி என வேறு பெயர்கள் உள்ளன. சங்க இலக்கியத்தில் மகளிரின் கொப்பூழ் நீர்ச்சுழிக்கு உவமிக்கப்பட்டுள்ளது.

இதனைப் போன்று பெருங்கதையில்,

**புனற்சுழி அலைத்துப் பொருந்திய கொப்பூழ்** (2:15: 68)

நீர்ச்சுழியை வருத்தி நூலிற்குப் பொருந்திய கொப்பூழினை உடையவள் விரிசிகை. சங்க இலக்கியத்தில் கொப்பூழ் நீர்ச்சுழிக்கு உவமையாவது போன்று பெருங்கதையிலும் காணமுடிகிறது.

## 13. இடை

சங்க இலக்கியத்தில் இடையினை, மின்னல் போன்ற இடை, கொடி போன்ற இடை, ஒடிந்து விடுமோ என்றாற் போன்ற மென்மையான இடை, இருக்கின்றது என்று அறிய முடியாத இடை என்றெல்லாம் கூறப்படுகின்றது.

இதனைப் போன்று பெருங்கதையில்,

**ஒசிவது போலுநின் னொசிநுசுப் புணரா** (1:40: 213)

தளர்கின்ற நின் இடையினியல்பினை உணராமல் நீராடினால் இடை முறிந்து போகும் என்று செவிலித்தாய் கடிந்துரைப்பதன் மூலம் அவள் இடையின் மென்மைத்தன்மை புரிகின்றது.

**இறுமென நுடங்குஞ் சிறுகொடி மருங்கின்** (1:40: 297)

கண்டோர் ஒடியும் என்று இரங்கும்படி துவளாநின்ற சிறியகொடி போன்ற இடையுடைய மகளிர்.

**புடைவீங் கிளமுலைப் பூண்பொறை யாற்றா**

**திடையே மாக்கும்.** (1:42: 126-127)

பருத்த இளைய முலைகளையும் அணிகலன்களையும் சுமக்கலாற்றாத நுண்ணிடை வருந்தக் கூடிய வாசவதத்தை.

**பிடியிடை யொடுங்குங் கொடியிடை மருங்கின்** **(1:48: 138)**

வாசவதத்தையின் கைப்பிடியினூடே அடங்குமளவு நுணுகிய கொடி போன்ற இடைக்குத் துன்பமுண்டாகாத அளவில் பிடியினைச் செலுத்துவாயாக என்று உதயணனிடம் காஞ்சனமாலை கூறுகின்றாள்.

**வணங்குகொடி மருங்குல் வாசவ தத்தையைப்** **(2:8: 48)**

வளைகின்ற பூங்கொடியை ஒத்த இடையை உடைய வாசவதத்தை.

**வஞ்சி மருங்குல் வாடுபு நுடங்க** **(2:9: 163)**

கொடி போன்ற சிற்றிடை வருந்தக் கூடிய வாசவதத்தை.

**வஞ்சி மருங்குல் வாசவ தத்தையைக்** **(2:13: 76)**

கொடி போன்ற இடையினையுடைய வாசவதத்தை.

**துடிநடு அன்ன துளங்கிய நுசுப்பின்**
**கொடியடர்ந் தொழுகிய கோல மருங்கின்** **(2:15: 66-67)**

உடுக்கையின் நடுவினை ஒத்த நுசுப்பினையும், பூங்கொடியை வென்று நீண்ட அழகிய இடையினையும் உடையவள் விரிசிகை.

**கொம்போ மருங்குல் கோமகற் குறுகித்** **(2:15: 109)**

பூங்கொம்பு போன்ற இடையினையுடைய விரிசிகை என்னும் குறுமகள்.

**ஒழுகுகொடி மருங்குல் ஒன்றா யொட்டி** **(2:16: 114)**

நெடிய பூங்கொடி போன்ற தன்னிடை மிகவும் பொருந்த உதயணகுமரன் மார்பின்கண் ஒடுங்கினாள் வாசவதத்தை.

**கோல வனமுலைக் கொடிபுரை மருங்குல்** **(2:17: 112)**

ஒப்பனையையும் அழகையும் உடைய முலையினையும், பூங்கொடியை ஒத்த அழகிய நுண்ணிடையினையும் உடையவள் வாசவதத்தை.

**நுண்சிறு மருங்கு னுகர்வின் சாயற்** **(3:1: 163)**

நுண்ணிய சிறிய இடையினை உடையவள் வாசவதத்தை.

**துடிதோங் கூறிய விடுகிய நடுவிற்குப்** **(3:5: 18)**

உடுக்கையைப் பழித்த நுண்ணிய இடைக்குச் சுமையாகிய மற முன்றானையை உடையவள் பதுமாபதி.

**ஆடுகொம் பன்ன வம்மென் மருங்குற்** (3:9: 31)

பூங்கொம்பு போன்ற அழகிய மெல்லிய இடையினை உடையவள் பதுமாபதி.

சங்க அகப்பாடல்கள் இடை குறித்துக் குறிப்பிடும் கொடியிடை, நுண்ணிடை போன்ற சொற்கள் பெருங்கதையிலும் காணப்படுகிறது.

## 14. தொடை

சங்க இலக்கியத்தில் மகளிரின் துடைகள் (குறங்கு) பிடியினது துதிக்கைக்கும், வாழை அடிமரத்திற்கும் உவமிக்கப்பட்டுள்ளது.

இதனைப் பெருங்கதையில்,

**செறிந்துவனப் பெதிர்ந்த தேன்பெய் காம்பின்**
**நிறங்கவின் பெற்ற காலமை குறங்கின்** (2:15: 62-63)

தேன் பெய்த மூங்கிலை ஒத்தனவும் ஆகிய கணைக்காலினையும், நிறத்தாலே அழகுற்ற அக்கால்களுக்குப் பொருந்திய துடைகளையும் உடையவள் விரிசிகை.

**கழனிக் கண்பின் காயெனத் திரண்ட**
**அழகணி சிறு துடை** (2:19: 187-188)

சம்பங்கதிர் போன்று திரண்டுள்ள அழகுடைய சிறிய துடைகளையுடையவள் வாசவதத்தை.

**நண்புவீற் றிருந்த நலத்தகு குறங்கினள்.** (3:5: 14)

கேண்மைப் பண்பு வீற்றிருந்த அழகினாலே தகுதி பெற்ற துடைகளையுடையவள் பதுமாபதி என்று இவ்வாறு உவமித்துக் கூறியுள்ளார் கொங்குவேளிர்.

## 15. கணைக்கால்

சங்க இலக்கியத்தில் கணைக்காலினைப் பற்றிக் கூறும் போது ஏனைய இலக்கணங்கள் திருந்தின கணைக்காலினை கொண்டவள் என்று கூறுவதனைக் காணமுடிகின்றது.

**திரட்டி யன்ன செல்வக் கணைக்கால்                    (2:15: 61)**

பரவிய சிற்றடிக்கேற்பத் திரட்டினாற் போன்றனவும், தேன் பெய்த மூங்கிலை ஒத்தனவும் ஆகிய கணைக்காலினை உடையவள் விரிசிகை என்று இவ்வாறு கொங்குவேளிர் உவமித்துக் கூறியுள்ளார்.

## பழமொழி உவமைகள்

பலரும் கூறும் வாழ்க்கை உண்மைகளும் அனுபவச் செய்திகளும் பழமொழியாக உருவாகியுள்ளன. அத்தகைய பழமொழிகள் ஒரு சில உவமைகளுடன் இடம்பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில், பால் நிலத்து உகுவதால் கறப்போருக்கும் பயன்இல்லை, கன்றுக்கும் பயன்படாது, வீணாகிப்போகும். இக்கருத்தினைக் கீழ்வரும் தொடரில் காணமுடிகின்றது.

**கன்றும் உண்ணாது கலத்தினும் படாது**

**நல்லான் தீம்பால் நிலத்துஉக் காஅங்கு.                (குறுந்.27: 1-2)**

'வெந்த புண்ணில் வேல் நுழைந்தது போல' என்னும் பழமொழி இப்பொழுதும் வழக்கத்தில் உள்ள பழமொழியாகும். இப்பழமொழி சங்க இலக்கிய உவமையில் வழங்கி வந்துள்ளது. இதனை,

**அழுந்துபடு விழுப்புண் அழும்புவாய் புலரா**

**எவ்வ நெஞ்சத்து ஏ஡்கு எறிந்தாங்கு.                (நற்றி.97: 1-2)**

என்ற நற்றிணைப் பாடல் வழி அறியலாம்.

'புலி வலையில் நரி அகப்படுதல் போல' என்பது பழமொழியாகும். பெரிய புலியைக் கொள்வதற்காக வைக்கப்பட்ட வலையில் வழியில் காரணமில்லாமல் செல்லும் குறுநரி அகப்பட்டது போல் என்னும் செய்தி கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது.

**இரும்புலி கொள்மார் நிறுத்த வலையுள் ஓர்**

**ஏதில் குறுநரி பட்டற்றால்.                (கலித்.65- 24-25)**

என்ற பாடலின் வழி இதனை அறியலாம்.

இதனைப் போன்று கொங்குவேளிர் பழமொழிகளை உவமையாகக் கூறி கதையினைக் கொண்டுபோகின்ற உத்தியினைக் கையாண்டுள்ளார்.

**நச்சுஉயிர்ப் பளைஇய நாகம் போல (1:35: 246)**

நச்சுகலந்த மூச்சினையுடைய பாம்புபோல அச்சங்கலந்த பெருமூச்சியினையும் பொருந்தாத நோக்கத்தினையும் உடையவளாய் இழிந்த சிறுமையுடைய மொழிகளைக் கூறினாள் நருமதை.

**புல்வாய் இனத்தில் புலிபுக்கு ஆங்கு (1:43: 75)**

மான் கூட்டத்தில் புலி புகுந்தாற் போன்று பிரச்சோதனன் படையுள் புகுந்து வெல்வேன் என்று யூகி உதயணனுக்கு வயந்தகன் மூலமாக செய்தி அனுப்பினான்.

**சுடுநா ராசஞ் செவிசெறித் தாங்கு (1:47: 238)**

வாசவதத்தை உதயணனோடு சென்று விட்ட செய்தியினை கோப்பெருந்தேவிக்கு தீயில் காய்ச்சிச் சுடுகின்ற இரும்புக்கம்பியைச் செவியில் செருகின்றதைப் போன்று பிரச்சோதனன் கூறினான்.

**கூற்றுவன் இமிழ்த்த பாசம் போல (1:47: 247-248)**

கூற்றுவனால் கட்டப்பட்ட கயிறு போன்று பெருந்துன்பம் கொண்டாள் கோப்பெருந்தேவி.

**வான்மதி இழந்த மீன்இனம் போல (1:47: 260)**

பிரச்சோதன மன்னன் தன் மகளாகிய வாசவதத்தையைக் காணப்பெறாமல் வானத்தே திங்களை இழந்துவிட்ட மீன்இனம் போன்று பொலிவிழந்து இருந்தான்.

**மாமலை தாங்கும் மதுகையள் போல (1:53: 135)**

பொன்னால் ஒப்பனை செய்யப்பட்ட கொல்லிப்பாவை போல்வளாகிய அவள் அணியும் மலர்மாலையும் சுமை என்று இளைப்பவள் உடன்போக்கின் போது பெரியமலையினைச் சுமக்கும் பேராற்றல் உடையவள் போன்று நடந்தாள் வாசவதத்தை.

**அரிமா வளைந்த நரிமாப் போல (1:56: 25)**

சிங்கத்தைச் சூழ்ந்து கொண்ட நரிகள் போன்று உதயணனைச் சூழ்ந்து கொண்டனர் வேட்டுவர்கள்.

**ஆளிகண்ட ஆனை இனம் போல (1:56: 44)**

அந்த வேடர்கள் யாளியைக் கண்ட யானைக்கூட்டம் போன்று உதயணனைக் கண்டு அஞ்சி அகன்றனர்.

**வலைநாண் இமிழ்ப்புஉண் வயமாப் போல (1:56: 54)**

வலைக் கயிற்றால் கட்டுண்ட சிங்கம் போல உதயணன் வேடர் விடும் கணைகளை நாணற்ற தன் வில்லாலே விலக்கினான்.

**பெயர்ச்சிஇல் உலகம் பெற்றான் போல (1:56: 172)**

உதயணன் உயிருடன் இருக்கும் செய்தியினைக் வயந்தகன் மூலமாகக் கேட்டுணர்ந்த இடபகன் மீள்தலில்லாத வீட்டுலகத்தை எய்தியவன் போன்று மகிழ்ச்சி அடைந்தான்.

**திங்களைச் சூழ்ந்த வெண்மீன் போல (1:56: 278-279)**

இடபகன் படைமறவர் வெற்றியாலுண்டான பேரழகோடு அழகிய இடமமைந்த வானத்தே திங்கள் மண்டிலத்தைச் சூழ்ந்த வெள்ளிய விண்மீன்கள் போன்று தன்னைச் சூழ்ந்து நிற்ப, வத்தவ நாட்டு மன்னன் உதயணகுமரன் பெருகிய தனது துன்பமெல்லாம் தன்னைக் கைவிட்டு அகன்றொழிய பொலிவுற்றுத் திகழ்ந்தான்.

**மதியம் பெற்ற வானகம் போல (1:57: 109)**

அந்தப் பெரியநகர் மேலும் கட்டவிழந்த மலர் மாலையணிந்த மன்னனையும் பெற்று இரவுப் பொழுதிலே (உரோகிணியோடு) நிறைதிங்களைப் பெற்ற வானம் போன்றதாயிற்று.

**நாவாய் கவிழ்ந்த நாய்கன் போல (2:9: 46)**

பிரச்சோதனன் மதயானையைத் தடுத்துத் தம்மை உய்யக் கொள்ளுவாரைக் காணப்பெறாமையாலே தன் மரக்கலத்தைக் கடலிலே கவிழ்த்துவிட்ட நாய்கன் ஓடம் (படகு) போலப் பெரிதும் கலங்கினான்.

**அள்ளல் பட்ட போதகம் போல (2:9: 100-101)**

வாசவதத்தையின் குளிர்ந்த மதர்ப்புடைய பார்வை தனது நெஞ்சத்தை ஈர்த்தலானே சேற்றில் அழுந்திய யானை போன்று அவ்விடத்தினின்றும் நீங்கவியலாத காதலையுடையவனாக இருந்தான் உதயணகுமரன்.

**பழந்தீர் மரவயின் பறவை போல (2:9: 112)**

வெற்றி உதயணகுமரனுக்கு இருத்தலை நமர்களுக்கு உணர்த்தி அவர்களைப் பழம்தீர்ந்துபோன மரத்தினின்று தன் இடத்திற்குப் போகும் வௌவால்களைப் போல

இரவில் நம்மூர்க்குப் போகச் செய்து பின்னர் யானும் வந்தேன் என்று முன்னாளில் நிகழந்தவற்றை எல்லாம் யூகி இடபகனுக்குக் கூறினான்.

**ஆட்டிடைப் பாயும் அரிமாப் போல (2:9: 160)**

திருமாலை ஒத்த உதயணகுமரன் ஆட்டுக்கூட்டத்தினிடையே பாயும் சிங்கம் போல அவ்வேடர் கூட்டத்திடையே பாய்தலை அஞ்சி அவ்வேடர் ஓடினர்.

**இடியேறு உண்ட நாகம் போல (2:10: 112)**

யூகி இறப்பு செய்தி கேட்ட உதயணன் மூர்ச்சித்து வீழ்ந்தமை கண்ட வாசவதத்தையும் இடியேறு கேட்ட நாகம் போலத் தனது சாயலும் அழகும் வாடும்படியும் கூந்தல் பொலிவிழந்து விரியாநிற்பவும் அவன் மார்பின்கண் சாய்ந்து மயங்கி மூர்ச்சையுற்றாள்.

**நித்திலம் பொதிந்த இப்பி போல (2:11: 48)**

முத்தினைக் கருக்கொண்ட இப்பி போல மிருகாபதி உதயணனைக் கருவில் சுமந்திருந்த போது சிம்புள் பறவை அவளைத் தூக்கிச்சென்றது. முத்து – உதயணன், இப்பி – மிருகாபதி.

**திருமகள் பரவும் ஒருமகன் போல (2:16: 68)**

ஒருவன் தன்னை விட்டகலும் திருமகளைப் புகழ்ந்து பரவுதல் போன்று வாசவதத்தையின் உள்ளம் நெகிழும்படி பணிமொழி பலபேசி ஊடல் தீர்க்க முயன்றான் உதயணன்.

**தனிக்கன்று உள்ளிய புனிற்று ஆப் போல (2:18: 10)**

தலைக்கன்றினை நினைந்து செல்லும் பசுவைப் போல விரைந்து செல்ல விரும்பினான் உதயணன்.

**கானத் தீயிடைக் கணமயில் போல (2:18: 86)**

காட்டுத்தீயிடைப் பட்ட மயில் போல அத்தீயினுள்ளே கிடந்துழன்று, ஏங்கி வாசவதத்தையைக் காணப் பெறாதவளாய் அழுது அரற்றி முற்றத்திலே விழுந்து புரண்டாள் காஞ்சனமாலை.

**ஆழ்விடத்து உதவும் அரும்புணை போல (3:1: 42)**

வெள்ளத்தில் ஆழ்ந்த இடத்திலே உதவுகின்ற தெப்பம் போல எனது தாழ்வுக் காலத்தே என்னைத் தாங்கி உய்யக் கொண்டும் தன் தொழிலாகிய சூழ்ச்சிப்

பொழுதில் மனத்தடுமாற்றமில்லாத நெஞ்சுரம் படைத்த மிக்க புகழையுடையவன் யூகி என்கிறான் உதயணன்.

**பள்ளம் படரும் பன்னீர் போல** (3:1: 89)

பள்ளம் கண்டுழிப் பாயும் வெள்ளம் போன்று உதயணன் இப்போதே இவ்விராசகிரிய நகரத்திற்குச் செல்வோம் என்று அவன் நெஞ்சம் அவ்வுபாயத்தைத் தேடியது.

**ஒளிகண் கூடிய நளிமதி போல** (3:3: 82)

ஒளியுடைய இடமாகிய கலைகள் முழுதும் நிறைவுபெற்ற குளிர்ந்த திங்கள் போல மறையோடு பொருந்திய பொறிகளைக் காக்கின்ற காவலமைந்த ஒழுக்கத்தோடுக் கூடிய பார்ப்பனுடைய தெருக்கள் இருந்தது.

**ஊக்க வேந்தன் ஆக்கம் போல** (3:5: 20)

ஆள்வினையின்கண் மடிதலின்றிப் பெரிதும் மனக்கிளர்ச்சியையுடைய மன்னனுடைய பொருட்பெருக்கம் போன்று பெருத்து வெப்பமுடையனவாகியது.

**கருமுகில் கிழிக்கும் கடுவளி போல** (3:17: 51)

கரிய முகில்களைச் சிதைத்தொழிக்கும் கடிய சூறைக்காற்றுப் போலப் பேராற்றல் மிக்க மன்னருடைய நட்பு.

**எல்லை இகந்த இருங்கடல் போல** (3:19: 208)

எல்லையற்ற பெருங்கடல் போல உதயணனின் படை அப்பகை மன்னருடைய பாசறையை நெருங்கியது.

**குளிர்நீர் நெடுங்கடல் கொண்ட அமிழ்தென** (3:24: 111)

குளிர்ந்த நெடிய பாற்கடலில் கொண்ட அமிழ்தத்தை ஒத்த அருட்பண்புடைய பொருள் பொதிந்த மொழிகளைக் கூறினான் உதயணன்.

**எரிவாய்ப் பட்ட பன்னற் பஞ்சி அன்ன** (3:24: 114)

நம்மை இகழும் நம் பகை மாந்தர் யாவரேயாயினும் தீயில் பட்ட பஞ்சி போல்வார் ஆகுக என்று தமது சினமாகிய நெருப்பின்கண் அப்பகைவன் அவர்தம் சுற்றத்தோடு சுடுவதாய் இருக்கும் என்கிறான் உதயணன்.

**இடுகளி யானை எதிர்கண் டாங்கு** (3:27: 145)

மதமூட்டப்பெற்ற ஒரு களிற்றி யானையை எதிர்கொண்ட மற்றொரு களிற்றி யானை போல.

**தீம்தேன் கலந்த தேன்பால் போல (4:7: 192)**

உதயணன் தழுவியவுடன் யூகி இனிய தேன் கலந்த இனிய பால் போலும் இனிதாகப் புன்னகை முகிழ்த்தான்.

**சூறை வளியிடைச் சுழல்இலை போல (4:12: 200)**

மானனீகை அடித்த பந்துகள் நிலத்தினும் விசும்பினுமாக உயர்ந்து சூறைக்காற்றினினால் சுழலுகின்ற இலைகள் போல மாறுமாறாக எழுந்து வீழவும் சுழன்று வானின்கண் ஏறுவனவும் இறங்குவனவும் நிற்பனவுமாய் சுழன்றன.

**மறுசுழிப் பட்ட நறுமலர் போல (4:13: 141)**

உதயணன் வாசவதத்தையின் நெற்றயில் எழுதிய கடிதத்தைக் கண்டு மானனீகை தன் உள்ளத்தே தோன்றிய வேட்கை மிகுதி தணிவதற்கு தோழி பெறாளாய் நீர்ச்சுழியில் அகப்பட்ட நறிய மலர் போன்று சுழன்ற தன் நெஞ்சினைத் தானே தேற்றினாள்.

**சூட்டுஇடைப் பட்ட கோள்புலி போல (5:3: 10)**

உதயணன் வாசவதத்தையோடு யானையின் மீது ஏறிக் கொண்டு நின்படை மறவரும் இன்றித் தனியாக வந்த போது காட்டில் கூட்டின்கண் அகப்பட்ட கொலைத்தொழிலையுடைய புலிபோல வேடர் கையிலே அகப்பட்டுக் கொண்ட துன்பமிக்க அந்த காலம் என்று இயக்கன் முன்நிகழ்வைக் கூறுகின்றான்.

**படுமுகில் மீமிசைப் பனிமதி போல (5:8: 79)**

பெரிய முகில் உச்சியில் தோன்றும் குளிர்ந்த திங்கள் போன்று நரவாணதத்தன் உலா வந்தான்.

இவ்வாறு பழமொழிகளை உவமித்துக் கூறும் உத்தியினை பெருங்கதையில் காணமுடிகின்றது.

## அழகு உவமைகள்

அழகினை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ள உவமைகளை அழகுவமை என்று கூறலாம்.

**மணிமுகிழ்த்து அன்ன மாதர் மென்முறை (1:33 116)**

மணியே முலையாக உருக்கொண்டாற் போன்ற அழகிய மெல்லிய முலையை உடையவள் வாசவதத்தை.

**பூவினுள் பிறந்த திருமகள் போன்று** (1:40: 229)

மலரிலே பிறந்த திருமகள் போலும் அவள் தன் தோழியர் தண்ணீராடத் தான் தன் கண்ணீராடினாள் நீராடக்கூடாதென்ற செவிலியால் கடியப்பட்ட ஒரு காரிகை.

**நீலத்து அன்ன கோலத் தடங்கண்** (1:47: 244)

வாசவதத்தை பிரிவினால் கோப்பெருந்தேவியின் நீலமலர் போன்ற அழகிய தனது பெரிய கண்களில் இருந்து முத்துப்போன்ற நீர்த்துளிகள் வீழ்ந்தன.

**வேனில் வள்ளியின் மேனி வாடி** (1:55: 12)

வேனிற் பருவத்து வெயிலாலே வாடிய பூங்கொடி போன்று தன் திருமேனிவாடி நெஞ்சம் வெம்புகின்றாள் வாசவதத்தை.

**தீயுறு தளிரின் மாநிறம் மழுங்க** (1:56: 115)

தீயிலிட்ட இளந்தளிர் போன்று வாசவதத்தையின் மாந்தளிர் நிறம் மழுங்கியது.

**திருமதி என்னத் திலக வாண்முகம்** (2:7 105)

திங்களை ஒத்த ஒளிமுகம் கொண்ட வாசவதத்தை.

**மணிப்பளிங்கு அன்ன மாசில் வனப்பு** (2:15: 53)

பளிங்கு போன்ற திருமேனி அழகினை உடையவள் விரிசிகை.

**ஆமை, கூன்புறம் பழித்த கோலப் புறஅடி** (2:15: 57-58)

ஆமையினது புறத்தினைப் பழியாநின்ற புறவடியினை உடையவள் விரிசிகை.

**துடிநடு அன்ன துளங்கிய நுசுப்பு** (2:15: 66)

உடுக்கையின் நடுப்பகுதியை ஒத்த இடையினை உடையவள் விரிசிகை.

**அணைபுரை மென்மை அமைபடு பணைத்தோள்** (2:15: 72)

பஞ்சணையை ஒத்த மென்மையுடையதும் அழகிய மூங்கில் போன்ற தோளினையும் உடையவள் விரிசிகை.

**காந்தள் பூந்துடுப்பு அன்ன முன்னை** (2:15: 73-74)

காந்தள் மலரினை ஒத்த முன்கையினை உடையவள் விரிசிகை.

**கூடுமதி அன்ன சேடணி திருமுகம்** (2:15: 79)

முழுமதி போன்ற அழகுடைய முகத்தை கொண்டவள் விரிசிகை.

**பவழக் கடிகை பழித்த செவ்வாய்** (2:15: 81)

பவழத் துணுக்கினைப் பழித்த சிவந்த வாயினை உடையவள் விரிசிகை.

**செருவேல் பழித்த சேயரி நெடுங்கண்** (2:15: 85)

வேலைப்பழிப்பனவும் சிவந்த வரிபடர்ந்தலையும் ஆகிய நீண்ட கண்களைக் கொண்டவள் விரிசிகை.

**தாமரை அன்ன தன் தகைமுகம்** (2:16: 15)

உதயணன் விரிசிகைக்கு மாலைச்சூட்ட அதுகண்ட வாசவதத்தையின் செந்தாமரை மலரினை ஒத்த அழகிய முகம் ஒளி மழுங்கியது.

**திருவில் அன்ன சென்றுஏந்து புருவம்** (2:16: 25)

அழகிய வானத்தின்கண் ஒளியுற வளைந்து கிடந்த இந்திரவில்லை ஒத்த நீண்டுயர்ந்த புருவம் நெரிப்போடு முறைமுறையே அசைத்தாள் வாசவதத்தை.

**சேற்றுஎழு தாமரை மலரில் செங்கண்** (2:18: 118)

தாமரைமலர் போன்ற செங்கண்ணை உடையவன் உதயணன்.

**அரவுப்பை அன்ன ஐதேந்து அல்குல்** (2:19: 147)

பாம்பின் படத்தை ஒத்த மெல்லிதாய் உயர்ந்த அல்குலினை உடையவள் வாசவதத்தை.

**ஆடுகொம்பு அன்ன அம்மென் மருங்குல்** (3:9: 31)

பதுமாபதி பூங்கொம்பு போன்ற அழகிய மெல்லிய இடையினை உடையவள்.

**கிள்ளை வாயின் அன்ன வள்உகிர்** (4:7: 42)

கிளியின் அலகு போன்ற கூர்த்த நகத்தினை உடைய விரலின் நுனி சிவக்கும்படி அவ்யாழினை இசைத்தாள் வாசவதத்தை.

**வாழைஅம் தாள் உறழ் குறங்கு** (4:11: 74)

வாழையினது அழகிய தண்டினையொத்த தொடையினை உடைய வாசவதத்தை.

**மாசில் தாமரை மலர்மகள் அனையோர்** (4:12: 6)

குற்றமற்ற செந்தாமரை மலரில் வாழுகின்ற திருமகளை ஒத்த அழகுடைய தோழிமார் ஆயிரத்தெண்மரை உதயணன் வாசவதத்தைக்கும் பதுமாபதிக்கும் கூறு செய்து கொடுத்தான்.

**நாடக மகளிரின் நன்கனம் உலாவி** (4:12: 119)

கூத்தியல் மகளிர் போல நன்கு உலாவி பந்தடித்தாள் ஆரியை.

**செந்தளிர் பொருவச் சிவந்த கை (4:12: 221)**

செம்மையுடைய இளந்தளிர் போன்ற சிவந்தகையினால் பந்துகளை அடித்தாள் மானனீகை.

கொங்குவேளிர் உவமையில் ஒன்றான அழகு உவமைகள் வழி தனது உத்தி திறத்தினை வெளிப்படுத்தி உள்ளார்.

## உணர்வு உவமைகள்

உணர்வுகளை உவமித்துக் கூறுவதனை உணர்வுவமை எனலாம். உணர்வுகளாலும் உணர்ச்சிகளாலும் உண்டாகும் சுமையை உள்ளக்குமுறலைக் குறைத்துக் கொள்வதற்கு ஒருவழி அவற்றை எவ்வாறேனும் வெளிப்படுத்துவதே ஆகும். அவ்வாறு படைத்துக் கொண்ட உத்திதான் உணர்வுவமை ஆகும்.

சங்க இலக்கியத்தில் இதனைக் காணமுடிகின்றது.

**இமை தீய்ப்பன்ன கண்ணீர். (குறுந்: 4:2)**

இமைகள் தீய்ந்து விடுவதைப் போலக் கண்ணீர் வெம்மை பெற்று விளங்குகிறது என்று கூறுவதன் வழி அறியலாம்.

இதனைப் போன்று உணர்வுகளை உவமையாகக் கூறுவதனைப் பெருங்கதையில்,

**தீயுறு வெண்ணெயின் உருகு நெஞ்சம் (1:33: 153)**

உதயணன் நிலை கண்டு தீயிற் பட்ட வெண்ணெய் போல நெஞ்சம் உருகிப் பிறர் அறியாமல் அவ்விடத்தில் மறைந்து நின்றாள் வாசவதத்தை.

**புனல்கொல் கரையின் நினைவனள் விம்மி (1:33: 197)**

மிக்க நீரால் குத்தியிடிக்கப்பட்ட கரைபோன்று நெஞ்சழிந்து படர்மெலிந்திரங்கி விம்மித் துயருற்றாள் வாசவதத்தை.

**தீமுகத்து இட்ட மெழுகில் தேம்பியும் (1:35: 52)**

வாசவதத்தையின் பேரழகினைத் தன் கண்வழி உள்ளத்தே பதித்துக் கொண்டு மிக்க காம நோயானது நாளுக்கு நாள் பெருகிக் கள்ளைப் பருகினார்க்கு அக்கள்வெறி உள்ளத்தே வெதுப்புவது போன்று வெதுப்புவதனால் நெருப்பிலிட்ட மெழுகு உருகுவது போன்று நெஞ்சம் உருகினான் உதயணன்.

**தாய்முகத்து யாத்த கன்றிற் புலம்பியும்** (1:35: 53)

தாய்ப் பசுவின் முன்னர் பாலுண்ணாதபடி கயிற்றால் கட்டப்பட்ட கன்று வருந்துவது போல வாசவதத்தையை எண்ணி வருந்தினான் உதயணன்.

**பற்றிடம் பெறாது பாம்பெனப் பதைப்ப** (1:46: 213)

ஏகவல்லி என்னும் ஒற்றைவடம் முழுமையுடைய கழற்சிக்காய் மாலையோடு தம் வயிற்றின்கண் வீழ்ந்து பொருந்தித் தங்குமிடம் பெறாமல் பாம்பு போன்று அசையாநின்றனர் கொட்டத்தாங்கிய பணிமகளிர்.

**வெருவுறு மஞ்ஞையின் தெருமந்து இகலி** (1:46: 214)

அஞ்சுதலுற்ற மயிலினம் போன்று மனஞ்சுழன்று மாறுபட்டு வாசவதத்தை உதயணனோடு சென்று விட்டதனை எண்ணிக் கதறியழுதனர் பணிமகளிர்.

**எரியுறு மெழுகின் உள்ளம் சோரா** (1:46: 249)

வாட்படை போன்ற கண்கள் துன்பக் கண்ணீர்த்துளியை முத்து முத்தாக உகுப்பத் தீயிலிட்ட மெழுகெனத் தமது உள்ளம் நெகிழ்ந்து துன்புற்றனர் கவரியேந்திய மகளிர்.

**செங்கேழ்த் துருத்தியின் அங்காந்து உயிர்த்து** (1:53: 26)

சிறந்த நிறமுடைய நீர்வீசும் துருத்தி போன்று குருதி சொரிந்து யானை வீழ்ந்தது.

**மத்துஉறு கடலில் தத்துறு நெஞ்சினர்** (1:56: 272)

ஏனைய வேடர் உதயணனை விட்டுவிட்டு மலையாகிய மத்தாற் கலக்குண்ட பாற்கடல் போன்று நெஞ்சம் கலங்கினர்.

**தாய்காண் கன்றில் காவலன் விரும்பி** (2:10: 7)

சாங்கியத்தாயைக்கண்ட உதயணன் தன் தாயைக் கண்ட கன்று போல விரும்பி வரவேற்றான்.

**செஞ்சுடர் வேலின் நெஞ்சிடம் போழ** (3:6: 16)

குயில்களின் புணர்ச்சிக் களிப்பு எஃகின் கூட்டமைந்த சிவந்த ஒளியையுடைய வேல் போன்று தனது நெஞ்சத்தை ஊடுருவிப் பிளத்தலாலே உதயணகுமரன் வாசவதத்தையை நினைத்து வருந்தினான்.

**ஊதுஉலை போல உள்அகம் கனற்ற (3:8: 5)**

உதயணகுமரனும் பாம்பின் படம் போன்று விரிந்த அல்குலையுடைய பதுமாபதியும் தம்முள் ஒருவரை ஒருவர் கண்ணுற்றமையாலே இருவருள்ளத்தும் விரவிய காமவேகம் ஒளியும் நிறமுமுடைய சிவந்த நெருப்பை உள்ளே நிரப்பி ஊதப்பட்ட உலைபோன்று அகஞ்சூடாக இருத்தது.

**மகக்காண் தாயின் மிகப்பெரிது விதும்பி (4:7: 40)**

கோடவதி என்னும் தெய்வ யாழினது பெருமை மிக்க அழகினைக் கண்டு தன் குழந்தையைக் காணுகின்ற தாயைப் போல மிகவும் விரைந்து கையிலெடுத்தாள் வாசவதத்தை.

**பருகுவனன் போலப் பல்லூழ் முயங்கி (4:8: 108)**

உதயணன் வாசவதத்தையை அவளைப் பருகுவான் போல நோக்கிப் பலகாலும் தழுவினான்.

உணர்வுவமைகள் பற்றி கொங்குவேளிர் இவ்வாறு குறிப்பிடுகின்றார்.

காப்பியமாந்தர், மாந்தரின் உடல் உறுப்புகள் பற்றிக் கவிஞர் (கொங்குவேளிர்) கூறுகையில் அடைமொழிகொடுத்தே கூறுகிறார். இவ்வாறு அடைப்பெயரோடு ஒருவரை அல்லது ஒன்றனைக் கூறுவது சங்க அகப்பாடல்களில் காணப்படுகிற பொதுமரபாகும். அம்மரபை, பெருங்கதை ஆசிரியரும் வழுவாது பின்பற்றியுள்ளார் என்பதும் சங்க அக இலக்கியங்களைக் கற்றதன் தாக்கம் காரணமாக அவர் இவ்வாறு எழுதியிருக்கிறார் என்பதும் இவ்விடத்தில் எண்ணிப்பார்க்கத் தக்கதாய் அமைகின்றன. கருத்து விளக்கத்திற்கு உதவும் உவமைகள் சங்க அகப் பாடல்களிலும் பெருங்கதையிலும் பெருமளவு ஒப்புமை உடையனவாக உள்ளன என்பதும் குறிக்கத்தக்க ஒன்றாகும்.

## 16. வருணனை உத்தி

**வருணனை**

காப்பியமாகிய உடலில் எலும்புக் கூடாய் விளங்குவது கதைக்கரு. கதை நிகழ்ச்சிகள் எலும்புக் கூட்டைச் சூழ்ந்துள்ள தசை போல்வன. வருணனை என்பதோ, தசைகள் உயிர்ப்புடன் விளங்கக் குருதியோட்டத்தைக் கொண்டு செலுத்தும் நரம்புத் தொகுதி. போதிய அளவு குருதியோட்டம் இல்லாதவன்

வலிமையோடு இருக்க முடியாது. அது போன்றே வருணனை இல்லாத காப்பியமும் சிறப்படைய முடியாது என்று வருணனை பற்றி சிலம்பொலி செல்லப்பன் கூறுகின்றார்.

அவர் பெருங்கதையில் உள்ள வருணனைப் பற்றி,

“கொங்குவேளிர் மாக்கதையில் உள்ள வருணனை அனைத்தும் உள்ளத்தைக் கொள்ளை கொள்வன. கதை முழுவதும் அரிய வருணனைகள் இடம் பெற்றுள்ளன. கொங்குவேளிரின் வருணனைகள் தனித்தன்மை வாய்ந்தவை. பாடல் அடிகள், வருணிக்கப் புகும் காட்சியை மனக்கண் முன்னர் ஓவியப்படுத்திக் காட்டுவன; உயிர்ப்புள்ளன; எவரும் எண்ணாத புதிய கற்பனைகளாய்ப் பளிச்சிடுவன. அவை அனைத்தும் உலகியலுக்குப் பொருந்தியன. இயற்கை இறந்த நிகழ்ச்சிகளாக எதுவுமே இல்லை”[17] என்று புகழ்ந்துரைப்பதனைக் காணலாம்.

இலக்கியம் முதல் காப்பியம் வரை எல்லாவற்றிற்கும் வருணனை என்பது இன்றியமையாத ஒன்றாக உள்ளது. நானிலம், மாலைக்காலம், விடியற்காலம், சோலை, நகர எழில், நாட்டு வளம், ஆறு, மலை, விழா போன்றவற்றைக் கூறி வருணனையைப் புலவர் சுவைபடக் கூறியுள்ளார்.

பெருங்கதையில் அகமரபுச் செய்யுளின் ஊடே அமையும் வருணனைகளைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கூறலாம்.

1. **நில வருணனை**

தொல்காப்பியம் கடவுளர் விரும்பும் நிலங்களை,

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**செல்லிய முறையான் சொல்லவும் படுமே.**

**(தொல்.பொருள்.அகத்.நூ.5)**

என்று குறிப்பிட்டுள்ளது. பெருங்கதை ஆசிரியர் நெய்தல் தவிர்த்த ஏனைய குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை நானிலங்களைப் பற்றிக் கூறியுள்ளார்.

## குறிஞ்சி நிலம்

குறவர்கள் வெட்டிப்போட்ட அழகிய குளிர்ந்த அகில்மரம், சந்தனத்தழை, கருவிளங்கொடி, தேற்றாமரம், திமிசு மரம், வசம்பு மரம், கோட்ட மரம் ஆகியவற்றை அருவிகள் புரட்டுக்கொண்டு சென்றதனை,

**குறவர் குறைத்த கொய்புன மருங்கின்**
**அந்தண் ணகிலுஞ் சந்தனக் குழையும்**
**கருவிளங் கோடுங் காழிருள் வீடும்**
**.......**
**பயம் பும் கோட்டமுங். (1:41:31-35)**

என்று பெருங்கதையின் வழி அறியமுடிகின்றது.

குறிஞ்சி நிலம் மலையும் மலை சார்ந்த இடமுமாகும். குறிஞ்சி நிலக் கடவுள் முருகன். அங்குள்ள மலைச் சாரலில் அருவிகள் பாய்ந்தன. பருத்தி விதைத்திருந்த பைம்புனங்கள் இருந்தன. குறவர் பரண்மிசையிருந்து தினைக் காவல் செய்தனர். இரவில் கொடிய காட்டு விலங்கினை விரட்டுவதற்கு சந்தனம், அகில் முதலிய கட்டைகளை எரித்துத் தீயுண்டாக்கினர். அந்த ஒளியில் மான்கள் துயின்றன என்று கொங்குவேளிர் வருணித்துள்ளார். இதனை,

**அருவி யறா அ வாகலி னயல**
**பருவி வித்திய பைந்தாட் புனந்தோ**
**றீரமில் குறவ ரிதண்மிசைப் பொத்திய**
**ஆரத் துணியொடு காரகில் கழூமிய**
**கொள்ளிக் கூரெரி வெள்ளி விளக்கிற்**
**கவரிமா னேறு கண்படை கொள்ளும். (1:50:15-20)**

என்ற பாடலின் வழி விளக்குகின்றார்.

தகர மரங்கள் அழகுற்றுத் திகழ்ந்தன. நறைக்கொடி, நாகமரம், வெட்டி வேர், விலாமிச்சை வேர், பலாமரம், மாமரம், சுரபுன்னை மரம், வாழை, ஆசினிப் பலா மரம், செண்பக மரம், அசோக மரம், பிரம்பு, குறிஞ்சி மரம், வேங்கை மரம், ஆச்சா

மரம், பிரம்பு, வள்ளிக்கொடி, மரல், வெண்வசம்பு, காந்தள், கோட்ட மரம், பனிச்சைமரம், திலகமரம், வெதிர் மூங்கில், வேய் மூங்கில், காட்டு மல்லி, செங்கருங்காலி மரம், சந்தன மரம், அகில் மரம், இலவங்க மரம், இருப்பை மரம் ஆகிய மரங்கள் நிறைந்திருந்தன. இதனை,

**தகரங் கவினிய தண்வரைச் சாரல்**
**நறையு நாகமு முறையிரு வேரியும்**
**வருக்கையு மாவும் வழையும் வாழையும்**
**அருப்படை நிவந்த வாசினி மரமும்**
**...............**
**ஆரமுஞ் சாந்து மகிலுந் தாமலமும்**
**ஏரில லங்கமு மேலமு யிருப்பையும்**
**............. பாய்தலிற் கிழிந்து.** (1:50:21-34)

என்ற பாடலடிகள் வழி கொங்குவேளிற் குறிப்பிடுகின்றார்.

அருவிகள் முழக்கத்தையும் மத்தள இசைக்கு ஏற்ப மந்திகள் பாட கடுவன் குரவைக் கூத்தாடிய வருணனையை,

**அருவி அரற்றிசை அணிமுழவாகக்**
**கடுவிரல் மந்தி பாடக் கடுவன்**
**குரவை அயரும் குன்றச்சாரல்.** (2:16:81-83)

கொங்குவேளிர் இப்பாடலின் வழி கூறுகின்றார்.

சுனையில் பல வகையான மலர்கள் பூத்திருப்பதைக் கொங்குவேளிர்,

**அணிகலப் பேழை அகந்திறந் தன்ன**
**நறுமலர் அணிந்த குறுவாய்க் குண்டுகளை.** (2:14:10-11)

என்று கூறுகின்றார்.

யானை செல்லும் அழகினை வேளிர்,

**வீசுதல் ஓவா விழுத்தகு தடக்கை**
**இருங்களிற்று இனநிரை.** (2:12:147-148)

என்று வருணிக்கின்றார்.

அந்நில மக்களின் பொழுதுபோக்கினை வருணிக்கின்றார் கொங்குவேளிர். மலையில் வாழ்ந்த மகளிர் சுனைப்பூக் கொய்தும் கோட்டுப் பூச்சூடியும், கொடிப் பூப்பறித்தும், மலர்களைக் கொண்டு மாலை தொடுத்தும், தளிர்களைக் கொண்டு கண்ணி தொடுத்தும் மலைவளத்தைப் புகழ்ந்து பாராட்டியும், குரவைக் கூத்தாடியும், மயிற் கூட்டத்தின் அழகினையும், ஆடலையும் கண்டு களித்தும், கிளிகளின் மழலை மொழி கேட்டு மகிழ்ந்தும் பொழுதுபோக்கினர். அதனை,

**சுனைப் பூக்குற்றுஞ் சுள்ளி சூடியும்**
**சினைப்பூ அணிந்துங் கொடிப் பூக்கொய்தும்**
**மகிழின் வட்ட வார் மலர் தொகுத்தம்**
**………. கண்ணி கட்டியும்**
**மாலை தொடுத்து மலைவளம் புகழ்ந்தும்**
**கோலக் குறிஞ்சிக் குரவை ஆடியும்**
**மணிமயிற் பீலி மாமயிற் றொழுதி**
**அணிநலம் நோக்கியும் ஆடல்கண்டு வந்தும்**
**மாதர் பைங்கிளி மழலை கேட்டும். (2:12:129-138)**

என்னும் பாடல் வரிகளினால் கண்டுணரலாம்.

## முல்லை நிலம்

காடும் காடு சார்ந்த பகுதியான முல்லை நிலத்தினை வருணித்துள்ளார் கொங்குவேளிர். கார் காலத்தில் முல்லைக் கொடிகள் பூத்தன. குரா மரமும், தளவும், குருத்த மரமும் பாம்பின் எயிறு போன்ற மலர்களைத் தோற்றுவித்தன. பாம்பின் படம்போல் காந்தள் மலர்ந்தது. வண்டுகள் மலர்கள் மலரும் செவ்வியறிந்து, அவற்றில் படிந்து தேனுண்டு மகிழ்ந்து இசை பாடின. யானைகளின் நீண்ட கைகளை ஓரிடத்தே தொகுத்து வைத்தாற்போல வளைந்து கதிரையுடைய தினைகள் விளைந்து சாய்ந்தன. நுனி நீண்ட சோளமும், கவர்த்த கதிரையுடைய வரகும், கார்ப்பருவத்தே தளிர்க்கும் எள்ளும், சிவந்த மலரையுடைய அவரையும் இருந்தன. காய் மிகுந்த குலைகளையுடைய பயறும், உளுந்தும், கொள்ளும், கொழுந்து மிக்குத் தோன்றும் கடலையும், துவரையும், தோரையும் ஆகியவையும் விளைந்தன. அதனை,

**சிறுகொடி யூழூழ் பரப்பி மற்றவர்**

**முறுவ லரும்பிய முல்லை யயல**

**குரவுந் தளவுங் குருத்துங் கோடலும்**

**அரவு கொண் டரும்ப வறுகால் வண்டினம்**

**அவிழ்பதம் பார்த்து மகிழ்வன முரல**

**…………**

**கவைக் கதிர் வரகும் கார்பயி லெள்ளும்**

**புகர்ப்பூ வவரையும் பொங்குகுலைப் பயறும்**

**உழுந்துங் கொள்ளுந் கொழுந்துபடு சணாயும்**

**தோரையுந் துவரையு மாயவும் பிறவும்**

**அடக்க லாகா விடற்கரு விளையுட்.** (1:49:96-109)

இப்பாடலின் வழி அறிந்துகொள்ளலாம்.

மூங்கிற் புதரின் அருகே மரையாவும், இளம் பெண்மானும் வெள்ளிய மலரையுடைய முகண்டையின் பசிய குழைகளை மேய்ந்து நின்றன. அவற்றின் மடியிலிருந்து ஒழுகிய பால் தரையைச் சேறாக்கியது. கொன்றை மரங்களும் பிடா மரங்களும் ஒன்றோடொன்று பின்னிக் கிடந்தன. முல்லைக் கானத்தில் முறுக்கிய கொம்புகளையுடைய கலைமான் பிணைமானைத் தழுவிப் பகற் கொழுதில் துயின்றது. துயிலெழுந்ததும் அங்கு மேய்ந்த ஆட்டினத்தோடு சேர்ந்து விளையாடியது. இதனை,

**வரையி னருகா மரையா மடப்பிணை**

**செருத்தற் றீம்பால் செதும்பு படப் பிலிற்றி**

**வெண்பூ முகண்டைப் பைங்குழை மேயச்**

**சிறுபிணை தழீஇய திரிமருப் பிரலை**

**செறியிலைக் காயா சிறு புறத் துறைப்பத்**

**தடவுநிலைக் கொன்றையொடு பிடவுதலைப் பிணங்கிய**

**………**

**புல்லுத ளினத்தொடு புகன்று விளையாடும்.** (1:49:111-119)

என்று கொங்குவேளிர் அழகுற வருணித்துள்ளார்.

முல்லை நில மக்கள் கோவலர் எனப்பட்டனர். அவர்கள் பசுக்களை வளர்த்து அவை தந்த பால், தயிர், வெண்ணெய் முதலியவற்றினால் வாழ்ந்து வந்தனர். அவர்களது வாழ்வே பசுக்களால் பெருமையுற்றது என்பதனை,

**பல்லாப் படுநிரைப் பயன்படு வாழ்க்கைக்**

**கொல்லைப் பெருங்குடிக் கோவலர் குழீஇய**

**முல்லைப் பெருந்திணை. (1:49:123-125)**

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

## மருத நிலம்

மருதநிலம் நீர் வளமுள்ள வளமான நிலமாகும். அத்தகைய வளம் மிக்க வயல்களில் நீர்ப்பூக்கள் பூத்துக்கிடந்தன. உழவர் பெருமக்களின் ஆர்ப்பிசை கேட்டு அஞ்சிய எருமைகள் வயலிடையே நுழைந்தன. அவற்றின் மடியிலிருந்து பால் சிந்தியது. பால் தம்மேல் படாதிருக்க அங்கிருந்த அன்னக் குஞ்சுகளும் நாரைக் குஞ்சுகளும் ஒதுங்கி அகன்றன. பாத்திகளில் கரும்புகள் உயர்ந்து வளர்ந்திருந்தன. அவற்றின் வளவிய மடல்களில் தொடுக்கப்பட்ட தேனடை கிழிந்து தேன் துளிகள் கீழேயிருந்த செந்தாமரை இதழ்களில் சிந்தின. அக்காட்சி தீயை வளர்க்க நெய் சொரிந்தது போலிருந்தது. அதனை,

**அறையுறு கரும்பின் அணிமடற் றொடுத்த**

**நிறையுறு தீந்தேன் நெய்த தொடை முதிர்வை**

**…………..**

**செம்மலர் அங்கட் தீயெடுப் பவைபோல்**

**உண்ணெகிழ்ந் துறைக்கும் கண்ணகல் புறவில். (1:48:146-150)**

என்ற பாடலின் மூலம் வருணித்துக் காட்டுகின்றார் கொங்குவேளிர்.

உழவர் ஒலியும், களத்தில் வேலை செய்வோர் ஒலியும், களையெடுக்கும் கடைசியர் ஒலியும், தண்ணுமை முழக்கமும், தடாரி முழக்கமும், மண முழவினையுடைய மறவர் ஆரவாரமும், மடைகளைத் திருத்தும் மள்ளர் ஆர்ப்பொலியும் ஆற்றின் ஒலியோடு அவ் ஒலிகள் இயைந்து பெருமுழக்கமாகி ஊர்கள் தோறும் ஒலித்ததை,

**உழவர் ரொலியுங் களமலர் கம்பலும்**

**வளவய லிடையிடைக் களைகளை கடைசியர்**

**மதலைக் கிளியின் மழலைப் பாடலும்**

**தண்ணுமை யொலியுந் தடாரிக் கம்பலும்**

**மண்ணமை முழவின் வயவரார்ப்பவும்**

**……………**

**வயற்புலச் சிறூ ரயற்புலத் தணுகி.** (1:48:161-169)

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

வயல்களில் பூங்கொடிகள் பிணங்கிக் கிடந்தன. நீரில் உலாவிய ஒரு கன்னிவாளை மீனின்மேல் நண்டின் நகம் பட்டது. அதனால் பிறிதொருவன் கைபட்டால் அஞ்சி நடுங்கும் கன்னிபோல் நண்டின் நகம் பட்டதால் வாளை நாணமுற்று இரையுண்ணாமல் ஒடுங்கிக் கிடந்தது. அவ்வருணனையை,

**வரியகட் டலவன் வள்ளுகி ருற்றெனக்**

**கன்னிவாளை யுண்ணா தொடுங்கும்.** (1:58:100-101)

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

குளத்து நீரில் மூழ்கிக் கிடந்த எருமைகள் வயலில் தொழில் செய்த உழவர் எழுப்பிய ஆரவாரத்தினால் எழுந்தன. கரும்பின் மடல்களை முறுக்கியும், தாமரை மலர்களை உழக்கியும், ஆம்பல் இலைகளை அழித்தும், குவளை மலர்களைக் குழையச் செய்தும், தவளைகளும் தண்ணீரும் கலங்கும் படியாகவும் பாய்ந்து சென்று, தோட்டத்தே கமுகின் கொழுவிய நிழலில் படுத்து இளைப்பாறின. பின் தொழுவம் வந்து சேர்ந்தன. அவ்வருணனையை,

**வயல் கொள் வினைஞர் கம்பலை வெரீஇக்**

**கயமூழ் கெருமை கறைவளர் கரும்பின்**

**…………..**

**குவளைப் பன்மலர் குழைத்துத் தவளைத்**

**தண்குறை கலங்கப் போகி.** (3:2:15-22)

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

**பாலை நிலம்**

முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்னும் நிலம் உருவாயிற்று. அந்நிலத்தில் வெற்றித் தெய்வமாகிய கொற்றவைக்கோயில் இருந்தது. பாலை நில மறவர்கள் அவ்வழிச்செல்வோரை ஆறலைத்துக் கொள்ளையிட்டனர். பகைவர்களிடமிருந்த பசுக்களைக் கைப்பற்றினர். துளைத்த கற்றூண்களைச் சுற்றி நட்டு அத்துளைகளிலே மூங்கிலைச் செலுத்தி வளைத்திருந்த பட்டியில் பசுக்களை உட்புகுத்தி அடைத்தனர். ஆறலைத்த நிலையில் தம்மால் கொல்லப்பட்ட பிணங்களைக் குழிகளில் இட்டு நிரம்பச் செய்தனர். தலைகளை மரப்பொருந்துகளில் திணித்து மறைத்தனர். கொடிய பாலை நில ஆறலைக் கள்வர்களின் செயல்பாட்டை கொங்குவேளிர் வருணித்துள்ளதை,

**கலைகா முறுவி நிலைகா முற்ற**

**கற்சிறைக் கோட்டத்து நற்சிறை யொடுங்கி**

**………..**

**ஆளிடு பதுக்கையு மரில்பிணங் கடுக்கமும்**

**தாளிடு குழியுந் தலைகரந் தியாத்த.** **(1:52:24-29)**

என்ற வரிகளின் மூலமாக அறியலாம்.

பாழிடமாகிய களர் நிலம் பாலை நிலமாகும். நீரில்லா வழிகளையுடையது. சமமில்லாத நிலமாக இருக்கும். ஊர்களற்ற வறண்ட காடுகளைக் கொண்டுள்ளது. நீர்ப்பரப்பற்ற ஓரிரு சுனைகளையுடையது. பரற்கற்கள் மிக்கச் சிறு குன்றுகளையுடையது. சென்று முடிவறியாத குழைவழிகளையுடையது என்று கொங்குவேளிர் வருணித்துள்ளதை,

**புல்லும் பொள்ளலும் வெள்ளிடைக் களகும்**

**நீரில் யாறு நிரம்பா நிலனும்**

**ஊரில் காடு மூழடி முட்டமும்**

**வறுஞ்சுனைப் பரவையுங் குறும்பரற் குன்றமும்**

**…………….**

**தட்பக் காலத்தும் வெப்ப மானா.** **(1:52:30-36)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

பாலை நிலத்தில் ஓமை, உழிஞ்சல், உலவை, உகாய், கடு, தான்றி, தொடரி, நாகம், அரசு, ஆரம், ஆத்தி, இரவு, இண்டு, குரா, கோங்கம், கள்ளி, கடம்பு, முள்ளி, முள்ளெடுக்கு, தணக்கு, பலாசு, ஞெமை, ஈங்கை, இலவம், நெல்லி, வாகை போன்ற மரங்கள் வளர்ந்திருந்தன. பாலை நிலமானதால் நீரின்றி அம்மரங்கள் வற்றலாய் ஒடுங்கி இருந்தன. அவற்றை,

**தோமையு முழிஞ்சிலு முலவையு முகாயும்**

**கடுவுந் தான்றியுங் கொடுமுட் டொடரியும்**

**அரசு மரசு மாரு மாத்தியும்**

**……..**

**வாகையும் பிறவும்.** (1:52:37-44)

என வருணனை செய்துள்ளார் கொங்குவேளிர்.

சிவந்த கால்களையும் வெண்ணிற சிறகுகளையுமுடைய சேவற் புறா பருக்கைக் கற்களை உண்டு வயிற்றை நிரப்பியது. பேடைப்புறாவோடு கூடி விளையாட விரும்பி கணுக்கள் பொறிந்த கள்ளி மரத்தின் கவர்ந்த கிளையில் ஏறியிருந்தது. அப்பெடைகளைக் கூவி அழைத்த ஓசை மிகத் தொலைவினுள்ள இடங்களிலும் ஒலித்தது. இதனை,

**நுண்பொறிப் புறவின் செங்காற் சேவல்**

**வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி**

**வன்பர லார்ந்த வயிற்ற வாகிக்**

**கண்பொரி கள்ளிக் கவர்சினை யேறிக்**

**கூப்பிடு குரலிசை சேட்புலத் திசைப்பவும்.** (1:52:46-50)

என்ற பாடல் வரிகளினால் அறியலாம்.

பாலைநில மக்கள் வாழ்கின்ற சிற்றூர்களுக்குச் செல்லும் வழிகள் பரற்கற்கள் குவிந்ததாய் வெப்பம் மிகுந்து காணப்பட்டன. அவ்வழியைப் பகலிற் கடத்தல் அரிது என்பதனை,

**பாவை தழீஇய பயன்று பெருவழி**

**நீடிரு ளல்லது நீந்துத லரிது.** (1:52:80-81)

என்ற வரிகளினால் அறியலாம்.

**ஆறு வருணனை**

ஆறானது, விந்திய மலையினைப் பிளந்து கல்லினுள் தோன்றிய ஒளி மணிகளையும், மண்ணில் தோன்றிய பொன்னினையும், மூங்கிலில் தோன்றிய முத்தையும், நெல்லையும், யானையினது மருப்புகளில் தோன்றிய முத்தினையும், மலையில் தோன்றிய வயிரத்தையும் அள்ளிவந்தது. மேலும், மாங்கனிகள், பலாப்பழம், வாழைத்தாறு, தேன் இறால் ஆகியவற்றையினையும் வாரி வந்தது. குறவர்கள் மலைச்சாரலில் குவித்திருந்த மலைநெல், தினைக்குவியல், இஞ்சி, கூவைக்கிழங்கு, நாகப்பூ, தேக்குமரம், அகில் மரம், குங்குமப்பூ, மிளகு, மஞ்சள், திப்பிலி, நெல்லிக்காய், கொம்பரக்கு ஆகியவற்றையும் வாரி கொண்டு வந்தது. மலையில் விளைந்த இப்பொருள்களை எல்லாம் வாரிக்கொண்டு போய் ஊர்களில் வாழும் மக்களுக்கு அவரவர் இருப்பிடத்திலேயே கொண்டு போய் கொடுக்கின்ற வணிகரைப்போல, கொண்டு சேர்த்தது. இதனை,

**விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து**
**கல்லுட் பிறந்த கழுவாக் கதிர்மணி**
**மண்ணுட் பிறந்த மாசறு பசும்பொன்**
**வேயுட் பிறந்த வாய்கதிர் முத்தம்**
**வெதிரிற் பிறந்த பொதியவி ழுருநெல்**
**மருப்பினுட் பிறந்த மண்ணா முத்தம்**
**வரையிற் பிறந்த வயிரமொடு வரன்றி**
**நுரையுட் பிறந்த நொ.........லாடை**
**முடந்தாட் பலவின் குடம்புரை யமிழ்தமும்**
**................**
**பன்மலைப் பிறந்த தண்ணிற வருவிய**
**அமலை யருங்கல மடக்குபு தழீஇத்**
**தன்னிற் கூட்டிய தானைச் செல்வமொ**
**டிருகரை மருங்கினும் பெருகுபு தழீஇ.** **(1:51: 8-38)**

என்ற பாடலின் வழி அறியமுடிகின்றது.

குருக்கத்திக் கொடியையும், மல்லிகைக் கொடியையும் வருத்தியும் ஞாழல் மரத்தையும் புன்னை மரத்தையும் சாய்த்தும், குருந்த மரத்தையும் கொன்றை மரத்தையும் வளைத்தும், தடா மரத்தையும் பிடா மரத்தையும் தரையில் படும்படி வீழ்த்தியும், முள்ளி மரத்தையும் மருத மரத்தையும் அழியும் படிச் சாய்த்தும், மாமரத்தையும் மருத மரத்தையும் வேறொடு பிடுங்கியும், அனிச்சமரத்தையும் அசோக மரத்தையும் பனிச்சை மரமும் பயின் மரமும் இதுபோன்ற பல மரங்களையும் சாயும்படி செய்து ஆறானது ஓடியது. இதனை,

**அணிக்குருக் கத்தியு மதிரலு மனுக்கி**

**மணிச்சையு மயிலையு மௌவலு மயக்கி**

**ஞாழலும் புன்னையும் வீழ நூக்கிக்**

**குருந்துங் கொன்றையும் வருந்த வணக்கித்**

**தடவும் பிடவுந் தாழச் சாய்த்து**

**முளவு முருக்கு முருங்க வொற்றி**

**மாவும் மருதும் வேரறப் புய்த்துச்**

**............**

**அனிச்சமு மசோகமு மடர வலைத்துப்**

**பனிச்சையும் பயினும் பறியப் பாய்ந்து**

**வள்ளியு மரலுந் தன்வழி வணங்கி.** **(1:51: 39-54)**

இப்பாடல் வரிகளின் வழி அறியலாம்.

ஆற்றில் அகப்பட்ட புள்ளி மான்களும் ஆண் மான்களும் வெகுண்டு கரையை நோக்கி நீந்தின. பெண் மயில்கள் ஆண் மயில்களோடு அகவின. முள்ளம் பன்றியும், கரடிகளும் வெருண்டு ஓடின. குரங்கும் முசுவும் மரங்கள் மீது தாவி ஏறின. நீர்வாழ் உயிரினங்கள் ஆற்றின் வேகம் கண்டு அஞ்சின. நிலத்தில் இருந்த விலங்குகள் வெள்ளப்பெருக்கு கண்டு துள்ளி விளையாடியது. மிகுந்த பொருள்களை வாரிக் கொண்டு ஆற்று வெள்ளமானது கடலிலே கலக்க விரைந்தோடியது என்று ஆற்றின் தன்மையை கொங்குவேளிர் வருணிக்கின்றார். இதனை,

புள்ளி மானும் புல்வாய்த் தொகுதியும்
ஆமா வினமுந் தாமா றோடி
இடைப்புனற் பட்டவை புடைப்புனற் கிவரப்
பொறிமயிற் பேடை போத்தொடு புலம்ப
எறிமயி ரேனமொ டெண்கின மிரியக்
குரங்கு முசுவு மரந்தொறும் வாவச்
சுரும்புந் தும்பியும் விரும்புபு விரைய
அகத்துறை பல்லுயி ரச்ச மெய்தப்
புரத்துறை பல்லுயிர் புகன்றுவிளை யாடப்
படிவப் பள்ளியொடு பாக்கங் கவர்ந்து
குடிகெழு வளநாடு கொள்ளை கொண்டு
கவ்வை யோதங் கால்கிளர்ந் துராஅய்ப்
பௌவம் புகூஉம் படர்ச்சித் தாகி. (1:51: 55-67)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

2. மலை வருணனை

மாயோன் மார்பில் மன்னுபு கிடந்த
ஆரம் போல அணி பெறத் தோன்றி. (2:14: 3-4)

மலையில் தோன்றிய அருவிகள் மாயோன் மார்பினில் இருந்த ஆரம் போன்று விளங்கின என்று கொங்குவேளிர் மலையினை வருணிக்கின்றார்.

3. பொழுது/கால வருணனை

கார்கால வருணனை

பொருள்வயிற் பிரிவோர் வரவெதி ரேற்கும்
கற்புடை மாதரிற் கதுமென வுரறி
முற்றுநீர் வையக முழுது முவப்பக்
கருவி மாமழை பருவமொ டெதிரப்
பரவைப் பௌவம் பருகுபு நிமிர்ந்து
.........
முல்லைக் கிழத்தி முன்னரு ளெதிரப்

**அரவுகொண் டரும்ப வறுகால் வண்டினம்**

**அவிழ்பதம் பார்த்து மகிழ்வன முரலக்**

**கார்வளம் பழுனிக் கவினிய. (1:49: 76-101)**

கார்காலத்தைத் தலைவனாகவும் முல்லை நிலத்தைத் தலைவியாகவும் உருவகித்துள்ளார் கொங்குவேளிர். முல்லைத் தலைவியைக் கார்காலத் தலைவன் பிரிந்திருந்தான். கார்கால மேகம் கடலில் படிந்து, நீரைப் பருகி, வானத்தே உயர்ந்தெழுந்து முழங்கியது. திரும்பிய தலைவன் பந்தலமைத்து விழாக்கோலத்தோடு வீட்டிற்குள் நுழைந்தது போலக் கார் காலமும் பந்தலிட்டு மேகமாகிய மேற்கட்டியைக் கட்டியது. வானவில்லாகிய மாலையை அழகுறத் தொங்கவிட்டது. மின்னலாகிய ஒளி விளக்குகளை ஒளித்தது. ஆலங்கட்டியாகிய வெள்ளி மணலைப்பரப்பியது. இடியாகிய முரசை முழங்கியது. கார்காலத் தலைவன் முல்லைத் தலைவிக்கு மழைத்துளியை அளிக்கச்செய்தான் என்று கார்காலத்தினை ஆசிரியர் வருணித்துக் கூறியுள்ளார்.

**விடியல் வருணனை**

இரவில் மொட்டாக இருந்த பூக்களானது விடியலில் விரிந்த தோற்றமானது, தூங்கியிருந்த பொய்கை காலையில் கண்விழித்தது போல் இருந்தது. இருளானது நீங்கி விடியலை ஏற்படுத்தியது என்று வருணிக்கின்றார் கொங்குவேளிர். இதனை,

**பூக்கள் மலர, புலம்பிய பொய்கைப்**

**பால் கேழ் அன்னமொடு பல் புள் ஒலிப்ப**

**பரந்து கண் புதைஇய பாய்இருள் நீங்கிப்**

**புலர்ந்தது மாதோ. (1:33: 210-213)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

வாடைக்காற்றானது தீப்போன்ற கொடிய பனியோடு கலந்து தன் கணவரைப் பிரிந்து வாழும் மகளிருடைய கண்களில் தீப்போன்று சுடுகின்ற துன்பக்கண்ணீரை முத்து முத்தாய் விழ, பசலைநோய் வாட்ட துன்பத்தைத் தருகின்றது என்கிறார் கொங்குவேளிர். இதனை,

**துணைபிரி மகளி ரிணைமலர் நெடுங்கண்**

**கட்டழன் முத்தங் காலப் பட்டுடைத்**

**தனிக்கா ழல்குற் பனிப்பசப் பிவர**

**அழல்புரை வெம்பனி யளைஇ வாடை**

**உழல்புகொண் டறாஅ தொல்லென் நூர்தரச்**

**செங்கேழ் வானக் கம்பலம் புதைஇ**

**வெங்கணீர தாகி வேலிற்**

**புன்கண் மாலை போழ.** (3:7: 32-39)

என்ற பாடலின் வழி அறியலாம்.

ஊடலைத் தீர்த்த கணவனின் தோளிலே மனைவியர் துயின்றிருந்தனர். காலைத் தோன்றியதும் கணவரொடு புணர்ந்திருந்த அவர்களது மனம் துட்கென்றது. ஆனால், பிரிந்திருந்த காதலர்க்கு இரவு காமக்கனலை மூட்டிவிட்டு உயிரை அரித்துண்பது போன்ற கொடுமையினைச் செய்தது. இருள் எப்போது நீங்கும் என்று எண்ணிய அவளுக்கு வைகறையானது தீப்பட்ட புண்ணினுள்ளே சந்தனத்தை பூசியது போல இருந்தது. இதனை,

**பசுங்கதிர்த் திங்கள் விசும்பளந் தோடிக்**

**கடுங்கதிர்க் கனிலி கக்குபு போகித்**

**தானொளி மழுங்கி மேன்மலை குளிப்ப**

**மீன்முகம் புல்லென வா…னா…கை**

**தெளிமணி விளக்கு மளிமலர்ப் பள்ளியும்**

**புலம்பிற் நீரக் கலப்புறு கணவரை**

**முயக்கிடை விடாஅச் சுடர்க்குழை மகளிர்**

**தோண்முதற் புணர்ச்சி யிரியத் துட்கென**

**வாண்முக மழுங்க வலியற வராவும்**

**வைவாள் போலும் வகையிற் றாகி**

**வெள்வேல் விடலையொடு விளங்கிழை மாதர்க்குச்**

**செந்தீக் கதீஇய வெந்தழற் புண்ணினுட்**

**சந்தனச் சாந்திட டன்ன தன்மையொடு**

**வந்தது மாதோ வைக லின்றென்.** (3:7: 97-110)

என்ற பாடலடிகள் வழி உணரலாம்.

**மாலைக்கால வருணனை**

மாலைக்கால வருணனை பற்றிக் கொங்குவேளிர் கூறக்காரணம் அவர் அக்காப்பியத்தின் சுவையை மிகுவிப்பதற்கே எனலாம்.

ஞாயிறு தன் கதிரை சுருக்கி கொண்டு மறைந்தது. தலைவன் பிரிவால் பசலை படர்ந்த தலைவிபோல வானம் பூத்தது. வேந்தன் இறந்ததும் அதுவரை அஞ்சியிருந்த குறுநில மன்னர்கள் ஆங்காங்கே ஆதிக்கம் செலுத்துவது போல சூரியன் மறைந்ததும் மீன்கள் முகிழ்த்தன. இளமையிலேயே அரசு பொறுப்பேற்ற இளவரசன் போல பிறை எழுந்தது என்பது போன்ற வருணனையை,

**சென்றுசென் றிறைஞ்சிய சினந்தீர் மண்டிலம்**
**சூடுறு பாண்டிலிற் சுருங்கிய கதிர்த்தாய்க்**
**கோடுய ருச்சிக் குடமலைக் குளிப்ப**
**விலங்கும் பறவையும் வீழ்துணைப் படரப்**
**புலம்புமுத் துகுத்த புன்மைத் தாகி**
**நிறைகடன் மண்டில நேமி யுருட்டிய**
**இறைகெழு பெருவிற லெஞ்சிய பின்றைக்**
**கடங்கண் ணரிந்த கைய ராகி**
**இடந்தொறும் பல்கிய மன்னர் போல**
**வரம்பில் பன்மீன் வயின்வயின் விலங்கிப்**
**பரந்துமீ தரும்பிய பசலைவா னத்து**
**…………**
**சுடர்வெண் ணிலவின் றொழிற்பயன் கொண்ட**
**மிசைநீண் முற்றத் தசைவளி போழ**
**விதானித்துப் படுத்த வெண்கா லமளிச்**
**சேக்கை மகளிர் நெஞ்சாந்து புலர்த்தும்**
**தேக்க ணகிற்புகை திசைதொறுங் கமழக்**
**கன்றுகண் காணா முன்றிற் போகாப்**
**பூத்தின் யாக்கை மோ………….**
**……** குரால் வேண்டக் கொண்ட. (1:33: 40-68)

இப்பாடல் வழி அறியலாம்.

மாலை நேரத்தில் மகளிரின் செயல்பாட்டினை கொங்குவேளிர் வருணனை செய்துள்ளார். கழனிகளில் குவளை மலரினை மேய்ந்து திரும்பிய பசுக்கள் தன்னுடைய கன்றுகளைக் கண்டு பாலைச் சுரந்தன. மகளிர் அதனை பொன் கிண்ணத்தில் எடுத்து, ததும்பிய நுரையைத் தெளிவித்து தன் பிள்ளைகளுக்கு ஊட்டினர். இதனை,

**சுரைபொழி தீம்பானுரைதெளித் தாற்றிச்**

**சுடர்பொன் வள்ளத்து மடல்விரற் றாங்கி**

**மதலை மாடத்து மாண்குழை மகளிர். (1:33: 69-71)**

என்ற பாடலடிகள் வழி அறியலாம்.

முல்லையும் மல்லிகையும் ஒருசேர மலர்ந்து நறுமணம் கமழ்ந்தன. பூந்தட்டில் இட்டுவைத்த திருமண மாலைகள் வண்டு கிண்டுதலாலே மலர்ந்தன. செப்பில் வைத்திருந்த பிச்சிப்பூமாலை மலர்ந்ததும், துறவறத்தோர் பள்ளியில் அந்திப் பொழுதில் ஊதும் சங்குகளும், படைக்கொட்டிலில் யானைகளுக்கு ஊதப்படும் சங்கின் ஒலியும், புதியதாகப் பிடிக்கப்பட்ட யானைகளை அடக்கிக் கட்டும் பாகரின் உரத்தகுரல் ஒலியும், கள்ளுண்டவர் ஆரவாரிக்கும் ஒலியும் என இந்த ஒலிகளெல்லாம் மழை பெய்யும் போது கடலில் எழுந்த ஆரவாரம் போலானது. நறுமணம் கமழும் பூக்கடைகள் திறக்கப்பட்டது. யாழைப் பண்ணுறுத்தி மகளிர் செவ்வழிப் பண்ணை இசைத்தனர் என்பது போன்ற வருணனையை,

**இல்லெழு முல்லையொடு மல்லிகை மயங்கிப்**

**பெருமணங் கமழவும் பிடகைப் பெய்த**

**வதுவைச் சூட்டணி வண்டுவாய் திறப்பவும்**

**பித்திகக் கோதை செப்புவாய் மலரவும்**

**அறவோர் பள்ளி யந்திச் சங்கமும்**

**மறவோன் சேனை வேழச் சங்கமும்**

**புதுக்கோள் யானை பிணிப்போர் கதமும்**

**மதுக்கோண் மாந்த ரெடுத்த வார்ப்பும்**

**மழைக்கட் லொலியின் மயங்கிய மறுகின்**

**விளக்கொளி பரந்த வெறிகமழ் கூலத்துக்**

**கலக்கத வடைத்து மலர்க்கடை திறப்பவும்**

**ஒளிறுவே லிளையர் தேர்நீ றளைஇக்**

**களிறுகா லுரைத்த புஞ்சப் பூழியொடு**

**மான்று களவிய மதுப்பலி தூவவும்**

**தெற்றி முதுமரத் துச்சிச் சேக்கும்**

**து..........க..........ரக் குரலளைஇச்**

**சேக்கை நல்லியாழ் செவ்வழி பண்ணிச்**

**செறிவிரற் பாணியி னறிவரப் பாடவும். (1:33: 73-90)**

இப்பாடலின் வழி அறியமுடிகின்றது.

அகில் மணம் கமழும் அழகிய கை சிவக்கும்படி பஞ்சினைத் திரித்துத் திரியாக்கி விளக்கிலிட்டுச் சுடரேற்றினர். இதனை,

**அகினா றங்கை சிவப்ப நல்லோர்**

**துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி**

**உள்ளிழு துறீஇய வொள்ளடர்ப் பாண்டிற்**

**றிரிதலைக் கொளீஇ யெரிதரு மாலை. (1:33: 91-94)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

குளங்களில் கருங்குவளை மலரோடு மலர்ந்த அழகிய செங்கழுநீர் மலரும், குழிந்த வாயையுடைய நெய்தல் மலரும், நீரில் வளர்கின்ற குவளை மலரும், தாமரை மலரும் முதலியன குவிந்து மகளிரின் வணங்குவதற்குரிய கூப்பிய விரல்களாய் காட்சியளித்தன. அவை குவிந்த போது உள்ளிருந்த வண்டுகள் சிறைப்பட்டன. பொய்கைகளில் இரை தேடியிருந்த பறவைகள் கூடுகளை அடைந்தன. தம் இனத்தை அழைக்க அவை எழுப்பிய ஒலி துணையைப் பிரிந்துறைந்தோரின் தனிமைத் துன்பத்தை மிகுதிப்படுத்திற்று. ஞாயிற்றின் வெப்பம் நீங்கி குளிர்ச்சியை அளித்தது. இதனை,

**கொற்ற வெங்கதிர் குளிர்கொளச் சுருக்கிக்**

**குண்டகன் கிடக்கைக் குடகடற் குளிப்ப**

**வண்டகத் தடக்கிய வாய வாகிக்**

**தலப் பொய்கையு ணீலமொடு மலர்ந்த**

**கோலக் கழுநீர் குழிவாய் நெய்தல்**

**…………………**

**புட்புலம் புறுத்த புன்கண் மாலை**

**கட்புல மருங்கிற் கலந்த ஞாயிற்று**

**வெப்ப நீக்கித் தட்பந் தானசெய.** (1:48: 44-59)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**பால்வெண் குருகின் பன்மயிர்ச் சேவல்**

**பூம்பொறிப் பெடையை புலவி யுணர்த்திப்**

**பொறிப்பூம் பள்ளி புகாஅ தயல**

**மதிதோய மாடத்து மழலையம் புறவொடு**

**வெள்ளிவெண் மாடத்துப் பள்ளி கொள்ளும்.** (1:54: 14-18)

என்ற பாடலில், அந்தணர் மாலைக் கடன் ஆற்றினர். பால் போன்ற வெண்மையான அன்னச் சேவல் பெடை அன்னத்துடன் ஊடல் கொண்டு தன் மலர்ப்படுக்கைக்குச் செல்லாமல், அருகிருந்த மாடப் புரைகளில் தங்கியிருந்த புறாக்களோடு தூங்கியது. சிறந்த கற்பனை கலந்த இம்மாலைக் கால வருணனையை பெருங்கதையில் காணமுடிகின்றது.

பாலை நிலத்தில் புலிக்கு அஞ்சிய பெண் மான்கள் தம் குட்டிகளுடனும் கலை மான்களுடனும் புதர் முதலியன இல்லாத வறிய நிலப்பரப்பில் கூடிநின்றன. பிடி யானைகளைத் தழுவியிருந்த களிற்றியானைகள், நீருள்ள இடத்தை உய்த்தறியும் பொருட்டு, உயர்த்திய கையை உடையனவாய் முகிற் கூட்டம் போல் பரவிச் சென்றன. இதனை,

**பொறிவரி யிரும்புலிப் போத்துநனி வெரீஇ**

**மறியுடன் தழீஇய மடமான் அம்பிணை**

**துள்ளுநடை யிரலையொடு வெள்ளிடைக் குழுமப்**

**பிடிக்கணந் தழீஇய பெருங்கை யானை**

**இடிக்குர லியம்பி யெவ்வழி மருங்கினும்**

**நீர் வழிக் கணவரு நெடுங்கைய வாகிக்**

**காரிரு முகிலிற் கானம் பரம்ப. (1:54: 37-43)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

கணவரைப் பிரிந்துரைந்த மகளிரின் கண்களில் முத்து முத்தாய்ச்சுடு நீர் விழுந்தன. மேனியெங்கும் பசலை வந்தது. வாடைக்காற்று வீசியது. அது அவர்களை உலைத் தீயெனச் சுட்டது. மாலையோ செவ்வானமாகிய சிவந்த கம்பளத்தைப் போர்த்தி வந்து வெம்மையுடையதாய் அவர் நெஞ்சை வேல்போல் பிளந்தது. இதனை,

**துணைபிரி மகளி ரிணைமலர் நெடுங்கண்**
**கட்டழன் முத்தங் காலப் பட்டுடைத்**
**தனிக்கா ழல்குற் பனிப்பசப் பிவர**
**அழல் புரை வெம்பனி யளைஇ வாடை**
**உழல்பு கொண் டறாஅ தொல்லென் றூர்தரச்**
**செங்கேழ் வானக் கம்பலம் புதைஇ**
**வெங்க ணீர தாகி வேலிற்**
**புன்கண் மாலை போழத் தன்கட். (3:7: 32-39)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

## சோலையின் வருணனை

சண்பக மரங்கள் அடர்ந்த சோலை, அதற்கு சந்தன மரங்களே வேலியாக இருந்தன. மரத்தில் தொடுத்த ஊசலில் மகளிர் ஆடிவிளையாடினர். ஊசற் பாட்டின் தாளத்திற்கேற்ப மயில்கள் ஆடின. வெயில் ஊடுருவிச் செல்லமுடியாத அளவிற்கு மரங்கள் நெருங்கி வளர்ந்திருந்தன. ஆண்வண்டுகள் தேனுண்டு திளைத்துப் பூந்துகளைச் சிதர்வித்தன. பெண் வண்டுகள் அவற்றை மருள்வித்திருந்தன. இதனை,

**சந்தன வேலிச் சண்பகத் திடையதோர்**
**வேங்கையொடு தொடுத்த விளையாட் சேற்**
**றூங்குபு மறலு முழைச்சிறு சிலதியர்**
**பாடற் பாணியொ டளைஇப் பல்பொறி**
**ஆடியன் மஞ்ஞை யகவ வயலதோர்**
**வெயில் கண் போழாப் பயில்பூம் பொதும்பிற்**

**சிதர்தொழிற் றும்பியொடு மதர்வண்டு மருட்ட.** (1:33: 22-28)

என்ற பாடலின் வழி அறியலாம்.

நீலமணி போன்ற நிறமுடைய குயிற்பேடை தன்காதல் துணையாகிய சேவலைத் தூரத்தே கண்டு களித்தது. தான் இருக்கும் இடத்திற்கு வருமாறு கூவி அழைத்தது. பால் போன்ற நிறமுடைய அன்னச்சேவல், மறைந்திருந்தது. அதனைக் காணாது பவளம் போன்ற கால்களையுடைய பெடை அன்னம் மயங்கிக் கலங்கியது. இதனை,

**மாத ரிருங்குயின் மணிநிறப் பேடை**
**காதற் சேவலைக் கண்டுகண் களித்துத்**
**தளிப்பூங் கொம்பர் விளிப்பது நோக்கியும்**
**பானிறச் சேவல் பாளையிற் பொதிந்தெனக்**
**கோண்மடற் கமுகின் குறிவயிற் காணாது**
**பவழச் செங்காற் பன்மயி ரெருத்திற்**
**இவர்குர லன்னங் கலங்கல் கண்டும்.** (1:33: 29-35)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**புழற்காற் றாமரை யழற்போ தங்கண்**
**அல்லி மெல்லணைப் பள்ளி கொண்ட**
**தார்ப்பூம் பேடை தையல ரெடுத்த**
**நீர்ப்போர்க் கவ்வையி னீங்கி முனாஅ**
**தொள்ளொளிப் பவளத் துள்ளொளி யடக்கி**
**வெள்ளிப் பூந்தா ரெள்ளுந் தோற்றத்துப்**
**போதுபொறை யாற்றாப் புன்னையம் பொதும்பர்த்**
**தாதுபுறத் துறைப்பத் தங்கலிற் றலைபரிந்**
**திகழ்வி னோக்கமோ டிரைவேட் டெழுந்த**
**பவழச் செங்காற் பானிறச் சேவல்**
**திரையுமிழ் பொய்கையு ளிரையுமிழ்ந்து மயங்கி**
**மதிபுரை தாமரைப் பொதிபோது புல்லிய.்.**
**தன்மையி னழிந்து புன்மையிற் புலம்பி**

**அருப்பிள முலையவ ரடைகரை வைத்த**
**மருப்பியல் செப்பை மதித்த தாகி**
**அழல்வெங் காமத் தன்புதலைக் கொண்ட**
**மழலைத் தீங்குரன் மருட்டி யழைஇக்**
**குறுகச் சென்றத னுறுநோக்குப் பெறாது**
**புன்னையம் பள்ளிப் பொழிறொறு நாடும்**
**அன்னப் புள்ளி னலமரல் காண்மின்.** **(1:40: 245-264)**

புன்னை மரச் சோலை. அங்கிருந்த பொய்கையில் தாமரைப்பூவின் அகவிதழில் அன்னப்பெடை ஒன்று பள்ளி கொண்டிருந்தது. நீராடிய மகளிரின் ஆரவாரத்தினால் அப்பறவை அஞ்சி புன்னை மலர்ச்சோலைக்குச் சென்றது. புன்னை மரத்தின் பூக்களின் தாது அதன்முதுகிலே படிந்தது. அதனால் அதனுடைய நிறமானது மறைந்து பொன்னிறமாய் ஆனது. அப்பெடைக்கு இறை எடுத்துக்கொண்டு வந்த சேவல் பெடையைக் காணாது கலங்கியது. அந்த வருத்தத்தினால், கொண்டுவந்த இறையை பொய்கையிலே உமிழ்ந்து விட்டு அதைத்தேடி அலைந்தது. பொய்கையில் இருந்த தாமரைப் பேரரும்பினைத் தன் பேடை என்று எண்ணி அருகணைத்தது. அது பெடையில்லை என்றறிந்ததும் வருந்தியது. பொய்கையில் நீராட வந்த பெண்கள் கரையில் வைத்த யானை மருப்பாலான செப்பைப் பெடை என்று எண்ணி அருகே சென்று ஆசையோடு பார்த்து ஏமார்ந்தது. இவ்வாறு தன் பெடையை எண்ணி அலைந்து திரிந்தது. பாவம்! நிறம் மாறியதால் புன்னை மரத்திலிருந்த பெடையை அடையாளம் கண்டு கொள்ளாமல் மயங்கி வருந்தியது. இதில் ஆசிரியரின் வருணனைகளைக் காணமுடிகின்றது.

இதுபோன்று இன்னொரு காட்சி,

ஒரு குயில் சேவலின் முதுகில் பூந்துகள் படிந்ததால் பொன்னுரைத்த கல்போலப் புதிய நிறமுடையதாயிற்று. அந்நிலையில் பெடையின் அருகே சென்று அமர்ந்தது அச்சேவல். பெடையோ அதனைக் கண்டு ஐயுற்று விலகியது. சேவல் சிறகை உதறிப் பூந்துகளை உதிர்த்து தன்னுடைய நிறத்தினைக் காட்டியது. தன் இனிய குரல்காட்டிப் பேடையின் ஐயத்தைப் போக்கி புணர்ந்தது. இக்காட்சியை,

**குறுஞ்சினைப் புன்னை நறுந்தா தாடிக்**

**கருங்குயிற் சேவ றன்னிறங் கரந்தெனக்**

**குன்றிச் செங்க ணின்றுணைப் பேடை**

**உணர்தல் செல்லா தகறொறும் விரும்பிப்**

**புணர்த லுணர்வொடு பொங்குசிறை யுளரி**

**அளிக்குர லழைஇத் தெளித்துமன நெகிழ்க்குமக்**

**குயிற்புணர் மகிழ்ச்சி.** (3:6: 9-15)

என்ற வரிகளின் மூலம் ஆசிரியர் வருணிக்கின்றார்.

**சிறுமையும் வறுமையுந் தின்மையும் புன்மையும்**

**இறுபும் புலம்பும் இன்மையும் இரக்கமும்**

**அறியு மாந்தரின் உறுவளங் கவினி**

**ஐந்திணை மரனும் பைந்தளிர்க் கொடியும்**

**தந்துணைச் செல்வந்த தலைத்தலை பெருகி**

**அருமதி முனிவர் நிருமிதம் போல**

**அழல்கண் ணகற்றி நிழன்மீக் கூரி**

**நீர்புக் கன்ன நீர்மைத் தாகி**

**ஊர்புக் கன்ன உள்ளுவப் புறீஇ**

**மலர்த்தவி சடுத்துத் தளிர்க்குடை யோங்கிப்**

**பூங்கொடிக் கவரி புடைபுடை வீசித்**

**தேங்கொடிப் பறவைழந் திருந்துசிறை மிஞிறும்**

**விரும்புறு சுரும்பும் பெரும்பொறி வண்டும்**

**குழல்வாய்த் தும்பியுங் குயிலுங் கூடி**

**மழலையம் பாடலின் மனம்பிணி யுறீஇ**

**முதிர்கனி அமிர்தம் எதிர்கொண் டேந்தி**

**மேவன பலபயின் றீவன போன்ற**

**பயமரம் அல்லது கயமரம் இல்லா.** (2:13: 11-28)

குளிர்ந்த சோலையில் விருந்துக்கூடம்! தம்மிடம் வந்தோர் எவராக இருந்தாலும் அவர் துயர்கண்டு நலம் செய்யும் சான்றோர் போன்றது. வருவோர்க்கு

வெப்பத்தை நீக்கி குளிர்ச்சியான நிழலைத் தரக்கூடியது. மெய்ஞ்ஞானம் உடையோர் தன்னுடைய தவ வலிமையால் நினைத்ததை அடைவது போல், ஓரிடத்தில் ஐந்து திணைகளுக்கும் உரிய மரமும், கொடியும், மலரும் வளமுற்று அழகாகத் திகழ்ந்தது. இல்லத்திற்கு வருவோர்க்கு இருக்கையும், உணவும் தருவது போல சோலையில் நுழைந்தோர்க்கும் அவை கிடைத்தது. மலராகிய இருக்கையைத் தந்தது. தளிராகிய குடைபிடித்து நிழலைத்தந்தது. வண்டும் தும்பியும் குயிலுமாகிய தன் பாணர்களைப் பாடச்செய்து விருந்தினர்களின் நெஞ்சைக் கவர்ந்தது. முதிர்ந்த பழங்களாகிய சிறந்த உணவினை ஊட்டியது. நல்ல மரங்களன்றி அச்சோலையில் இழிவான மரங்கள் எதுவுமே இல்லை என்று சோலையின் அழகினை ஆசிரியர் வருணித்துக் கூறுகின்றார்.

தம்பால் வருபவர்க்கு அவர்தம் தகுதியை அளவாமல் அவர் தம் சிறுமை முதலியவற்றைக் கண்டு இரங்கி அவர்தம் துயர்போக்கி அவர்க்கு நலமே செய்கின்ற சான்றோர் போல அப்பொழில் தன்பால் வருவோர் தகுதியை அளவாமல் அவர்தம் அழல் நீக்கி நிழலளிக்கிறது.

தம்மூரிற் புகுவோர் அங்கே தமக்கு வேண்டிய உணவு உடை உறையுள் முதலியன கிடைத்தலின் மகிழ்வரன்றே, அங்ஙனமே இப்பொழிலில் புகுவாரும் உணவு முதலியன பெற்று மகிழ்வர் என்று கொங்குவேளிர் சோலையின் அழகினைக் கூறுவதிலிருந்து அகமரபுகளுள் ஒன்றான விருந்தோம்பலை உணர்த்துகின்றார்.

பெருங்கதையில் அமையும் வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைந்துள்ளன. சங்க அகப் பாடல்களில் இத்தகு மிகையான உயர்வு நவிற்சிகள் இல்லை. படைத்து மொழியும் உயர்வு நவிற்சி காப்பிய இலக்கியத்தின் மூலம் கிடைத்த புதிய வரவு எனலாம்.

### 4. பாத்திரங்கள் வருணனை

பாத்திர வருணனையை ஆண் பாத்திர வருணனை, பெண் பாத்திர வருணனை என்று இருவகையாகப் பிரிக்கலாம்.

**ஆண்பாத்திர வருணனை (உதயணன்)**

ஆண்களை வருணிப்பது என்பது பெண்களைக் காட்டிலும் குறைவாக உள்ளது என்றாலும், பெருங்கதையில் உதயணன் வருணனையைக் காணமுடிகின்றது.

**உதயணன்**

**பனிவரை மார்பன் றனிய னாகி** (1:54: 131)

இமயமலை போன்று பகைவர்கள் வென்று கடத்தற்கு அரிய மார்பையுடைய உதயணகுமரன் என்கிறார்.

**அருவரை பிளந்த அஞ்சுவரு நெடுவேல்**
**ஒருவலத் துயரிய பொருவில் புட்கொடித்**
**தளைஅவிழ் நறுந்தார்த் தனக்கிணை இல்லா**
**இளையவன் படிவம் ஏற்ப இயல்புறீஇச்**
**சித்திர இருநிதிச் செந்நெறி நுனித்த**
**வித்தக வினைஞர் தம்முடன் வந்து**
**வடிவு கண்டிடும் வத்தவர் பெருமகன்**
**ஒடிவில் வென்றி உதயண குமரன்**
**ஒருமெய் சேர்ந்திவை பெருமை பெறுகென**
**அருளின் அணியின் அல்லதை இவற்கிவை**
**உருவென அணியா உறுப்புமுதல் அணிதலிற்**
**புண்ணிய முடையவிப் பொன்னணி கலனென**
**எண்ணிய நெஞ்சமொடு நுண்வினைப் பொலிந்த**
**கோல வித்தகர் வாலணி புனைய.** (2:5: 147-160)

உதயணினின் மேல் அணியப்படும் அணிகலன்கள் புண்ணியம் அடைந்திருக்க வேண்டும் என்று கருதுகின்ற உள்ளத்தோடு அவ்வுதயணன் வடிவம் முருகக் கடவுளின் வடிவம் போல இருந்தது என்று வருணிக்கின்றார் கொங்குவேளிர்.

**பண்பு நலன்**

உதயணன் வாசவதத்தையை நினைத்து உருகும் தன் மெலிவால் அவளுக்கு எத்தகைய களங்கமும் ஏற்படக்கூடாது என்ற நினைப்பில்

நாடகக்கணிகையர் நருமதையிடம் தான் காமமுற்றது போல் ஒரு நாடகம் ஆடினான். இதனை,

**ஒழுக்க நுனித்த ஊராண் மகளிர்**

**தாநயந்து அரற்றினும் தக்குழி அல்லது**

**காமுறற்கு ஒவ்வாக் கயக்கம் இலாள்நீ. (1:36:281-283)**

என்ற பாடலின் மூலம் அவனது ஒழுக்கப்பண்பு புலப்படுகின்றது.

**யாழிசையில் வல்லவன் உதயணன்**

உதயணன் யாழிசையில் வல்லவன். யாழிலக்கண நூலையும் கற்றவன் என்பதனை,

**யானை வணங்கு மைங்கதி யருவினை**

**வீணை வித்தகத் தவனிறு மிக்கதன்**

**மாலை மாந்தரில் லென. (3:15:12-14)**

**யாழும் பாட்டும் யாவருமறிவர்**

**விழா நண்பினிவன் போல விரித்து**

**நுனித்திரை மாந்தரில் லென. (3:15:48-50)**

என்னும் பாடல் வரிகளில் உதயணனின் யாழ்த்திறம் கூறப்பட்டுள்ளது.

**ஓவியத்தில் சிறந்தவன்**

ஓவியக் கலையிலும் உதயணன் வல்லவனாக இருந்தான். தான் கண்ட பதுமாவதியின் கோலத்தை வாழையின் குருத்தில் நெஞ்சைக் கவரும் வகையில் ஓவியத்தில் சித்தரிக்கின்றான். இதனை,

**வையக் கஞ்சிகை வளி முகந்தெடுக்கவத்**

**தெய்வப் பாவையைத் தேனிமிர் புன்னைத்**

**தாண்முதல் பொருந்தித் தானவட் கண்டதும்**

**காமர் நெடுங்கண் கலந்த காமமும்**

**இன்னவை பிறவுந் தன் முதலாக**

**உள்ளம் பிணிப்ப வுகிரிற் பொறித்து. (1:8:15-20)**

என்ற பாடலின் வழி ஓவியப் புலமை உடையவன் உதயணன் என்கிறார் கொங்குவேளிர். சங்க அகப்பாக்களில் இவ்வாறு விவரித்து வருணிக்கின்ற போக்கு இல்லை.

**பெண்பாத்திர வருணனை**

**பிரச்சோதன மன்னன் மகளிரின் வருணனை**

**முத்தின ருத்தியர் மும்மணிக் காசினர்**
**கச்சினர் கண்ணியர் கதிர்வெள் வளையினர்**
**சில்கலத் தியன்ற வணியின ரல்லது**
**பல்கலஞ் சேரா மெல்லென் யாக்கையர்**
**அசைவில் குமரரை யாடிடத் தணங்கு**
**நசையட் கொண்ட நன்மை யியன்று**
**விழுத்தகைத் தெய்வம் வழுத்தா மரபில்**
**தார்ப்பொலி மேனிக் கூர்ப்பணங் கொடுக்கிய**
**மண்டு தணிதோண் மாசின் மகளிர். (1:34: 121-129)**

முத்துமாலையணிந்தவர்களும், மூன்றுவகை மணிகள் பதித்த பொன் அணிகலன்களை அணிந்தவர்களும், கச்சணிந்தோறும், சங்குவளையல் அணிந்தோரும், பல அணிகலன்களை அணிந்தவர்களும், பெண்மை நலம் உருப்பெற்று சிறப்புற்று இருந்தனர். தெய்வமகளிரையே தன் அழகினால் அடக்கிய நாளுக்கு நாள் மிக்கு வளர்கின்ற குளிர்ந்த தோளையுடையவராக திகழ்ந்தனர் அப்பெதும்பை மகளிர் என பிரச்சோதனின் மகள்களை வருணித்துக்காட்டுகின்றார் ஆசிரியர்.

**நருமதை இயல்புநலன் வருணனை**

**யாழ் முதலாக வறுபத் தொருநான்**
**கேரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக்**
**கலையுற வகுத்த காமக் கேள்வி. (1:35: 84-86)**

யாழ் வித்தை முதலிய அறுபத்து நான்கு வித்தைகளும் பயின்றமை அழகிய இளமையுடைய பரத்தைமகளிர்க்கு இயல்பு என்று கருதுவதனைக் காணலாம்.

**வாசவதத்தை வருணனை**

**அங்கர வல்கு னங்கைக் கின்றிவை**
**மங்கல மண்ணுநீ ராவன வென்று**
**நெஞ்ச நெகிழ்ந்துவந் தன்புகலந் தாடியல்**
**அரவிற் பரந்த வல்குன் மீமிசைக்**
**கலாஅய்க் கிடந்த குலாத்தரு கலிங்கம்**
**நிலாவிடு பசுங்கதிர்க் கலாவ மேய்ப்ப**
**நீரணி கொண்ட வீரணி நீக்கிக்**
**கதிர்நிழற் கவாஅப் பதுமநிறங் கடுக்கும்**
**புதுநூற் பூந்துகி லருமடி யுடீஇ. (1:42: 137-145)**

பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய வாசவதத்தைக்கு இவை மங்கலந்தரும் முழுக்கு நீராகும் என்று மனம் மகிழ்ந்து, அவளை நீராட்டி அந்த ஈர ஆடையினைக் களைந்து கதிரவனுடைய ஒளிக்கு அவாவுகின்ற வெண்தாமரை மலர் நிறத்தைப் போன்ற நிறமுடைய புது நூலினாள் செய்த அழகிய அரிய வெள்ளாடையினை உடுத்தினர்.

**யாற்றற லன்ன கூந்தல் யாற்றுச்**
**சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்**
**வில்லெனக் கிடந்த புருவம் வில்லின்**
**அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்**
**பிறையெனச் சுடருஞ் சிறுநுதல் பிறையின்**
**நிறையெனத் தோன்றுங் கரையில் வாண்முகம்**
**அரவென நுடங்கு மருங்கு லரவின்**
**பையெனக் கிடந்த வைதேந் தல்குல்**
**கிளியென மிழற்றுங் கிளவி கிளியின்**
**ஒளிபெறு வாயி னன்ன வொள்ளுகிர்**
**வாழையந் தாளுறழ் குறங்கின் வாழைக்**
**கூம்புமுகி ழன்ன வீங்கிள வனமுலை**
**வேயெனத் திரண்ட மென்றோள் வேயின்**

**விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவற்**

**காந்தண்முகி ழன்ன மெல்விரல் காந்தட்**

**பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை**

**அன்னத் தன்ன மென்னடை யன்னத்துப்**

**புணர்வி னன்ன தண்டாக் காதல்**

**அணிக்கவின் கொண்ட வதிநா கரிகத்து**

**வனப்புவீற் றிருந்த வாசவ தத்தையும்.** (4:11: 64-83)

கருமணலை ஒத்த கூந்தலையும், ஆற்று நீரில் தோன்றும் சுழியை ஒத்த குழிபோன்ற கொப்பூழையும், வில் போன்ற பருவத்தினையும், வில்லின் அம்பு போன்ற சிவந்த கடையினையுடைய குளிர்ந்த கண்ணினையும், பிறை போன்ற சிறிய நெற்றியையும், திங்கள் போன்ற முகத்தினையும் பாம்பு போல் வளைகின்ற இடையினையும், அப்பாம்பின் படம் போன்ற அல்குலையும், கிளி போன்று பேசும் மொழியையும், கிளியினது அலகை ஒத்த நகத்தினையும், வாழைத்தண்டு போன்ற தொடையினையும், மூங்கில் போன்ற திரண்ட மெல்லிய தோளையும், மூங்கிலில் உள்ள முத்தைப் போன்ற பல்லையும், காந்தள் அரும்பு போன்ற மெல்லிய விரலையும், அக்காந்தள் குலையை ஒத்த வளையலணிந்த கையினையும், அன்னம் போன்ற மெல்லிய நடையினையும் மிக்க நாகரிகத்தையுடைய அழகே உருவாக திகழ்ந்த வாசவதத்தை என்று வாசவதத்தையின் அழகை கொங்குவேளிர் வருணிக்கின்றார்.

பத்துப்பாட்டினுள் ஆற்றுப்படை நூல்களில் காணப்பெறும் ‘கேசாதி பாத’ வருணனை அமைப்பை இப்பாடலடிகள் நினைவுபடுத்துகின்றன. காப்பிய மாந்தரின் அழகினை வருணிப்பது புலனெறி வழக்கமாகும். சிறந்தவற்றை எல்லாம் ஓரிடத்தில் கொண்டுவந்து சேர்த்துக் கூறுதல் என்னும் மரபை பெருங்கதை ஆசிரியர் நன்கு உணர்ந்துள்ளார். இவ்வருணனையில் அமையும் உவமை, கற்பனை முதலானவை சங்க அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள அதே தன்மையைக் கொண்டுள்ளன.

### வாசவதத்தையின் பண்புநலன்கள்

வாசவதத்தையை முதன் முதலில் அறிமுகம் செய்யும் ஆசிரியர், அவளது அறிவையும், கற்பையும், பெண்மைப் பண்பையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். இதனை,

**தெய்வத் தாமரைத் திருமகட் கெடுத்தோர்**

**ஐயப் படூஉ மணியிற் கேற்ப**

**ஒண்மையு நிறையும் ஓங்கிய ஒளியும்**

**பெண்மையும் பெருமையும் பிறவும் உடைமையிற்**

**பாசிழை ஆயத்துப் பையென நின்ற**

**வாசவ தத்தை.** (1:34:149-154)

என்ற பாடலின் வழி அறியலாம்.

**வாசவதத்தையின் தூய்மை**

வாசவதத்தை தூய்மையானவள் என்பதை,

**விலக்கும் விடையும் விதியின் அறிந்து**

**துளக்கில் கேள்வித் தூய்மையின் முற்றி.** (1:37:135-136)

என்ற வரிகள் மூலம் அறியலாம். தூய்மை உடையவளாக இருந்த காரணத்தால் சோதவன் என்னும் முனிவன் இவளுடைய கருப்பத்தில் வந்து தங்கி நரவாணதத்தனாகப் பிறந்தான் என்ற செய்தியினை இதன்வழி அறியமுடிகின்றது.

**பதுமாபதி வருணனை**

**பசும்பொற் கிண்கிணி பரடுசுமந் தரற்ற**

**அசும்பம ராமரை யலைத்த வடியினள்**

**சிறுபிடித் தடக்கையிற் செறிவொடு புணர்ந்து**

**மென்மையி னியன்று செம்மைய வாகி**

**நண்புவீற் றிருந்த நலத்தகு குறங்கினள்**

**மணியும் பவழமு மணிபெற நிரைஇய**

**செம்பொற் பாசிழை செறிய வீக்கிய**

**பைந்துகி லணிந்த பரவை யல்குலள்**

**துடிதோங் கூறிய விடுகிய நடுவிற்குப்**

**பார மாகிய வீரத் தானையள்**

**ஊக்க வேந்த னாக்கம் போல**

**வீக்கங் கொண்டு வெம்மைய வாகி**

**இலைப்பூண் டிளைக்கு மேந்திள முலையள்**

**திலதஞ் சுடருற் திருமதி வாண்முகத்**

**தலரெனக் கிடந்த மதரரி மழைக்கட்**

**கதிர்வளைப் பணைத்தோட் கணங்குழைக் காதிற்**

**புதுமலர்க் கோதை புனையிருங் கூந்தற்**

**பதுமா பதியெனும் பைந்தொடிக் கோமகள். (3:5: 10-27)**

தாமரை மலர் போன்ற அழகுடைய சிற்றடிகளை உடையளும், யானையின் பெரிய கை போன்ற தகுதிபெற்ற துடைகளை உடையவரும், மாணிக்கமும் பவழமும் அழகாக நிரல்படக் கோத்த அணிகலன் பொருந்தக்கூடிய ஆடையணிந்த பரந்த அல்குலை உடையவளும், உடுக்கை போன்ற இடைக்குச் சுமையாகிய முன்றானையையுடையவளும் இளமையுடைய முலைகளை உடையவளும் திலகம் ஒளிருகின்ற அழகிய திங்கள் போன்ற ஒளிமுகத்தைக் கொண்டவளும், செந்தாமரை மலர் போன்ற குளிர்ந்த விழிகளையும், ஒளிவீசும் வளையணிந்த பருத்த தோளையும், குழையணிந்த செவிகளையும், புதிய மலர்களை அணிந்த கரிய கூந்தலையும் உடையவளும் ஆகிய பதுமாபதி என்னும் இறைமகள் என்று பதுமாபதியின் அழகினை வருணிக்கின்றார் கொங்குவேளிர்.

**மானனீகை வருணனை**

**கோசல வளநாட்டுக் கோமாற் பிழையாத்**

**தேவியர்க் கெல்லாந் தேவி யாகிய**

**திருத்தகு கற்பிற் றீங்குயிற் கிளவி**

**வரிக்குழற் கூந்தல் வசுந்தரி தன்மகள்**

**மானே யன்ன மயிலே மால்வரைத்**

**தேனே பவளந் தெண்கட னித்திலம்**

**கயலே காந்தள் புயலே பொருவிற்**

**பையே பொற்றுடி படைநவில் யானைக்**

**கையே குரும்பை கதிர்மதி வேயே**

**நோக்கினு மொதுக்கினு மாக்கே ழணிந்த**

**சாயல் வகையினுஞ் சால்புடை மொழியினும்**

**ஆசில் வாயினு மணிபெற நிரைத்த**

**பல்லினுங் கண்ணினு மெல்விரல் வகையினும்**

**நறுமென் குழலினுஞ் செறிநுண் புருவத்**

**தொழுக்கினு மிழுக்கா வல்குற் றடத்தினும்**

**மெல்லிய விடையினு நல்லணி குறங்கினும்**

**குற்றமின் முலையினு முகத்தினுந் தோளினும்**

**மற்றவை தொலையச் செற்றொளி திகழத்**

**தனக்கமை வெய்திய தவளையங் கிண்கிணி**

**வனப்பெடுத் துரைஇ வையகம் புகழினும்**

**புகழ்ச்சி முற்றாப் பொருவரு வனப்பிற்**

**றிருக்கண் டன்ன வுருக்கிளர் கண்ணி**

**கோசலத் தரசன் கோமகட் பூவணி**

**வாசச் சுரிகுழன் மாணிழை யொருத்தியென்**

**றாங்கொரு காரணத் தவள்வயி னிருந்தோள்.** (4:12: 143-167)

திருமகளை ஒத்தவளும் கற்புடையவளும் குயிலின் குரல் போன்ற இனிய மொழியை உடையவளும், அறலையும் சுருளையும் உடைய கூந்தலை உடையவளும் ஆகிய வசுந்தரியின் மகள் மான் போன்ற நோக்கினையும், அன்னம் போன்ற நடையினையும், மயில் போன்ற சாயலும், மலைத் தேன் போன்ற மொழியையும், பவளம் போன்ற வாய்யையும், முத்து போன்ற பல்லும், கயன்மீன் போன்ற கண்ணும், காந்தள் பூ போன்ற விரலும் முகில் போன்ற கூந்தலும் வில் போன்ற புருவமும் பாம்பின் படம் போன்ற அல்குலும் பொன்னால் ஆன உடுக்கைப் போன்ற இடையும், யானைக் கை போன்ற தொடையினையும், திங்கள் போன்ற முகத்தினையும், மூங்கில் போன்ற தோளினையும் உடையவள். அவள் காலில் அணிந்துள்ள கிண்கிணி ஒப்பற்ற அழகோடு திருமகளை கண்ணால் காணுவது போன்ற அழகு மிகுதியாய் உடையவளுமாகிய கோசலமன்னன் மகள் மானனீகை என்று மானனீகையினை வருணிக்கின்றார் ஆசிரியர்.

**விரிசிகை வருணனை**

**ஏதம் இன்றி இறைக்கடங் கழித்துக்**
**காதற் பெருந்தொடர் களைதல் ஆற்றான்**
**மாதர்த் தேவியொடு மாதவம் புரிந்த**
**மன்னவ முனிவன் தன்னமர் ஒருமகள்**
**அணித்தகு பேரொளி அரத்தம் அடுத்த**
**மணிப்பளிங் கன்ன மாசில் வனப்பின்**
**………**
**நீல மாமணி நிமிர்ந்தியன் றன்ன**
**கோலங் கொண்ட குறுநெறிக் கூழை**
**ஒருசிகை முடித்த உறுப்பமை கோலத்து**
**விரிசிகை என்னும் விளங்கிழைக் குறுமகள்.** (2:15: 48-93)

செம்பஞ்சினை அடுத்த பளிங்கு போன்ற திருமேனி அழகினையும், நகத்தாலே அழகு பெற்றனவும் நுனி முறையே சிறுத்தனவும் ஒழுங்குபட்டனவும் இலக்கண நூலில் கூறப்பட்ட அளவாக அமைந்தனவும் ஆகிய (கால்) விரல்களையும், அவ்விரலிற்கிணங்கச் செம்மை நிறத்தாலே சிறந்து விரும்பப்படுவனவாய்த் தசைப்பற்றுடைய வாய் ஒளிவீசி, ஆமையினது கூன்புறம் போன்ற மேற்பாதமும் தேன் பெய்த மூங்கிலை ஒத்தனவாகிய கணைக்காலினையும், நிறத்தாலே அழகுற்ற அக்கால்களுக்குப் பொருந்திய துடைகளையும், பாம்பின் படம் போன்ற அல்குலினையும், உடுக்கையின் நடுவினை ஒத்த நுசுப்பினையும், பூங்கொடியை வென்று நீண்ட அழகிய இடையினையும், நீர்ச்சுழியை வருத்தி நூலிற்குப் பொருந்திய கொப்பூழினையும், திருத்தமமைந்து அழகு குடியிருந்த வயிற்றினையும், பஞ்சணையை நிகர்த்த மென்மையுடையதும் அழகிய மூங்கில் போன்றதுமாகிய தோளினையும், காந்தள் துடுப்பை ஒத்த முன்கையினையும், அம்முன்கையின்கண் அக்காந்தளினது சிற்றரும்புகளை ஒத்த மெல்லிய சிறு விரல்களினையும், கிளியினது அலகை ஒத்த ஒளி வாய்ந்த நகத்தினையும், முகிளை ஒத்ததும் பிடரியில் பொருந்திய அளவிற்கு அழகுடையதும் ஒளிவிடுவதும் மேன்மை உடையதும் ஆகிய கழுத்தினையும், முழுமதி போன்ற அழகுடைய முகத்தினையும், கடலிலே தோன்றிய

குற்றமற்ற ஒளியையுடைய பவழத்துணுக்கினைப் பழித்த சிவந்த வாயினையும் நேர்மை கொண்டு சிவந்த மூக்கினையும், வேலைப் பழிப்பனவும் சிவந்த வரிபடர்ந்தனவும் ஆகிய நீண்ட கண்களையும், அக்கண்ணின் அழகுக்கு ஏற்ப நீண்டு முரிந்து உயர்ந்த புருவத்தையும், அப்புருவத்திற்கேற்ற பொலிவுடைய நுதலினையும், நீலமணி நீண்டு வளர்ந்தாலொத்த அழகினைக் கொண்ட குறிய நெறிப்பினை உடைய கூந்தலினையும் உடையவள் விரிசிகை என்னும் குறுமகள்.

**மதனமஞ்சிகை வருணனை**

**வானோ ருலகி னல்லது மற்றவட்**
**கீனோ ருலகி னிணைதா னில்லெனக்**
**கண்டோ ராயினுங் கேட்டோ ராயினும்**
**தண்டாது புகழுந் தன்மைய ளாகித்**
**துதைபூங் கோதை சுமத்த லாற்றா**
**மதர்மா னோக்கின் மாதரஞ் சாயற்**
**பதரில் பணிமொழிப் பணைத்தோட் சின்னுதல்**
**மதர்வை நோக்கின் மதனமஞ் சிகைதன்**
**மலைபுரை மாடத் துயர்நிலை மருங்கின்**
**அணிச்சா லேகத் தணித்தகு துளையூ**
**டெறிபந் திழுக்குபு விழுதலி னோக்கி.** **(5:8: 62-72)**

என்ற பாடல் வரிகளின்வழி செறிந்த வளையலையுடைய தோள்களையுடைய அம்மதனமஞ்சிகைப் பற்றி வருணிக்கின்றார் ஆசிரியர்.

இவ்வாறு கொங்குவேளிர் ஆண், பெண் பாத்திரங்களை வருணித்துக்காட்டிள்ளார்.

### 3. குறியீட்டு உத்தி

ஒருபொருளைக் குறிக்க ஆசிரியர் இன்னொன்றைக் கூறி விளக்குவது குறியீட்டு உத்தி என்பர். இத்தகைய குறியீட்டு உத்தி பெருங்கதையில் காணமுடிகின்றது.

உதயணன் கண்ட கனவுகள் மூன்றும் பிரிந்த வாசவதத்தை மீண்டும் கிடைக்கப்போகிறாள், வாசவதத்தை மூலம் உதயணனுக்கு மகன் பிறக்கப்

போகிறான், அவன் தேவர்களும் பாராட்டும்படி வித்தியாதர உலகை அரசாளுவான் என்பதனை உணர்த்தும் செய்தியாகும். இச்செய்தியை,

| | | |
|---|---|---|
| **வெண்தாமரை** | **-** | **வாசவதத்தை** |
| **யானை வயிற்றில் புகல்** | **-** | **மகவு பிறத்தல்** |
| **வெள்ளேறு** | **-** | **ஆண்மகன்** |
| **வான்வெளி பறந்து** | | |
| **ஞாயிற்றை விழுங்குதல்** | **-** | **புதல்வன் வானுலகிலும் சென்று ஆட்சி செலுத்துவான்** |
| **முடிக்கலன்** | **-** | **அரச கிரீடம்** |

என்று குறியீட்டுப் பொருள் மூலம் கூறும் உத்தியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 4. உளவியல் உத்தி (கனவு)

'கனவு என்பது விருப்ப நிறைவேற்றம்' என்பதே ஃப்ராய்டின் அடிப்படைக் கோட்பாடு. அதை நேரடியாக புரிந்து கொள்வதில் பலருக்கு சிரமம் இருக்கலாம். ஆனால் ஒருவரின் கனவை முழுமையாக ஆய்வு செய்தால் அதை விளக்க முடியும் என்று பல நடைமுறை அனுபவங்களைக் கொண்டு பிராய்டு கூறியுள்ளார்.

சங்க இலக்கியத்தில் ஏறத்தாழ நாற்பத்து நான்கு கனவுக் குறிப்புகள் காணப்படுகின்றன. சில தலைவன் தலைவியர் கண்டனவாகவும், சில பறவை, விலங்குகள் கண்டனவாகவும் அமைகின்றன.[18]

வரைவு நிலை, புணர்ச்சி நிலை, நினைவோட்டம், நனவு நிலை உரைத்தல் போன்றவற்றை படைப்பு உத்தியாகக் கொண்டுள்ளது அக இலக்கியம்.

நெய்தற்கலியல் 'தோள் துறந்து அருளாதவர்' எனத் தொடங்கும் நல்லந்துவனார் பாடிய 128ஆம் பாடலில் தலைவி கண்ட கனவு இடம்பெற்றுள்ளது.

**கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்**

**புதுவது கவினினை யென்றி யாயின்**

**நனவின் வாரா நயனி லாளனைக்**

**கனவிற் கண்டியான் செய்தது கேளினி!**

**………………..**

**கனவினாற் கண்டேன் தோழிகாண் தகக்**

**கனவின் வந்த கானலந் சேர்ப்பன்**

**நனவின் வருதலு முண்டென**

**அனைவரை நின்றது என் அரும் பெறல் உயிரே. (கலித்: 128: 6-26)**

அணைத்த தோளை விலக்கிவிட்டு அருளாமல் நிற்பவர் போன்று வாடைக்காற்றில் மணம் பரப்பிக்கொண்டு தலையைச் சாய்த்துக் கொண்டு நிற்கும் தாழை மரத்தின் ஆடும் மடலில் இருந்துகொண்டு இருண்ட நள்ளிரவில் அசைநடை போடும் நாரை இடைவிடாமல் குரல் எழுப்பிக்கொண்டே இருக்கும் சேர்ப்பு நிலத்தின் தலைவனைக் கண்டது போலப் புத்தழகு பெற்றிருக்கிறேனே ஏன் தெரியுமா, நனவில் வராத நயமில்லாதவனைக் கனவில் கண்டு நான் செய்ததைக் கேள் என்று தோழியிடம் தலைவி சொல்கிறாள். அவன் அடியில் விழுந்து பணிவது போலவும் கனவில் கண்டேன். வணங்கி நிற்கும் அவனை நான் என் மாலையைக் கோலாகக் கொண்டு நான் அடிப்பது போலவும், அவன் ‘நான் பிழை செய்தேன்’ என்று சொல்லிக்கொண்டு நடுங்கி, ‘நீ அறியாப் பேதை’ என்று சொல்லி என்னைத் தெளிவிப்பான் போலவும் கனவு கண்டேன். இப்படியெல்லாம் கனவில் கண்டேன். கனவில் வந்த அவன் நனவில் வருவான் என்று எண்ணி, அது வரையில் என் உயிர் நிற்கின்றது என்று தலைவி தோழியிடம் சொல்லவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

இவ்வாறு சங்க இலக்கிய அகப்பொருளில் கனவுகள் குறித்த செய்திகளைக் காணமுடிகின்றது.

இதுபோன்று பெருங்கதைக் காப்பியத்தின் திருப்புமுனையாக கனவு அமைவதாகக் கொங்குவேளிர் அமைத்துள்ளார்.

உதயணன் கண்ட கனவுகள் மூன்றும் உளவியல் உத்தியில் அடங்குகின்றன.

## முதல் கனவு

**பொருக்கென**

**நீருடை வரைப்பி னெடுமொழி நிறீஇய**

**பிரியாப் பெருக்கத்துப் பிரச்சோ தனன்மகள்**

**அரியார் தடங்க ணதிநா கரிகி**

**மணியிருங் கூந்தன் மாசுகண் புதைப்பப்**

**பிணியொடு பின்னி யணிபெறத் தாழ்ந்து**

**புல்லெனக் கிடந்த புறத்தள் பொள்ளென**

**நனவிற் போலக் காதலன் முகத்தே**

**கனவிற் தோன்றக் காளையும் விரும்பி**

**மாசில் கற்பின் வாசவ தத்தாய்**

**வன்க ணாளனேன் புன்கண் டீர**

**வந்தனை யோவென வாய்திறந் தரற்றப்**

**பைந்தளிர்க் கோதை பையென மிழற்றி**

**ஏதில னன்னாட் டெற்றுறந் திறந்தனை**

**காதலர் போலுங் கட்டுரை யொழிகெனக்**

**குறுகா ளகறொறு மறுகுபு மயங்கி**

**நிற்பெயர்ப் பாள னிப்பதி யுளனெனக்**

**கற்பயில் பழுவங் கடந்தியான் வந்தனென்**

**வெகுள னீயெனத் தவளையங் கிண்கிணிச்**

**சேவடி சேர்ந்து செறியப் பற்றி**

**வென்றடு குருசில் வீழ்ந்தன னிரப்ப**

**மதுநாறு தெரியன் மகதவன் றங்கை**

**பதுமா பதிவயிற் பசைந்தவள் வைத்த**

**………**

**கடுங்கதிர் கனலி கால்சீத் தெழுதர**

**விடிந்தது மாதோ வியலிருள் விரைந்தென். (3:9: 149-183)**

மகதகாண்டத்தில் கண்ணி தடுமாறியது காதையில் இடம்பெற்றுள்ளது இக்கனவுச் செய்தி. உதயணின் முதல் கனவு. அவனது குற்றஉணர்வினால் ஏற்பட்டதாகும். வாசவதத்தையைப் பிரிந்து அவளைத் தேடும் உதயணன் பதுமாபதியைக் கண்டு காதலிக்கும் பொழுது இக்கனவு அவனுக்கு வருகின்றது. வாசவதத்தை இவன்மீது கோபம் கொண்டு ஊடுவது போல் கனவு காண்கிறான்.

இது அவனது குற்ற உணர்வின் வெளிப்பாடாகும். அவன் அவளை நனவிலி நிலையிலேயே சமாதானம் செய்கிறான்.

**இரண்டாம் கனவு**

**வையக வரைப்பின்**
**நாற்கட லும்பர் நாக வேதிகைப்**
**பாற்கடற் பரப்பிற் பனித்திரை நடுவண்**
**வாயுங் கண்ணுங் குளம்பும் பவளத்**
**தாயொளி பழித்த வழகிற் றாகி**
**விரிகதிர்த் திங்களொடு வெண்பனிங் குமிழும்**
**உருவொளி யுடைத்தா யுட்குவரத் தோன்றி**
**வயிரத் தன்ன வைந்நுனை மருப்பிற்**
**செயிர்படு நோக்கமொடு சிறப்பிற் கமைந்ததோர்**
**வெண்டா ரணிந்த வெள்ளேறு கிடந்த**
**வண்டார் தாதின் வெண்டா மரைப்பூ**
**அங்கண் வரைப்பி னமரிறை யருள்வகைப்**
**பொங்குநிதிக் கிழவன் போற்றவு மணப்ப**
**மங்கலங் கதிர்த்த வங்கலு ழாகத்துத்**
**தெய்வ மகடூஉ மெய்வயிற் பணித்துப்**
**பையு ளரக் கைவயிற் கொடுத்தலும். (4: 65-80)**

வத்தகவ காண்டத்தில் கனாவிறுத்தது காதையில் உதயணனின் இரண்டாவது கனவானது இடம்பெற்றுள்ளது. வாசவதத்தைக்குக் கற்பித்துக் கொடுத்த யாழ்பயிற்சியைத் தனக்கும் கற்பித்துக் கொடுக்குமாறு பதுமாபதி வேண்டினாள். அப்போது உதயணனுக்கு வாசவதத்தையின் நினைவு வந்து துயருற்றான். அவளை எண்ணியே துயிலும் போது கனவு தோன்றுகிறது. அழகிய வெள்ளேற்றின் மீது ஊர்ந்து வந்த இந்திரன் அருள, தெய்வஅழகு பொருந்திய பத்ராபதி (தெய்வ மகள்) துன்பம் எல்லாம் தீரும்படி உண்மையை எடுத்துக்கூறி, கையிற்பிடித்துத் தந்த பெண்ணை (வாசவதத்தை) மணந்ததாகக் கனவு காண்கிறான்.

உதயணன் வாசவதத்தையை கண்டு காதல் கொண்டது முதல் அவளைப் பிரிந்தது வரை எண்ணிப் பார்க்கின்ற போது உளவியல் அடிப்படையில் இக்கனவு அவனுக்குத் தோன்றுகிறது.

**மூன்றாம் கனவு**

**துயிலிடை யாமத்துத் துளங்குபு தோன்றி**
**அயில்வே னெடுங்கணோ ராயிழை யணுகி**
**அருளு மெம்மிறை யெழுபுவி யளித்தற்குப்**
**பொருளு மதுவே போதுக வென்றலின்**
**யாரவன் கூறென வவ்வழி யிறைஞ்சிப்**
**பேரவ ளுரைத்தலிற் பெருமக னோக்கித்**
**துன்பமு மின்பமுந் துறக்க லாற்றா**
**மன்பெருந் தேவியொடு செலவுள மமர்தலின்**
**மற்றதை யுணர்த்தி முற்றிழை யெழுகெனப்**
**பற்றுந ளுடனே பறந்துவிசும் பிவர**
**மேலுங் கீழு மேவர நோக்கி**
**மாசறு மகளிர் மம்ம ரெய்தி**
**ஆனாக் கனவிடை மாநிதிக்கிழவன்**
**விளங்கவை நாப்பட் டுளங்கினா் புகுதலின்**
**அரிமா சுமந்த வமளி காட்டத்**
**திருமா ணாகத்துத் தேவியொ டேறி**
**இருந்த பொழுதிற் பொருந்திய வல்லியுள்**
**வெள்ளேறு கிடந்த வெண்டா மரைப்பூக்**
**கொள்வழி யெழுதிய கொடுஞ்சி யுடைத்தோ்ப்**
**பொன்னிய றொடரிற் புதல்வ னிருத்தலின்**
………
**காய்கதிர்க் கனலியிற் கதுமெனப் போழ்ந்து**
**புக்கது வீழ்தலும் பொருக்கென வெரீஇ**
**எழுந்த மாதரொ டிறைவனு மேற்று.** (5:1: 76-110)

வாசவதத்தையிடம் இன்பம் துய்த்துப் பின் துயின்ற பொழுது உதயணன் கனவு கண்டதாக இப்பகுதி அமைந்துள்ளது. ஒரு தெய்வமகள் அவன் முன் தோன்றி என்னுடைய இறைவன் உனக்கு எழுபுவியும் அளிக்க இருக்கிறான் என்கிறாள். அதற்கு அவன் யாரவன் என கேட்க, அவள் பெயர் கூறுகிறாள். குபேரனைக் காண உதயணன் வாசவதத்தையுடன் அந்தரம் வழியாகப் பறந்து செல்ல அந்தத் தெய்வமகள் உதவுகிறாள். அங்கு குபேரன் சொன்ன இடத்தில் வாசவதத்தையுடன் அமர்கிறான் உதயணன். வெண்தாமரை பூவினைக் அக்குபேரன் வழங்க அதனுள் எழுதப்பட்ட கொடிஞ்சியை உடைய தேரினது பொன்னால் ஆன சங்கிலியின் மேல் ஒரு மகவு இருந்தது. அதனை அத்தெய்வமகள் உதயணனுக்கு அளிக்கிறாள். உதயணன் அதை தன் தேவி வாசவதத்தைக்கு அளிக்க அவள் அதனை வாங்கித் தன் மார்போடு அணைத்துக்கொள்கிறாள். அது அவள் மார்பினைப் பிளந்து அவள் வயிற்றினுள் புகுந்ததால் அஞ்சி வாசவதத்தை கனவில் எழுவதாக கனாக்கண்டான் உதயணன்.

இக்கனவு அவனது எதிர்ப்பார்ப்புகளை வெளிப்படுத்தும் விதமாக எழுந்துள்ளது என்பதனை அறியமுடிகின்றது.

### 5. கடித உத்தி

உதயணன் மானனீகை காதல் உணர்வுகள், எண்ணங்கள், செயல்கள் போன்றவற்றைப் புதுமையான முறையில் நெற்றியில் காதற்கடிதம் எழுதியதாகப் படைத்துள்ளார் கொங்குவேளிர்.

சங்க இலக்கியத்தில் இது போன்ற உத்தி காணப்படவில்லை.

கடிதம் நாட்குறிப்பு இவற்றின் வழி எழுத்தாளர் கதையை நடத்திச் செல்வதுண்டு. பாத்திரங்கள் பிற பாத்திரங்களிடம் தங்களின் உணர்ச்சிகளை நேரடியாக வெளிப்படுத்த விழையாத நிலையில் ஆசிரியர் மடல் உத்தியைப் பயன்படுத்துவதுண்டு.[19]

தன் மனைவியும் அவள் தோழியர்களும் பந்தாடுவதனை மறைந்திருந்து காண்கிறான் உதயணன். அதில் சிறப்பாக ஆடிய மானனீகையைக் கண்டு காதல் வயப்படுகிறான். அவளை தன் மனைவி வாசவதத்தைக்கு வண்ணமகளாய்

நியமிக்கின்றான். இங்கு ஆசிரியர் நுதல்வழி உத்தியைக் (கடித உத்தி) கையாளுகின்றார்.

மானனீகை அவளை அடி முதல் தலை வரை ஒப்பனை செய்கிறாள். அதனை அவள் உதயணனிடம் காட்ட அவன் அப்புனைவு அழகாயில்லை. மானனீகைக்கு இக்கலையில் போதிய வல்லமை இல்லை என்று கூறி அதை அழித்து அவன் மானனீகை அறிந்த யவன மொழியில் பூந்தாதினையும், சந்தனகுழம்பையும் சேர்த்து வாசவதத்தையின் நெற்றியில் கோலம் செய்வது போல மானனீகைக்குக் காதல் கடிதம் எழுதுகிறான்.

**ஒடியா விழுச்சீ ருதயண னோலை**
**கொடியேர் மருங்குற் குயின்மொழிச் செவ்வாய்**
**மான னீகை காண்க சேணுயர்**
**மாட மீமிசை மயிலிறை கொண்டென**
**ஆடன் மகளிரொ டமர்ந்தொருங் கீண்டி**
**முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்**
**பந்துவிளை யாட்டினுட் பாவைதன் முகத்துச்**
**சிந்தரி நெடுங்கணென் னெஞ்சகங் கிழிப்பக்**
**கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்**
**ஆற்றே னவ்வழ லவிக்குமர் மருந்து**
**கோற்றேன் கிளவிதன் குவிமுலை யாகும்**
**பந்தடி தானுறப் பறையடி யுற்றவென்**
**சிந்தையு நிலையுஞ் செப்புதற் கரிதெனச்**
**சேம மில்லாச் சிறுநுண் மருங்குற்**
**காதார மாகி யதனொடு தளரா**
**அருந்தனந் தாங்கி யழியுமென் னெஞ்சிற்**
**பெருந்துயர் தீர்க்கு மருந்து தானே**
**.........**
**மெல்லியற் கொத்த விவையெனப் புகழ்ந்து**
**புல்லினன் றேவியைச் செல்கென விடலும்.** **(4:13: 63-93)**

பூங்கொடி போன்ற நுண்ணிய இடையையும் குயில் போன்ற மொழியையும் சிவந்த வாயையும் உடைய மானனீகை. என்னுடைய கடிதத்தைப் பார்ப்பாயாக என்று கூறி நீ பந்தாடிய போது உன் வேல் போன்ற கண்கள் என் நெஞ்சினைக் கிழித்தது. அந்த புண்ணோடு வாழ்வது இனி என்னால் இயலாது. இந்தக் காமமாகிய வெங்கடலிலே நான் மூழ்காதபடி நீ தெப்பம் போல எனக்கு உதவி புரிவாயாக! எனவும், இந்நோயினால் உயிர் போய்விடின் நீ செய்தற்குரிய உதவி ஒன்றுமில்லாமல் போகும். இந்த இளமைப் பருவம் போய்விட்டால் அதனை மீண்டும் வருவித்துக் கொள்ள அது நமக்கு கிடைப்பதும் இல்லை. நான் இன்னும் கூறுவதற்கு இவ்வேட்டில் (நெற்றியில்) இடம் இல்லாமையால் அதனை எழுதாமல் விடுகின்றேன். எனது இக்குறையைத் தீர்க்கும்படி உன்னை இரந்து கேட்கின்றேன் எனக்கு அருள்வாயாக என்று உதயணன் எழுதி முடித்து வாசவதத்தையைப் பார்த்து 'உன்னுடைய அழகிற்கேற்ற அலங்காரம் இவையே! என்று அவளைப் புகழ்ந்து தழுவி இனி நீ செல்க' என்று கூறி அனுப்பினான்.

கணவன் எழுதிய கோலத்தை வாசவதத்தை மானனீகையிடம் காட்டினாள்.

**கோயில் குறுக வாய்வளை யணுகலும்**
**காவலன் புனைந்தது காணெனக் கண்ட**
**காசறு சிறப்பிற் கோசலன் மடமகள்**
**வாசக முணராக் கூசின ளாகிப்**
**பெருமக னெழுதிய பேரலங் காரத்**
**திருமுக மழகுடைத் தெனமருட் டினளாய்**
**உட்கு நாணு மொருங்குவந் தடைய**
**நற்பல கூறி யப்பகல் கழிந்தபின்.** **(4:13: 94-101)**

உதயணன் யவன மொழி எழுத்தாலே எழுதியதைக் கண்டு உணர்ந்து பெரிதும் நாணியவளாய், 'பெருமாட்டீ! பெருமான் எழுதிய பேரலங்காரம் மிகமிக அழகாக உள்ளது' என்று வித்தகம்பட கூறி, அச்சமும் நாணமும் தன் உள்ளத்தே கொண்டவளாய் அதை மறைக்கப் பலவற்றைக் கூற பகற்பொழுது கழிந்தது.

மறுநாள் காலையில் வாசவதத்தைக்குப் புனைவு செய்து அவள் கூந்தலின் அருகே பிறர் அறியாதவாறு உதயணனுக்கு யவன மொழியில் மறுமொழி அனுப்பினாள்.

**முழுதிய லருள்கொண் டடியனேன் பொருளா**
**எழுதிய திருமுகம் பழுதுபட லின்றிக்**
**கண்டேன் காவல னருள்வகை யென்மாட்**
**டுண்டே யாயினு மொழிகவெம் பெருமகன்**
**மடந்தையர்க் கெவ்வா றியைந்ததை யியையும்**
**பொருந்திய பல்லுரை யுயர்ந்தோர்க் காகும்**
**சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம்**
**இயைவ தன்றா லிவ்வயி னொருவரும்**
**காணா ரென்று காவலு ளிருந்து**
**பேணா செய்தல் பெண்பிறந் தோருக்**
**கியல்பு மன்றே யயலோ ருரைக்கும்**
**புறஞ்சொலு மன்றி யறந்தலை நீங்கும்**
**திறம்பல வாயினுங் குறைந்தவென் றிறந்து**
**வைத்ததை யிகழ்ந்து மறப்பது பொருளென**
**உற்றவண் மறுமொழி மற்றெழு தினளாய்**
**அடியேற் கியைவ திதுவென விடலும்.** **(4:13: 110-125)**

எம்பெருமானே! தங்கள் திருவருள் அடிச்சியின்பால் உண்டு என்பதனை அறிந்தேன். இருந்தாலும் அரசர் பெருமான் அதனை இப்பொழுது தவிர்த்தல் வேண்டும். கடிதத்தில் எழுதியுள்ளது கோப்பெருந்தேவி போன்ற அரச மகளிர்க்குப் பொருந்தக்கூடியது என்னைப் போன்ற பணிமகளிர்க்கு ஒரு சிறிதும் பொருந்தாது. காவலில் இருக்கும் நான் பிறர் காணார் என்று தகாதன செய்தல் இயல்பன்று. அப்படிச் செய்தால் பழியுண்டாகும். தருமமும் நீங்கிவிடும். மிகத் தாழ்ந்த என்னிடம் உள்ள தங்கள் திருவருளை அறவே மறந்து விடுதலே நல்லது என்று எழுதி முடித்து வாசவதத்தையிடம், ‘பெருமாட்டீ! அடியேளுக்கு தெரிந்த அலங்காரம் இவ்வளவே’ என்று கூறி அவளை விடுத்தாள். வாசவதத்தை அரசனை அடைந்தாள்.

அவன் மானனீகை எழுதியதைக் கண்டு, நெருப்புச் சுட்ட புண்ணின்மேல் வேல் நுழைந்தது போலச் பெரிதும் மனம் கலங்கினான். 'தேவி! இன்றும் புனைவு சரியில்லை, இங்கு வருக' என்று கூறி, 'மானனீகாய்! இன்றைக்குள் உன்னை அடையவில்லை என்றால் என் உயிர் சென்றதாக எண்ணிக்கொள் என்று மறுமொழிச் செய்தியை வாசவதத்தையின் நெற்றியிலேயே எழுதி, 'இந்தப் புதிய அலங்காரத்தை உன் பணிமகளிடம் காட்டுவாயாக' என்று அனுப்பினான். இதனை,

**வடிவே லுண்கண் வாசவ தத்தை**
**திண்டிற லரசனைச் சென்றனள் வணங்கலும்**
**கண்டன னாகிக் கணங்குழை யெழுதிய**
**இயனோக் கினனா யியையா வாசகம்**
**தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தெனக்**
**கலங்கின னாகி யிலங்கிழைக் கீதோர்**
**நலங்கவின் காட்ட நணுகென வணுகிக்**
**கண்ட முறைமையிற் பண்டிய லாக்கவல்**
**கொண்டன னாகி யொண்டொடி யாகம்**
**இன்றை யெல்லையு ளியையா தாயிற்**
**சென்றதென் னுயிரெனத் தேவிமுகத் தெழுதி**
**வாட்டிறல் வேந்தன் மீட்டனன் விடுத்தலின்.** (4:13: 126-137)

என்பதன் வழி அறியமுடிகின்றது.

அதனைக் கண்ட மானனீகை இனியும் மறுக்க மனமின்றித் தன் மனதினைத் திண்ணிக்கொண்டு மறுநாள் காலையில் வாசவதத்தையின் நெற்றியில் 'இன்று இரவு கூத்தப்பள்ளியிலுள்ள குச்சரக்குடிசைத் திண்ணைக்கு வந்தருள்க' என்று இரவுக்குறியிடம் எழுதி அனுப்பினாள். இதனை,

**பெருமகள் செல்லத் திருமகள் வாசகக்**
**கரும மெல்லா மொருமையி னுணர்ந்து**
**வயாத்தீர் வதற்கோ ருயாத்துணை யின்றி**
**மறுசுழிப் பட்ட நறுமலர் போலக்**
**கொட்புறு நெஞ்சினைத் திட்பங் கொளீஇ**

**விளைக பொலிக வேந்த னுறுகுறை**

**களைகுவ லின்றெனுங் கருத்தொடு புலம்பி**

**அற்றை வைகல் கழிந்தபி னவளை**

**மற்றுய ரணிநலம் வழிநாட் புனைஇக்**

**கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுட்**

**பாற்படு வேதிகை சேர்த்தன ளாகி**

**அரவுக்குறியி னயலவ ரறியா**

**இரவுக்குறியி னியல்பட வெழுதி**

**மாபெருந் தேவியை விடுத்தபின். (4:13: 138-151)**

என்பதன் வழி அறியலாம்.

அவள் எழுதியதனைக் கண்டு அரசன் மகிழ்ந்து வாசவதத்தையிடம், 'அம்மானனீகை நமக்கு அஞ்சியவளாய் இன்றைக்கு செய்துள்ள கோலம் மிகவும் நன்றாய் உள்ளது' என்று சொல்லுகின்றான். இதனை,

**மற்றவள்**

**தீவிய மொழியொடு சேதிபற் குறுகி**

**நோன்றாள் வணங்கித் தோன்ற நிற்றலும்**

**திருநுதன் மீமிசைத் திறத்துளிகக் கிடந்த**

**அருளோர் வாசகந் தெருளுற வறிந்து**

**மற்றவள் பயந்தனள் பொற்புற வெழுதிய**

**இற்றைப் புதுநல மினிதென வியம்பி**

**மாதர் நோக்கின் மான னீகைகட்**

**காமம் பெருகிக் காதல் கடிகொள**

**மாமனத் தடக்கித் தேவியொ டினியன**

**கூறியப் பகல்போ யேறிய பின்றை. (4:13: 151-161)**

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

கடிதம் எழுதும் இப்புதிய உத்தி கொங்குவேளிரின் பெருங்கதையில் காணமுடிகின்றது. அதிலும் குறிப்பாக காதல் உணர்வை வெளிப்படுத்த இவ்வுத்தியை அவர் கையாண்டுள்ளது புதுமையானது ஆகும்.

## 6. கற்பனை உத்தி

### மேலைநாட்டார் கருத்துக்கள்

கற்பனைத்திறன் என்பது புதிர்நிலை வாய்ந்ததாகவும், விளக்க இயலாததாகவும் உள்ளது. அதனுடைய விளைவுகளைக் கொண்டே அத்திறனை உணரமுடிகிறது என்கிறார் இரஷ்கின்.[20]

கற்பனைக்குக் கட்புலனே (sense of sight) அடிப்படையானது. அக்கட்புலனே கருத்துக்கள் அமைந்து கற்பனையை நல்குகிறது. கற்பனை அல்லது மனப்படைப்பு இவ்விரண்டிற்கும் வேறுபாடில்லை இரண்டும் இன்பந்தருவதாகும் என்கிறார் அடிசன்.[21]

கற்பனையாவது படிமங்களின் கருத்தினை ஏற்றுக் கூறுவதும் அவற்றை அருவமாக்குவதும் ஓரளவு மாற்றியமைப்பதும் அவற்றிற்கு ஓர் முழுமை உருவம் வழங்குவதும் ஆகிய சக்தியாகும். கற்பனை எண்ணங்களை அல்லது படிமங்களை இணைக்கிறது. ஒன்றோடொன்று கலக்கும்படிச் செய்து ஒன்றாக்குகிறது. அது படிமங்களை ஓர் உருவாக்கிப் படைக்கிறது என்கிறார் வில்லியம் தெய்லர்.[22]

### தமிழறிஞர்கள் கருத்துக்கள்

கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாதது. சொற்களால் உணர்த்த முடியாதது. அதன் பயன்களை மட்டும் கொண்டே அ∴து அறியப் பெறுவதொன்றாகும் என்கிறார் ந. சுப்புரெட்டியார்.[23]

கவிதை என்பது யாது என்கையில் ‘கற்பனையின் எழுச்சியும் உந்துதலுமே’ என்கிறார் வெ. கனகசுந்தரம்.[24]

காணாத ஒன்றையும், கேட்காத ஒன்றையும் எண்ணிப் பார்த்தல் கற்பனை எனலாம். அக்கற்பனையைப் படைக்கும் கருவிகளை மனத்தின் கண் என்றும், மனத்தின் செவி என்றும் கூறுவர் என்கிறார் மு. வரதராசன்.[25]

படைப்பாளன் தன் அனுபவத்தைக் கொண்டு இயற்கையாகவோ அல்லது செயற்கையாகவோ ஒன்றை தத்துருவமாகக் கூறுவதனைக் கற்பனை எனலாம். இக்கற்பனையைத் தன் படைப்புத் திறனில் வெளிக்காட்டியுள்ளார் கொங்குவேளிர்.

### அன்னப்பறவை

**பால்வெண் குருகின் பன்மயிர்ச் சேவல்**
**பூம்பொறிப் பெடையைப் புலவி யுணர்த்திப்**

**பொறிப்பூம் பள்ளி புகாஅ தயல**

**மதிதோய் மாடத்து மழலையம் புறவொடு**

**வெள்ளிவெண் மாடத்துப் பள்ளி கொள்ளும்.** (1:54: 14-18)

பால்போன்ற வெண்மையுடைய அன்னப் பறவை இனத்து சேவலன்னம் அழகிய புள்ளிகளையுடைய தம்பெடை அன்னத்துடன் ஊடல் கொண்டு, தன் மலர்ப் படுக்கைக்குச் செல்லாமல், அருகிருந்த மாடப்புரைகளில் தங்கியிருந்த புறாக்களோடு தூங்கியது. இதன்வழி ஆசிரியரின் கற்பனை புலனாகின்றது.

**யானைக்கூட்டம்**

**பிடிக்கணந் தழீஇய பெருங்கை யானை**

**இடிக்குர லியம்பி யெவ்வழி மருங்கினும்**

**நீர்வழிக் கணவரு நெடுங்கைய வாகிக்**

**காரிரு முகிலிற் கானம் பரம்ப.** (1:54: 40-43)

என்ற வரிகளில், தத்தம் பிடியானையைத் தழுவிய பெரிய கையையுடைய களிற்றியானைகள் இடிபோன்ற தமது குரலாலே பிளிறி எல்லாத் திசையிலும் நீர் இருக்கின்றதா என்று ஆராயும் பொருட்டு உயர்த்திய கையையுடையவனவாகிக் கரிய பெரிய முகிற் கூட்டம் சென்றது போன்று உள்ளது என்று கற்பனையை வெளிக்காட்டுகின்றார்.

**வண்டு**

**பசைந்துழிப் பழகல் செல்லாது பற்றுவிட்**

**டுவந்துழித் தவிரா தோடுதல் காமுறும்**

**இளையோ ருள்ளம் போலத் தளையவிழ்ந்**

**தூதுமல ரொழியத் தாதுபெற நயந்து**

**கார்புன மருங்கி னார்த்தனை திரிதரும்**

**அஞ்சிறை யறுகாற் செம்பொறி வண்டே.** (3:1: 169-174)

தம் மீது அன்பு கொண்டு இருப்பவரை விடுத்து, தம் மனம் விரும்பிய விடமெல்லாம் ஓடுதலையே விரும்புகின்ற இளமையுடைய காமுகன் போன்று, உன்னை கண்டு மலரும் மலரினை விட்டு புதிய தேன் பருகுவதனை விரும்பி கரிய காட்டினுள்

ஆரவாரித்துத் திரியும் ஆறு கால்களையுடைய சிவந்த புள்ளிகளையுடைய வண்டே! என்று வண்டின் இயல்பைக் கற்பனையாகச் சுட்டியுள்ளார் கொங்குவேளிர்.

**தென்றல்**

**பொங்குமழை தவழும் பொதியின் மீமிசைச்**
**சந்தனச் சோலைதொறுந் தலைச்சென் றாடி**
**அசும்பிவ ரடைகரைப் பசுந்தோ டுளரிச்**
**சுள்ளிவெண் போது சுரும்புண விரித்து**
**மணிவாய் நீலத் தணிமுகை யலர்த்தி**
**ஒண்பூங் காந்த ளூழக்கிச் சந்தனத்**
**தந்த ணறுமல ரவிழ மலர்த்தி**
**நறுங்கூ தாளத்து நாண்மல ரளைஇக்**
**குறுந்தாட் குரவின் குவிமுகை தொலைச்சி**
**முல்லைப் போதி னுள்ளமிழ் துணாஅப்**
**பல்பிட வத்துப் பனிமலர் மறுகிப்**
**பொற்றார்க் கொன்றை நற்றாது நயந்து**
**சாத்துவினைக் கம்மியன் கூட்டுவினை யமைத்துப்**
**பல்லுறுப் படக்கிய பையகங் கமழ**
**எல்லுறு மாலை யிமயத் துயர்வரை**
**அல்குதற் கெழுந்த வந்தண் டென்றால்.** **(3:1: 184-199)**

மிக்க முகில்கள் தவழுகின்ற பொதிய மாமலையினது உச்சியிலமைந்த சந்தனமரம் சோலை தோறும் புகுந்து அங்கே உலாவிப் பின்னர், நீரூற்றுக்கள் பெருகுகின்ற நீரடைகரைகள் தோறும் உள்ள மலர்களை அசைத்து, அவற்றின் நறுமணங்களை முகந்துகொண்டு, மராமரத்தின் மலர்களை மோதி அலைத்து வண்டுகள் தேன் பருகுமாறு மலர்வித்தும், சந்தன மரத்தினது அழகிய குளிர்ந்த நறிய மலர்கள் விரியும்படி மலர்வித்தும், இவைகளின் மணத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு, மேலும் பல வகையான மலர்களை மலரச் செய்தும், பல்வேறு மணப் பொருள்களையும் ஒருங்கே சேர்த்துக் கொண்டு மணம் கமழ, இரவு

வருவதற்குக் காரணமான மாலைக்காலத்தே இமயமாகிய உயர்ந்த மலையிலே சென்று தங்குதற்கெழுந்த அழகிய குளிர்ந்த தென்றலே! தென்றலே! கேள்,

இனிய சொற்களை உடைய என் ஆருயிர்க் காதலியாகிய ஒளி வளையணிந்த தோளையுடைய வாசவதத்தையை, நீ செல்லும் எல்லா வழிகளிலும் ஆராய்ந்து சென்று அவளைக் கண்டு, அவளுடைய பெரிய இளமையுடைய அழகிய முலைகளிடத்தே அணியப்பட்ட குழம்பாகிய சாந்தினை நீ நன்றாக முழுகி விளையாடி, அந்த நறுமணத்தோடே மீண்டும் என்னிடம் வந்து, அவலமுடைய என்னெஞ்சத்தின் வருத்தமாகிய நோய் தீரும்படி என் மயக்கத்தை மாற்றுவாயானால் நின்பால் உயர்வாக மதிக்கப்படும் உன்னுடைய இயற்கைப் பண்பாகிய அருளுடைமை சிறப்படையும் என்றும், இவற்றைப் போல் பிறவற்றையும் கூறி அவளை எண்ணித் துயரடைந்தான் உதயணன்.

இவ்வாறு இயற்கையை ஆசிரியர் கற்பனை செய்து கூறும் செய்தியினை பெருங்கதையில் காணமுடிகின்றது.

**மந்திகள் ஆட்டம்**

**அருவி அரற்றிசை அணிமுழ வாகக்**
**கருவிரன் மந்தி பாடக் கடுவன்**
**குரவை அயருங் குன்றச் சாரல். (2:16: 81-83)**

அருவி முழக்கத்தினை அழகிய மத்தள முழக்கமாகக் கொண்டு மந்திகள் பாட கடுவன்கள் அம்மலைச்சாரலில் குரவைக் கூத்தாடுகின்றன என்பது போன்று கொங்குவேளிர் கற்பனை உத்தியினைப் பெருங்கதையில் கையாண்டுள்ளார். நீண்ட நெடிய கற்பனைகள் சங்க அகப்பாடல்களில் காண்பது அரிது. காப்பிய மரபில் கற்பனைகளின் பங்கு பெரிது. காப்பியக் கவிஞர் தம் கதைப்போக்கை விவரிக்க, அதிகமாக கற்பனைப் புனைவைக் கையாள்வர்.

சங்க இலக்கியத்தில் கற்பனை உத்தியை பின்வருமாறு காணலாம்.

விழாக் காலத்தில் விறலியர் ஆடும்போது கோடியர் முழவு முழக்குவர். அது போல மயில் ஆடும்போது ஆண்குரங்கு கடுவன் பலாப்பழத்தைப் பாறையில் வைத்துக்கொண்டு தன் பெண்குரங்கு மந்தியை அழைத்ததாக கூறும் புலவரின் கற்பனையை,

**முடவு முதிர் பலவின் குடம் மருள் பெரும்பழம்**

**பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்**

**பாடு இமிழ் அருவிப் பாறை மருங்கின்**

**ஆடு மயில் முன்னது ஆக, கோடியர்**

**விழவு கொள் மூதூர் விறலி பின்றை.** (அக: 352: 1-5)

என்ற பாடலின் வழி அறியலாம்.

காந்தள் பூ மலரும் காட்சியினை,

**காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது**

**வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்**

**தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட**

**கடனறி மாக்கள்போல இடன் விட்டு**

**இதழ்களை யவிழ்ந்த ஏகல் வெற்பன்.** (குறுந்: 265)

என்ற பாடலில் ஆசிரியர் தம் கற்பனையை வெளிக்காட்டியுள்ளார். காந்தள் மலரும் வரை காத்திருக்கப் பெறாது வண்டுகள் மூடிய கொழுவிய அரும்பை தாமாகத் திறப்பதாக அவர் கற்பனை செய்துள்ளார். மொட்டு மலர வண்டுகள் தேனை உண்பது இயற்கையாகும். ஆனால் வண்டுகள் தாமாக முகைகளின் வாயினைத் திறப்பதாகக் கற்பனை செய்துள்ளார் புலவர்.

### 7. பின்னோக்கு உத்தி

முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவிற்குக் கொண்டுவந்து கதை தொடர்ந்து சொல்லிச் செல்லுதல் பின்னோக்கு உத்தி எனப்படும். முன்னர் நிகழ்ந்த செயல் ஒன்றை கதையின் இடையில் கூறுவது கதைப்போக்கை வாசகர் நன்குணரவும், நினைவுபடுத்திக் கொள்ளவும் பயன்படும். மேலும் கதை மாந்தர் ஒருவருக்கு அக்கதை நிகழ்வினை அறிவிப்பதற்கும் இந்த உத்தி உதவ வல்லது. இதனைப் பெருங்கதை ஆசிரியரும் திறம்படக் கையாண்டுள்ளார். இதனைப் பெருங்கதையில்,

**சாங்கியத்தாய் உதயணனிடம் முன்நிகழ்வு கூறல்**

**இன்ன ளென்றியா னென்முத லுரைப்பேன்**

**மன்னவன் மகனே மனத்திற் கொள்ளெனச்**

செம்மற் செங்கோ னுந்தை யவையத்

தென்னிகந் தொரீஇயின ளிளமையிற் கணவன்

தன்னிகந் தொரீஇயான் தகேஎன் ஆகக்

கொண்டோற் பிழைத்த தண்டந் தூக்கி

வடிக்க ணிட்டிகைப் பொடித்துக ளட்டிக்

குற்றங் கொல்லுமெங் கோப்பிழைப் பிலனென

முற்றந் தோறு மூதூ ரறிய

நெய்தற் புலைய னெறியிற் சாற்றிப்

பைதற் பம்பை யிடங்க ணெருக்கி

மணற்குடம் பூட்டி மாநீர் யமுனை

இடைக்கயத் தழுந்த விடீஇய செல்வுழி

………….

முந்தை யுணர்ந்தோர் வந்துநினக் குரைப்ப

யாமுங் காண்கங் கூமின் சென்றெனக்

கோல்கொண் மள்ளர் காலி னோடி

நம்பி வேஎண் மம்பி வருகென

ஆணையிற் றிரீஇய ரஞ்சன்மி னீரெனத்

தோணி யிழிப்புழித் துடுப்புநனி தீண்டி

நெற்றி யுற்ற குற்ற மிதுவென

……..

மற்று மவனே கற்றது நோக்கி

யானை யணிநிழற் படுதலி னந்தணி

தான் கொண் டெழுந்த தவத்துறை நீங்கித்

தானை வேந்தன் றாணிழற் றங்கி

முற்றிழை மகளிர்க்கு முதுக ணாமெனச்

செவ்வகை யுணர்ந்தோன் சேனைக் கணிமகன்

கோசிக னென்றவன் குறிப்பெயர் கூறி

அடையாண் கிளவியொ டறியக் கூறலும். (1:36: 149-201)

உதயணனிடம் சாங்கியத்தாய் தன் வரலாற்றினைக் கூறுவதாக இவ்வரிகள் அமைந்துள்ளன. என் இளம்பருவத்தில் என் கணவன் என்னைத் தனியே விட்டுப் போனதனால் என் மனம் போல் சென்று இல்வாழ்க்கையை விட்டுத் தீயயொழுக்கத்தில் சென்றமையால் உன் தந்தை சதானிகன் எனக்கு தண்டனை தரக்கூறினார். அதன்படி தண்டனையாக யமுனை யாற்றில் மணல் நிரப்பிய குடத்தொடு கட்டி நீரில் மூழ்கடிக்கும்படி கூறினான். அதனைக்காண மக்கள் ஆரவாரித்துக் கூடினார்கள். அவர்களின் ஆரவார ஒலியைக் கேட்டு நீயும் அங்கு வந்தாய். அங்குள்ளவர்கள் அதைப் பற்றி உன்னிடம் கூற, ஆற்றில் என்னை அழைத்துச் சென்றவர்கள் மீண்டும் உன்னிடம் அழைத்து வந்து காட்டுவதற்கு என்னை இறக்கிய போது அத்தோணித் துடுப்பு பட்டு என் நெற்றியில் பட்ட வடு இதுவாகும் என்று காட்டினாள். பின்பு அங்கிருந்த நிமித்திகன் ஒருவன் இவள் இனி தவவொழுக்கத்திற்குச் சென்று பின்பு ஓர் அரசர் ஆதரவுபெற்று அவளது மகளிர்க்குப் பாதுகாப்பாக அமைவாள் என்று கூறினார். அதன்படியே நடந்தது என்று சாங்கியத்தாய் தன்வரலாறு கூற உதயணன் அதைக்கேட்டு மனம் நெகிழ்ந்தான். அச்செய்தி வழி பின்னோக்கு உத்தியை ஆசிரியர் கையாண்டுள்ளமையைக் காணலாம்.

**யூகி - இடபகனுக்கு முன் நிகழ்வினைக் கூறல்**

**குஞ்சர வேட்டத்துக் கோள்இழுக் குற்ற**
**வெஞ்சின வேந்தனை விடுத்தல் வேண்டி**
**வஞ்ச இறுதி நெஞ்சுணத் தேற்றி**
**உஞ்சையம் பெரும்பதி ஒளிக்களம் புக்கு**
**மெய்ப்பேய்ப் படிவமொடு பொய்ப்பேய் ஆகி**
**………**
**செயற்படு கருமத் தியற்கை இற்றென**
**இப்பால் இறைமகற் போத்தந் தப்பால்**
**நிகழ்ந்ததை அறிதந் தொளித்தனன் ஆகி**
**வேறல் செய்கை வேந்தற் குண்மை**
**தேறன் மாக்களைத் திறவிதிற் காட்டிப்**

**பழந்தீர் மரவயிற் பறவை போலச்**

**செழும்பல் யாணர்ச் சேனைபின் ஒழிய**

**நம்பதிப் புகுதரக் கங்குற் போத்தந்**

**தியான்பின் போந்தனன் இதுவென அவன்வயின்**

**ஓங்கிய பெரும்புகழ் யூகி மேனாள்**

**பட்ட எல்லாம் பெட்டாங் குரைப்ப.** **(2:9: 37-117)**

உதயணனை மாயயானைக் கொண்டு பிரச்சோதனன் சிறைபடுத்திச் சென்றதும், அப்போது அங்கு சென்று நளகிரி என்னும் யானையை மதம்பிடிக்கச் செய்ததும், அதனை அடக்க முடியாமல் பிரச்சோதனன் வருந்திய நிலையில் உதயணன் அவ்யானையை அடக்கியதும், உதயணன் வாசவதத்தையைக் கண்டு காதல் கொள்வதனையும், அதனை மறைக்க ஒரு கணிகையர் பெண் மீது விருப்பம் கொள்வதாக யாவரும் அறியும்படி செய்ததையும், பின் அங்கு நடந்த நீர்விழாவின் போது வாசவதத்தையை யானைமீது ஏற்றிக்கொண்டு நம் நாடு அடைந்ததையும் கூறினான். பின்னர் அவர்களை அடுத்து நானும் இங்கு வந்து சேர்ந்ததாகவும் யூகி இடபகனுக்கு முன்னாளில் நிகழ்ந்த அனைத்தையும் கூறினான். இதுவும் பின்னோக்கு உத்தியை காட்டுகின்றது.

## யூகி பிரிவு உதயணன் புலம்பல்

யூகி இறந்தான் என்று அறிந்ததும் உதயணன் மனம் வருந்தி விக்கிர மன்னன் அரண்மனையில் வளர்ந்து வந்த இளமைக்காலத்தில் நடந்த நிகழ்வினை நினைக்கின்றான். சிறுவயதில் விளையாட்டையே விரும்பி உணவு உண்ணாமல் இருந்த போது நற்றாய் (மிருகாபதி) 'நம்பிக்கு உணவிடுதல் வேண்டா! பெறற்கருஞ் செல்வம் போன்ற என் மகன் யூகி மட்டும் உண்க' என்று கூறிய போது, 'தாயீர்! நீங்கள் என் மீது குணங்கண்டு போற்றுவீர் ஆயினும், வெகுள்வீர் ஆயினும் எங்கள் இருவர் மீதும் ஒப்ப கருதுவீர்' என்று கூறி 'அவர் செய் குற்றம் என் குற்றமே' என்று கூறினான். என் குற்றத்தினை அவன் குற்றமாக நினைக்கக்கூடியவன். அந்த இளம் பருவம் மட்டுமின்றி தற்போது கூட எனக்குத் தாழ்வு வரும் போதெல்லாம் தூண் போலத் தாங்கி, என் பின்னரே வரும் உரிமை உடையவன். இவ்வாறு இருந்துவிட்டு தற்போது என்னைத் தனியே விட்டுச் செல்வது ஒத்ததன்று. இது

மூர்க்கர்க்குரிய இயல்பே ஆகும் என்று கேட்போர் உள்ளம் உருகும்படி கூறிப் புலம்பினான். இதனை,

**விளையாட்டு விரும்பி அளையின வாகிய**

**இன்சுவை அடிசில் உண்பதும் ஒரீஇ**

**மன்பெருங் கோயிலுள் வளர்ந்த காலை**

**வேக நம்பிக்கு விலக்குக அடிசிலென்(று)**

**ஆகுபொருள் அறிவி அரும்பொருள் என்மகன்**

**யூகந் தராயன் உண்கென உண்ணாய்**

**குடிப்பெருந் தேவி அடிக்கலம் பற்றி**

**அருளினுங் காயினும் ஒப்ப தல்லதை**

**பொருளஃ. தன்று புரவலன் மாட்டென்**

**றென்செய் குற்றம் நின்கண் தாங்கி**

**அன்பளி சிறப்பித் தின்பதம் இயற்றல்**

**இளமைக் காலத்தும் இயல்பா உடையோய்**

**முதுமைக் காலத்து மதலையின் தாங்கிப்**

**பின்போக் குரிய பெருந்தகை யாள**

**முன்போக்கு விரும்புதன் மூர்க்கர தியல்பெனக்**

**கேட்டோர் வருக மீட்டுமீட் டரற்றப்**

**பூந்தார் மார்ப புலம்புகொண் டழீஇ.** **(2:10: 142-158)**

என்ற பகுதியில் சுட்டியுள்ளார் கொங்குவேளிர். 'பின்னோக்கு உத்தியை' இதில் ஆசிரியர் கையாண்டுள்ள திறம் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு, கொங்குவேளிர் முன் நடந்த ஒரு நிகழ்வினைப் பின்னர் கதாபாத்திரம் எடுத்துரைப்பதாகக் காட்டி தன் காப்பியக் கதைப்போக்கினைக் கொண்டு செலுத்துகிறார்.

## தொகுப்புரை

ஆக்குவோனின் படைப்பாற்றலும், தனித்தன்மையும் ஒவ்வொரு கூறிலும் வெளிப்படும் போது புலமை வன்மை தெரிகின்றது. அதனை நுனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது. உத்தி என்பதற்கு அகராதியும், நிகண்டுகளும் விளக்கம் தந்துள்ளன. 'உந்து' என்னும் அடிப்படைச் சொல் பல்வேறு பொருள்நிலைகளைக் கொண்டுள்ளது. இதன் திரிபே 'உத்தி' ஆகும். அணிகளில் சிறந்ததாகவும், முதன்மையானதாகவும் எல்லா அணிகளுக்கும் அடிப்படையானதாகவும் அமைவது உவமை ஆகும். தொல்காப்பியர், பரிமாற்கலைஞர், ச.வே.சு முதலியோர் இவ்வுமைக்கு விளக்கம் அளித்துள்ளனர்.

சங்க அகப்பாடல் வெளிப்பாட்டு உத்திகள் போன்று பெருங்கதையிலும் நிலம், பொழுது வருணனைகள் அமைகின்றன. அடைப்பெயர் (அடைமொழியோடு எதனையும் கூறும் மரபு) பெருங்கதையிலும் உள்ளது. கடித உத்தி (நுதல் வழி) அனுப்புவது காப்பியத்தின் பாற்பட்டது. தனிப்பாடலில் இவ்வுத்தி இல்லை.

சங்க இலக்கியங்களில் கூந்தலின் வேறு பெயர்களாக அளகம், கூந்தல், பித்தை, முச்சி, ஓதி, கூழை, கதுப்பு, குழல் போன்றவை கூறப்படுகின்றன. ஆற்றின் கருமையான அறல் (அறல் - மென்மையான மணல்) போன்ற கூந்தல், கருமுகில் போன்ற கூந்தல், நறுமணமுடைய கூந்தல், இருங்கூந்தல் (கருங்கூந்தல்) என்று கூறப்படுகின்றது. கரிய இருண்ட கூந்தல், நிறத்தால் மேகத்திற்கும், நீல மணிக்கும், கரிய வண்டுகளுக்கும், கரிய மைக்கும், இருளுக்கும் உவமிக்கப்பட்டது. கூந்தலில் சுருள்களும் மடிப்புகளும் ஆற்று அறலுக்கு உவமிக்கப்பட்டன. அவர்களின் அடர்ந்த கூந்தல் மயிலின் தோகைக்கும், பொன் அணியால் வகிர்க்கப்பட்ட ஓதி மின்னல் பாயும் மேகத்திற்கும் உவமிக்கப்பட்டுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் உவமிக்கும் உத்தியைக் கையாண்டுள்ளார். சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் கூந்தல், முகம், நுதல், புருவம், கண், மூக்கு, வாய், தோள், வயிறு, இடை, கை, நகம், விரல், கொப்பூழ், தொடை, கணைக்கால் போன்றவற்றை உவமித்துள்ளார்.

வருணனை உத்தியானது சங்க இலக்கியம் போன்று பெருங்கதையில் காணமுடிகின்றது. விடியல், மாலைக்காலம், சோலை, தென்றல், கார்காலம், ஆறு போன்ற இயற்கையினை வருணித்துள்ளார் கொங்குவேளிர்.

மேலும் பாத்திரங்கள் (ஆண், பெண்) இருபாலரையும் வருணித்துள்ளார். பழமொழி உவமைகளையும் சங்க இலக்கியத்தில் கூறுவது போன்றே பெருங்கதையிலும் காணமுடிகின்றது. பெருங்கதையில் அமையும் வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைந்துள்ளன. சங்க அகப் பாடல்களில் இத்தகு மிகையான உயர்வு நவிற்சிகள் இல்லை. படைத்து மொழியும் உயர்வு நவிற்சி காப்பிய இலக்கியத்தின் மூலம் கிடைத்த புதிய வரவு எனலாம்.

காப்பிய மாந்தரின் அழகினை வருணிப்பது புலனெறி வழக்கமாகும். சிறந்தவற்றை எல்லாம் ஓரிடத்தில் கொண்டுவந்து சேர்த்துக் கூறுதல் என்னும் மரபை பெருங்கதை ஆசிரியர் நன்கு உணர்ந்துள்ளார். இவ்வருணனையில் அமையும் உவமை, கற்பனை முதலானவை சங்க அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள அதே தன்மையைக் கொண்டுள்ளன.

குறியீட்டு உத்தி, உளவியல் உத்தி(கனவு), கற்பனை உத்தி, பின்னோக்கு உத்தி இவற்றினை தன்படைப்பினில் கையாண்டுள்ளார் கொங்குவேளிர்.

**சான்றெண் விளக்கம்**


1. பவணந்தி முனிவர், நன்னூல், எழுத். பக்.18.
2. தொல். இளம்பூரணர், மரபியல், நூ.உரை.110.
3. இ.மா. கோபாலகிருஷ்ணன், பேரகராதி, பக்.331.
4. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, பக்.238
5. கதிர்வேல் பிள்ளை, தமிழ்மொழியகராதி, பக்.238.
6. சண்முகம் குமாரசாமி பிள்ளை, இலக்கியச் சொல்லகராதி, பக்.33.
7. தற்காலத் தமிழ் அகராதி கிரியா. பக்.134.
8. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், பக்.146.
9. மேலது, பக்.146.
10. ச.வே. சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், பக்.6
11. வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், தமிழ் மொழியின் வரலாறு, பக்.49.
12. கோ. சுந்தரமூர்த்தி, பண்டைத் தமிழ் இலக்கியக் கொள்கை, பக்.100.
13. ரா. சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், பக்.1
14. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம்.
15. சு. செல்லப்பன், பெருங்கதை ஆராய்ச்சி, பக். 131.
16. சு. செல்லப்பன், பெருங்கதை ஆராய்ச்சி, பக். 131.
17. சு. செல்லப்பன், பெருங்கதை ஆராய்ச்சி, பக். 108.
18. ச.வே.சுப்பிரமணியனார், இலக்கியக் கனவுகள், பக்.17,18
19. Harry shaw, Dictionary of Literary Terms, P.140.
20. தா.ஏ. ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், பக்.110.
21. மேலது. பக்.111.
22. மேலது. பக்.115.
23. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம், பக்.145.
24. வெ. கனகசுந்தரம், தமிழ் ஒளியின் கவிதைகள் - ஓர் ஆய்வு, பக்.122.
25. ந. சுப்புரெட்டியார், கவிதையனுபவம், பக்.145.

## முடிவுரை

‘சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்’ என்னும் இவ்ஆய்வின் வாயிலாகக் கண்டறியப்பட்ட உண்மைகள் கீழ்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றன.

‘தழுவல் இலக்கியமும் தமிழர் மரபும்’ என்னும் இயலில் பின்வருவன கூறப்பட்டுள்ளன. ஒரு படைப்பை சற்று மாற்றி மற்றொன்றை உருவாக்குவது ‘தழுவல்’ இலக்கியமாகும். மூலப்படைப்பாளரின் புலமையை விடப் பெயர்ப்பாளரின் மேதைமை இவ்வகை மொழிபெயர்ப்பில் வெளிப்படும். தழுவல் இலக்கியம் காப்பியத்துள் ஊடுருவித் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது.

தமிழில், அமலாதித்தன், மனோகரா, சிம்மபுரி வீரன் போன்ற நாடகத்தழுவல் நூல்களும் சிறுகதைத்தழுவல் நூல்களும் காணப்படுகின்றன. வ.வே.சு. அய்யர் அவருடைய ‘மங்கையர்க்கரசியின் காதல்’ என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சிறுகதைகள். ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிக்கதைகளைத் தழுவியனவாக அமைந்துள்ளன. போரே நீ போ என்னும் புதினம் தழுவல் இலக்கியம் ஆகும்.

பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம் ஆகிய நூல்களில் தமிழர் மரபுகளைக் காணமுடிகின்றது. பெருங்கதைக் காப்பியத்தில் திருமண மரபு (நன்நாள் அறிவித்தல், முகூர்த்தம் பார்த்தல், வேள்வித்தீ) போன்றவற்றினைக் காணமுடிகின்றது. ஒற்றறியும் மரபு, தூது மரபு இவற்றினையும் பெருங்கதையில் காணமுடிகின்றது. நிமித்தம் பார்க்கும் மரபு, நம்பிக்கை மரபு போன்றவற்றினையும் காணமுடிகின்றது. கட்டிடக்கலையின் வல்லமை தழுவல் இலக்கிய நூல்களில் காணமுடிகின்றது.

எனவே தழுவலாகப் படைக்கப்பெறும் ஓர் இலக்கியத்தில், அந்தந்த மொழி, அம்மொழி பேசும் மக்கள், அவர்தம் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவை இடம்பெறும் என்பது பெறப்படுகிறது. மூலநூலில் உள்ள மரபுகள், நம்பிக்கைகள், சமூகப்பின்னணி போன்றவற்றை மொழிபெயர்க்கும் போது, தமது மொழி, மரபுகள், நம்பிக்கைகள் சார்ந்ததாகவே படைப்பாளர்கள்/மொழிபெயர்ப்பாளர்கள் அமைப்பார்கள் என உறுதிபட உரைக்கலாம். இதனையே தழுவல் மரபு என்று

குறிப்பர். அத்தகைய தன்மை தமிழில் எழுந்துள்ள தழுவல் இலக்கியங்களில் காணப்படுகிறது.

‘பெருங்கதையில் சங்க அக இலக்கிய மரபுக்கூறுகள்’ என்னும் இயலில் கண்ட செய்திகள் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க அக இலக்கிய மரபுக்கூறுகளைப் பொறுத்தமட்டில் தலைவனும் தலைவியும் கண்டு காதல் வயப்படுதல் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றது. ஐயம், தெளிவு சங்க இலக்கியத்தில் கூறியது போல், பெருங்கதைக் காப்பியத்திலும் காணமுடிகின்றது. குறிப்பறிதல் பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் ஒப்பக் கூறுகின்றன. காதல் மனவுறுதி  சங்க இலக்கியத்தில் காணப்படுவது போல் பெருங்கதைக் காப்பியத்திலும் காணப்படுகின்றது. இடந்தலைப்பாடு, தோழி கூட்டுவித்தல், நெஞ்சொடு கிளத்தல் போன்ற அகப்பொருள் துறைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் இடம்பெறுவதை அறியமுடிகிறது

இரவுக்குறி, அலருக்குப் பயப்படுதல், அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரைவு, வரைவு கடாதல், உடன்போக்கு போன்ற அகமரபுக்கூறுகள் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றன. உடன்போக்கில் சென்ற தலைவியை எண்ணி வருந்தும் செவிலியின் நிலை, நற்றாயின் நிலையினைப் பற்றி சங்க இலக்கியத்தில் கூறுவது போன்று பெருங்கதையிலும் கூறப்படுகின்றது.

ஒப்பனை - கூந்தல் ஒப்பனை, நக ஒப்பனை, வண்ணப்பொடிகள் ஒப்பனை, தொய்யில், வாசவெண்ணெய், இவைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் காணப்படுகின்றது.

பரத்தையர் வாழ்வுநிலை பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் கூறியுள்ள கருத்துகள் பெரும்பாலும் ஒப்புமையுடையனவாக உள்ளன.

‘சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்’ என்னும் அக இலக்கணம் பெருங்கதையில் இல்லை. எனினும் பிற அக இலக்கிய மரபுக்கூறுகள் தழுவல் நூலாகக் கருதப்பெறும் அக்காப்பியத்துள் இடம்பெற்றிருப்பது தமிழ் இலக்கிய மரபை ஒதுக்கிவிட்டு புதிய படைபாக்கம் சாத்தியப்படாது என்னும் கொங்குவேளிரின் உள்ளப்பாங்கை வெளிப்படுத்துகின்றது.

‘பெருங்கதையில் மணம்’ என்னும் இயலில் பின்வரும் உண்மைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பெருங்கதையில் களவு மணம் நிகழ்கிறது, கூடவே பெயர் சுட்டும் மரபும் காணப்படுகின்றது. இது அகப்பொருள் மரபில் ஏற்பட்ட நெகிழ்வு ஆகும். சங்க அகப்பாடல் மரபினோடு ஒப்புமையுடைய சடங்குகளாகப் பெருங்கதையில் திருமணத்திற்கு நன்னாள் பார்த்தல், மணமக்களை வாழ்த்துதல், மங்கல நீர் கொண்டு வருதல் போன்றவற்றைக் கூறலாம்.

சங்க அகப்பாடல் மரபினோடு மாற்றம் உடைய சடங்குகளாகப் பெருங்கதையில் அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், பொரியிடுதல், சதுர்த்தி நோன்பிருத்தல், உடன்மயிர் களைதல், நெய்யேற்றுதல் சடங்கு முதலானவற்றைக் கூறலாம். இது பிற பண்பாட்டுத் தாக்கத்தினால் ஏற்பட்டுள்ளது.

‘பெருங்கதையில் அகமரபுக்கூறுகளின் வெளிப்பாட்டு உத்திகள்’ என்னும் இயலில் விளக்கியுரைக்கப்பட்ட கருத்துகளின் சாரமாகப் பின்வருவன அமைகின்றன. ஆக்குவோனின் படைப்பாற்றலும், தனித்தன்மையும் ஒவ்வொரு கூறிலும் வெளிப்படும் போது புலமை வன்மை தெரிகின்றது. அதனை நுனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது. உத்தி என்பதற்கு அகராதியும், நிகண்டுகளும் விளக்கம் தந்துள்ளன. ‘உந்து’ என்னும் அடிப்படைச் சொல் பல்வேறு பொருள்நிலைகளைக் கொண்டுள்ளது. இதன் திரிபே ‘உத்தி’ ஆகும். அணிகளில் சிறந்ததாகவும், முதன்மையானதாகவும் எல்லா அணிகளுக்கும் அடிப்படையானதாகவும் அமைவது உவமை ஆகும். தொல்காப்பியர், பரிமாற்கலைஞர், ச.வே.சு முதலியோர் இவ்வுமைக்கு விளக்கம் அளித்துள்ளனர்.

சங்க இலக்கியங்களில் கூந்தலின் வேறு பெயர்களாக அளகம், கூந்தல், பித்தை, முச்சி, ஓதி, கூழை, கதுப்பு, குழல் போன்றவை கூறப்படுகின்றன. ஆற்றின் கருமையான அறல் (அறல் - மென்மையான மணல்) போன்ற கூந்தல், கருமுகில் போன்ற கூந்தல், நறுமணமுடைய கூந்தல், இருங்கூந்தல் (கருங்கூந்தல்) என்று கூறப்படுகின்றது. கரிய இருண்ட கூந்தல், நிறத்தால் மேகத்திற்கும், நீல மணிக்கும், கரிய வண்டுகளுக்கும், கரிய மைக்கும், இருளுக்கும் உவமிக்கப்பட்டது. கூந்தலில் சுருள்களும் மடிப்புகளும் ஆற்று அறலுக்கு உவமிக்கப்பட்டன. அவர்களின் அடர்ந்த கூந்தல் மயிலின் தோகைக்கும், பொன் அணியால் வகிர்க்கப்பட்ட ஓதி மின்னல்

பாயும் மேகத்திற்கும் உவமிக்கப்பட்டுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் உவமிக்கும் உத்தியைக் கையாண்டுள்ளார். சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் கூந்தல், முகம், நுதல், புருவம், கண், மூக்கு, வாய், தோள், வயிறு, இடை, கை, நகம், விரல், கொப்பூழ், தொடை, கணைக்கால் போன்றவற்றை உவமித்துள்ளார்.

பெருங்கதையில் அமையும் வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைந்துள்ளன. சங்க அகப் பாடல்களில் இத்தகு மிகையான உயர்வு நவிற்சிகள் இல்லை. படைத்து மொழியும் உயர்வு நவிற்சி காப்பிய இலக்கியத்தின் மூலம் கிடைத்த புதிய வரவு எனலாம்.

காப்பிய மாந்தரின் அழகினை வருணிப்பது புலனெறி வழக்கமாகும். சிறந்தவற்றை எல்லாம் ஓரிடத்தில் கொண்டுவந்து சேர்த்துக் கூறுதல் என்னும் மரபை பெருங்கதை ஆசிரியர் நன்கு உணர்ந்துள்ளார். இவ்வருணனையில் அமையும் உவமை, கற்பனை முதலானவை சங்க அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள அதே தன்மையைக் கொண்டுள்ளன.

மேற்குறிப்பிடப்பட்ட கருத்துகளை மீளாய்வு செய்து பார்க்கையில் இந்த ஆய்வேடு பின்வரும் உண்மைகளைத் தெளிவுபடுத்துவதை அறியலாம்.

- ❖ சங்க இலக்கிய அகமரபுகளும், பெருங்கதை இலக்கிய அகமரபுகளும் மனித வாழ்வின் நிகழ்வாக அமைந்துள்ளன. அகமரபு, காலத்திற்கேற்ப மாற்றம் கொண்டுள்ளமையைக் காணமுடிகின்றது.
- ❖ சங்க அகமரபில் பெயர்சுட்டா மரபு, பெருங்கதை இலக்கிய அகமரபில் பெயர் சுட்டும் மரபாக மாற்றமடைந்துள்ளது. சங்க இலக்கிய அகமரபுகள் பெருங்கதை இலக்கிய அகமரபுகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன.
- ❖ சங்ககாலத்திலும் பெருங்கதை இலக்கியக் காலத்திலும் மாறாமல் இடம்பெற்றுள்ள அகமரபுகளும் உண்டு. காலத்தின் மாற்றத்தினால் ஒருசில அகமரபுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

- மரபுகள், நம்பிக்கைகள், சமூகப்பின்னணி போன்றவற்றை மொழிபெயர்க்கும் போது தமது மொழி மரபுகள், நம்பிக்கைகள், சார்ந்ததாகவே படைப்பாளர்கள் அல்லது மொழிபெயர்ப்பாளர்கள் அமைப்பார்கள் என்று உறுதிபடக் கூறலாம்.

தழுவல் காப்பியமாகிய பெருங்கதைக் காப்பியம் காதல், திருமணம், பிரிவு போன்ற 'சங்க அகப்பொருள் கூறுகள் பலவற்றைக் கொண்டிருக்கிறது. அந்த அகப்பொருள் கூறுகள் பெருங்கதையில் இடம்பெற்றுள்ள பாங்கு தமிழின் அகக்கோட்பாட்டை வலிமையுறச் செய்கிறது.

இவற்றையெல்லாம் விரிவாகவும், நுணுகியும் ஆராய்வதன் மூலம் தமிழ் இலக்கிய மரபுகளின் நீட்சியையும் தொடர்ச்சியையும் இனங்காணமுடிகின்றது.

இந்த ஆய்வினையடுத்து,

'பெருங்கதைக் காப்பியத்தில் புறப்பொருள் மரபுகள்' குறித்து ஆய்வு மேற்கொள்ள வாய்ப்புள்ளது. பிற தழுவல் காப்பியங்களையும் பெருங்கதையையும் அகப்பொருள் மரபுகள் நோக்கில் ஒப்பிட்டு ஆய்வு செய்யவும் இயலும்.

பெருங்கதைக் காப்பியத்தை தொல்காப்பியச் செய்யுளியல் கருத்துகளின் அடிப்படையில் அணுகவும் வாய்ப்புள்ளது. இத்தகு மேலாய்வுகள் தமிழ் இலக்கிய மரபுகள் காலந்தோறும் அடைந்துவரும் மாற்றங்களைக் கண்டுணரப் பேருதவிபுரியும் எனலாம்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


❖ கனகசபாபதி, தை.ஆ. - **கலித்தொகை மூலமும் விளக்கவுரையும்,** பன்னூற்கழகம், 1937.

❖ சாமிநாதையர், உ.வே - **குறுந்தொகை,** சென்னை: உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், ஏழாம் பதிப்பு: 2017.

❖ ” - **பெருங்கதை,** சென்னை: உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், ஆறாம் பதிப்பு: 2000.

❖ சோமசுந்தரனார், பொ.வே, (உ.ஆ) - **பத்துப்பாட்டு: மூலமும் உரையும்,** திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கழகவெளியீடு. முதல் பதிப்பு: 1956.

❖ ” - **பெருங்கதை மூலமும் விளக்கவுரையும்,** கழகவெளியீடு, சென்னை.

❖ புலியூர்க் கேசிகன் - **அகநானூறு,** சாரதா பதிப்பகம், முதற் பதிப்பு: ஜீன் - 2010.

- ” - **ஐங்குறுநூறு,**
  பாரிநிலையம், சென்னை.
  இரண்டாம் பதிப்பு: 1998.
- ” - **நற்றிணை,**
  பாரி நிலையம்,
  முதற் பதிப்பு: 1980,
  மறுபதிப்பு: 2001.
- ” - **பரிபாடல் மூலமும் உரையும்**,
  சாரதா பதிப்பகம்,
  முதற் பதிப்பு: டிசம்பர், 2009.


## துணைமை ஆதாரங்ககள்


- அடிகளாசிரியர் (பதி.ஆ) - **தொல்காப்பியம்**,
  இளம்பூரணர் உரை,
  தமிழ்ப் பல்கலைக்கழகம்,
  தஞ்சாவூர். 1988.
- அன்பழகன், க. - **தமிழர் திருமணமும் இனமானமும்,**
  பூம்புகார் பதிப்பகம்,
  முதல் பதிப்பு: 1993.
- ஆனைமுத்து, வே. - **பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள்,**
  சிந்தனையாளர் கழகம்,
  திருச்சிராப்பள்ளி – 2.
  முதல் பதிப்பு: 1974.
- இராமநாதன் செட்டியார், மி.பொ., - **குறுந்தொகை வசனம்,**
- இராமலிங்கம், மா. - **நாவல் இலக்கியம்,**
  மீனாட்சி புத்தக நிலையம்,
  முதல் பதிப்பு: 1972.

❖ இலக்குவனார், சி. - **சங்க இலக்கியச் சொல்லோவியங்கள்,** திருமகள் நிலையம், சென்னை. முதல் பதிப்பு: 1990.

❖ கண்ணப்ப முதலியார், பி. - **திருக்கோவையார், 1952.**

❖ கனகசுந்தரம், வெ. - **தமிழ் ஒளியின் கவிதைகள் - ஓர் ஆய்வு**

❖ காந்தி, க. - **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்**, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113. முதல் பதிப்பு: 1980.

❖ கோவேந்தன், த. (தொ.ஆ) - **அன்போடு புணர்ந்த ஐந்திணை,** சங்கப்பாடல்கள், குறிஞ்சி (இரண்டாம் தொகுதி) வேமன் பதிப்பகம், சென்னை

” - **அன்போடு புணர்ந்த ஐந்திணை,** சங்கப்பாடல்கள், மருதம், வேமன் பதிப்பகம், சென்னை.

” - **அன்போடு புணர்ந்த ஐந்திணை,** சங்கப்பாடல்கள், நெய்தல், வேமன் பதிப்பகம், சென்னை.

” - **அன்போடு புணர்ந்த ஐந்திணை,** சங்கப்பாடல்கள், பாலை (முதல் தொகுதி), வேமன் பதிப்பகம், சென்னை.

❖ ஞானசம்பந்தன், அ.ச., - **அகமும் புறமும்,**
கங்கை புத்தக நிலையம்,
சென்னை – 600 017.
முதற்பதிப்பு: 1991.
இரண்டாம் பதிப்பு: 2001.

❖ ஞானமூர்த்தி, தா.ஏ. - **இலக்கியத் திறனாய்வியல்**,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை – 600 040.
2011.

❖ சஞ்சீவி, ந. - **மங்கல மனைமாட்சி**,
அருள்வாழ்வுப் பதிப்பகம்,
நடேச – நாராயண நிலையம்,
சென்னை – 4.
முதல் பதிப்பு: 1977.

❖ சசிவல்லி - **திருமணச்சடங்குகள்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை– 600 113.
முதல் பதிப்பு: 1985.

❖ சண்முக சுந்தரம், சு. - **பெருங்கதைப் பாத்திரங்கள்,**
காவ்யா பதிப்பகம், 2005.

❖ சண்முகம்பிள்ளை, மு.(ஆ),
பாலசுப்பிரமணியன், சி.(பொ. பதிப்) - **அகப்பொருள் மரபும் திருக்குறளும்,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதல் பதிப்பு: 1980.

❖ சண்முகவேலாயுதம், சு. - **மொழிபெயர்ப்பியல்,**
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை – 600 113.
முதல் பதிப்பு: 1985.

❖ சந்திரன், வீ. - **மொழிபெயர்ப்பு மரபுகள்,**
பயோனியர் புத்தக வெளியீடு,
திருவல்லிக்கேணி, சென்னை –5.
1990.

❖ சாமிநாதையர், உ.வே., - **உதயணன் சரித்திரச் சுருக்கம்,**
கலைமகள் காரியாலயம்,
சென்னை: உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம்,
முதல் பதிப்பு: 1963,
ஒன்பதாம் பதிப்பு: 1997.

❖ சிதம்பரனார், சாமி. - **எட்டுத்தொகையும் தமிழர்
பண்பாடும்,**
அறிவுப் பதிப்பகம், 2008.

❖ சிவபாதசுந்தரம், சு. - **சைவக்கிரியை விளக்கம்,**
யாழ்ப்பாணம்: சைவ பரிபாலன
சபை,
மூன்றாம் பதிப்பு: 1978.

❖ சீனிவாசன், ரா. - **சங்க இலக்கியத்தில் உவமைகள்,**
அணியகம் பதிப்பகம்,
சென்னை – 600 030.
முதல் பதிப்பு: 1973.
நான்காம் பதிப்பு: 1997.

❖ சுந்தரமூர்த்தி, கோ. - **பண்டைத் தமிழ் இலக்கியக்
கொள்கை**

❖ சுப்பிரமணியப்பிள்ளை, கா. - **இறையனார் அகப்பொருள்,**
1925.

❖ ” - **பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகார கருத்து**,

❖ சுப்பிரமணியன், ச.வே., - **இளங்கோவின் இலக்கிய உத்திகள்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை – 600 113.
முதல் பதிப்பு: 1984.

❖ ” - **இலக்கியக் கனவுகள்,**
1972.

❖ சுப்புரெட்டியார், ந. - **கவிதையனுபவம்,**
கழக வெளியீடு,
1961.

❖ சூரிய நாராயண சாஸ்திரியார்,
வி.கோ., - **தமிழ் மொழியின் வரலாறு,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை – 600 113.
முதல் பதிப்பு: 1903.

❖ செல்லப்பன் சிலம்பொலி., - **பெருங்கதை ஆராய்ச்சி,**
அருணோதயம் வெளியீடு,
சென்னை, 1976.

❖ சோமசுந்தரனார், பொ.வே.
இராமசாமிப்புலவர், சு.அ (உ.ஆ) - **சூளாமணி: மூலமும் உரையும்**,
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம், கழகவெளியீடு,
முதல் பதிப்பு: 1962.

❖ சோமசுந்தரனார், பொ.வே., - **உதயணகுமார காவியம்,**
கழக வெளியீடு,
சென்னை, 1964.

❖ ” - **பெருங்கதை மூலமும்**
**விளக்கவுரையும்,**
கழக வெளியீடு,
சென்னை, 1963.

❖ திருஞானசம்பந்தன், பெ. - **இந்திய எழிற்கலை,**
டாக்டர் S. இராதாகிருஷ்ணன்,
மெய்யுணர்வு மேல்நிலைக்கல்வி
நிறுவனம்,
சென்னைப் பல்கலைக் கழகம்,
முதல் பதிப்பு: 1977.

❖ துரையரங்கசாமி, மொ.அ., - **தொல்காப்பிய நெறி,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 1,
முதல் பதிப்பு: நவம்பர் 1963.

❖ தேவநேயன், ஞா. - **தமிழர் திருமணம்**,
சங்கர் பதிப்பகம்,
சென்னை – 600 049.
முதல் பதிப்பு: 1956

❖ நச்சினார்க்கினியர்(உ.ஆ) - **தொல்காப்பியம்**,
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம், லிமிடெட், திருநெல்வேலி,
சென்னை -1
முதல் பதிப்பு: 1947
இரண்டாம் பதிப்பு: 1955

- பாலசுப்பிரமணியன், கு.வெ.,
  (ப.ஆ) - **ஆய்வியல் நெறிகள்,**
  தமிழ்ப் பல்கலைக் கழகம்,
  தஞ்சாவூர், உமா நூல்
  வெளியீட்டகம்,
  முதற்பதிப்பு நவம்பர் - 2001
  மூன்றாம் பதிப்பு சூலை – 2004.
- பிருந்தாதேவி, சி. - **பழந்தமிழர் நாட்டில் காதல்,**
  செந்தமிழ்ச்செல்வி, 1953.
- புலியூர்க்கேசிகன் (பதி.ஆ) - **ஆறுமுகநாவலர்:**
  **நன்னூல் காண்டிகையுரை.**
  முல்லை நிலையம், சென்னை – 1
  முதல் பதிப்பு: 1991
  இரண்டாம் பதிப்பு: 1994.
- மகாதேவன், வா. - **திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி**,
  செந்தமிழ்ச்செல்வி, 1923.
- மணவாளன், அ.அ., - **சங்க இலக்கிய ஒப்பாய்வு,**
  நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
  2009.
- மாணிக்கம், வ.சுப., - **தமிழ்க்காதல்**,
  மெய்யப்பன் பதிப்பகம்,
  சிதம்பரம் - 608 001.
  இரண்டாம் பதிப்பு: 2005.
- முகம்மது சலீம், அ. - **இலங்கை முஸ்லிம்களின் திருமண சம்பிரதாயங்கள்,**
  நிசானா பப்ளிஷர்ஸ்,
  அப்துல்லா ஷொப்பிங்கம்ப்லெக்ஸ்,
  இலங்கை. முதல் பதிப்பு: 1998.

❖ முத்துச்சாமி ஐயர், வே. - **தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி**,
முதல் பதிப்பு: 1922, மதுரை.

❖ முனுசாமி, வே. - **வாழ்வும் இலக்கியமும்,**
வானதி பதிப்பகம்,
முதல் பதிப்பு: 1970.

❖ வரதராசன், மு., (உ.ஆ.) - திருக்குறள் தெளிவுரை,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட், சென்னை, டிசம்பர் 2000,
158வது பதிப்பு.

❖ விசயரத்தினம், கா. - **சங்ககாலத் தமிழர் வாழ்வியல்,**
(WIJEY PUBLICATIONS), 2016.

❖ வித்தியானந்தன், சு. - **தமிழர் சால்பு,**
பாரி புத்தகப் பண்ணை,
திருவல்லிக்கேணி,
சென்னை – 5. முதல் பதிப்பு: 1971.

❖ ஜகந்நாதன், கி.வா., - **தமிழ்த்தாத்தா,**
(உ.வே. சாமிநாத ஐயர்)
சாகித்திய அக்காதெமி,
1983.

## ஆய்வேடுகள்

❖ அழகப்பன், மா. - **பெருங்கதை காட்டும் சமயமும் சமுதாயமும்,**
(பாரதியார் பல்கலைக்கழக
முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பட்ட ஆய்வேடு)

அரசுகலைக் கல்லூரி (தன்னாட்சி)
கோயம்புத்தூர். அக்டோபர். 1999.

❖ கோடித்துரை, ப. - **பெருங்கதை - இலக்கிய மதிப்பீடு,** (திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு)
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர். மார்ச் 2005.

❖ தனலட்சுமி, நா. - **பெருங்கதையில் பாத்திரப் படைப்பு,** (பாரதியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு)
நிர்மலா மகளிர் கல்லூரி,
கோயம்புத்தூர்.
அக்டோபர் 2009.

❖ நீலாவதி, பா. - **பெருங்கதை மகளிர்,** (பாரதியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு)
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி பேரூர்,
கோவை. ஜீன் - 1992.

❖ பொன்னுத்தாய், இரா. - **பெருங்கதையில் பெண்மை,** பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர், (1993 - 1999) காஞ்சி மாமுனிவர் பட்டமேற்படிப்பு மையம், புதுச்சேரி - 08.

❖ மணிமாறன், சு. - **பண்பாட்டு மானிடவியல் நோக்கில் பெருங்கதை,** (மதுரைக் காமராசர் பல்கலைக் கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு) மதுரைகாமராசர் பல்கலைக்கழகம், மதுரை. டிசம்பர்- 2006.

## ஆய்வுக்கட்டுரைகள்

❖ சரவண ஆறுமுகம் - **தமிழர் திருமண முறைகள்,** கட்டுரை.

❖ சிவகாமி, க. - **தமிழில் வந்துள்ள மொழிபெயர்ப்புகள்,** பதினான்காம் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு.

❖ இந்திரபவாநி, வ. - **உதயணன் மானனீகை கடிதங்கள்,** பெருங்கதையில் ஒரு பெண்ணியப் பார்வை.

❖ இளவரசு, இரா. - **பெருங்கதைப் பெயராய்வு,** ஆய்வுக்கோவை - 1970.

## ஆய்வுமாலை


- குருசாமி, மரா.போ., - **பெருங்கதை ஆய்வு மாலை,** தொகுதி - 1 தொகுதி – 2
- சண்முகதாஸ், அ. (தொ.ஆ) - **சங்க இலக்கிய ஆய்வுகள்,** (க. கைலாசபதி நினைவுக் கருத்தரங்குக் கட்டுரைகள்), தேசிய கலை இலக்கியப் பேரவை, டிசம்பர் - 2002.
- சாந்தலிங்க இராமசாமி (தொ.ஆ) - **பெருங்கதையில் காப்பியக் கூறுகள்,** வெளியீடு: குமாரதேவர் பதிப்பகம், பேரூராதீனம், பேரூர். 2005 டிசம்பர்.

  ,, - **பெருங்கதையில் தலைமைப் பண்பினர்,** பதிப்பாசிரியர்: தவத்திரு. மருதாசல அடிகளார் வெளியீடு: குமாரதேவர் பதிப்பகம், பேரூராதீனம், பேரூர். 2005 டிசம்பர்.

  ,, - **பெருங்கதை அறிவாண்மையும் பல்துறை அறிவும்,** குமாரதேவர் பதிப்பகம், பேரூராதீனம், பேரூர். 2005 டிசம்பர்.

” - **பெருங்கதையும் சமயமும்,**
திரு. இராமச்சந்திரன் செட்டியார்
நினைவு வெளியீடு,
கோவை: குமாரதேவர் பதிப்பகம்,
பேரூர் - 2003.

” - **பெருங்கதையில் பெண்மை,**
கோவை: குமாரதேவர் பதிப்பகம்,
பேரூர் - 2005.

” - **பெருங்கதையில் வாழ்வியல்,**
கோவை: குமாரதேவர் பதிப்பகம்,
பேரூர் - 2005.

” - **கொங்குநாடும் கொங்கு வேளிரும்,**
கோவை: குமாரதேவர் பதிப்பகம்,
பேரூர் - 2005.

” - **பெருங்கதையில் விளையாட்டுக்கள்,**
வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்
நினைவு வெளியீடு,
கோவை: குமாரதேவர் பதிப்பகம்,
பேரூர் - 2005.

- பத்மநாதன், சி. (ப.ஆ) - **சங்க இலக்கியமும் சமூகமும்,**
வெளியீடு: இந்துசமய கலாசார
அலுவல்கள் திணைக்களம்,
கொழும்பு, இலங்கை.
நவம்பர்- 2006.

- மோகன், இரா. (ப.ஆ) - **ஆய்வுக்கோவை, தொகுதி-2,**

## அகராதி

- கதிர்வேற் பிள்ளை, நா. - **தமிழ்மொழியகராதி,** சாரதா பதிப்பகம், சென்னை.14 2003.
- கோபாலகிருஷ்ணக்கோன், இ.மா., - **மதுரைத் தமிழ்ப் பேரகராதி,** மதுரை – 20, முதல் பதிப்பு: 1966
- சண்முகம் குமாரசாமி பிள்ளை - **இலக்கியச் சொல்லகராதி,**
- சிங்காரவேலு முதலியார், ஆ. - **அபிதான சிந்தாமணி,** சாரதா பதிப்பகம், சென்னை.14 2003.
- சுப்பிரமணியன், பி.ஆர்., - **தற்காலத் தமிழ் அகராதி,** க்ரியா வெளியீடு, சென்னை-14 1992.

## களஞ்சியம்

- பாலுச்சாமி, நா., (மு.ப.) - **வாழ்வியல் களஞ்சியம் (தொ. 1),** தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991.

## நிகண்டு

- ஜெயதேவன், வ. (பதி.ஆ) சிவநேசன். வை. (தொகு.ஆ) - **நாமதீப நிகண்டு அகராதியும் மூலமும்**, சென்னைப்பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித்திட்ட வெளியீடு, முதற்பதிப்பு: 2007.

# சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்

**(SANGA AGAMARAPUK KURUKALUM PERUNKATAIYUM)**

(புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு)

ஆய்வாளர்

ஆ. சரோஜினி

**A. SAROJINI**

பதிவெண் : 20161125011

நெறியாளர்

முனைவர் சிவ. மாதவன்

இணைப்பேராசிரியர் (ப.நி)




தமிழியல் துறை

காஞ்சி மாமுனிவர் அரசினர் பட்டமேற்படிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்

(தன்னாட்சி)

புதுச்சேரி - 605 008.

செப்டம்பர் - 2021

## முடிவுரை

‘சங்க அகமரபுக் கூறுகளும் பெருங்கதையும்’ என்னும் இவ்ஆய்வின் வாயிலாகக் கண்டறியப்பட்ட உண்மைகள் கீழ்வருமாறு தொகுத்துரைக்கப்படுகின்றன.

‘தழுவல் இலக்கியமும் தமிழர் மரபும்’ என்னும் இயலில் பின்வருவன கூறப்பட்டுள்ளன. ஒரு படைப்பை சற்று மாற்றி மற்றொன்றை உருவாக்குவது ‘தழுவல்’ இலக்கியமாகும். மூலப்படைப்பாளரின் புலமையை விடப் பெயர்ப்பாளரின் மேதைமை இவ்வகை மொழிபெயர்ப்பில் வெளிப்படும். தழுவல் இலக்கியம் காப்பியத்துள் ஊடுருவித் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது.

தமிழில், அமலாதித்தன், மனோகரா, சிம்மபுரி வீரன் போன்ற நாடகத்தழுவல் நூல்களும் சிறுகதைத்தழுவல் நூல்களும் காணப்படுகின்றன. வ.வே.சு. அய்யர் அவருடைய ‘மங்கையர்க்கரசியின் காதல்’ என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சிறுகதைகள். ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மொழிக்கதைகளைத் தழுவியனவாக அமைந்துள்ளன. போரே நீ போ என்னும் புதினம் தழுவல் இலக்கியம் ஆகும்.

பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம் ஆகிய நூல்களில் தமிழர் மரபுகளைக் காணமுடிகின்றது. பெருங்கதைக் காப்பியத்தில் திருமண மரபு (நன்நாள் அறிவித்தல், முகூர்த்தம் பார்த்தல், வேள்வித்தீ) போன்றவற்றினைக் காணமுடிகின்றது. ஒற்றறியும் மரபு, தூது மரபு இவற்றினையும் பெருங்கதையில் காணமுடிகின்றது. நிமித்தம் பார்க்கும் மரபு, நம்பிக்கை மரபு போன்றவற்றினையும் காணமுடிகின்றது. கட்டிடக்கலையின் வல்லமை தழுவல் இலக்கிய நூல்களில் காணமுடிகின்றது.

எனவே தழுவலாகப் படைக்கப்பெறும் ஓர் இலக்கியத்தில், அந்தந்த மொழி, அம்மொழி பேசும் மக்கள், அவர்தம் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவை இடம்பெறும் என்பது பெறப்படுகிறது. மூலநூலில் உள்ள மரபுகள், நம்பிக்கைகள், சமூகப்பின்னணி போன்றவற்றை மொழிபெயர்க்கும் போது, தமது மொழி, மரபுகள், நம்பிக்கைகள் சார்ந்ததாகவே படைப்பாளர்கள்/மொழிபெயர்ப்பாளர்கள் அமைப்பார்கள் என உறுதிபட உரைக்கலாம். இதனையே தழுவல் மரபு என்று

குறிப்பர். அத்தகைய தன்மை தமிழில் எழுந்துள்ள தழுவல் இலக்கியங்களில் காணப்படுகிறது.

‘பெருங்கதையில் சங்க அக இலக்கிய மரபுக்கூறுகள்’ என்னும் இயலில் கண்ட செய்திகள் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க அக இலக்கிய மரபுக்கூறுகளைப் பொறுத்தமட்டில் தலைவனும் தலைவியும் கண்டு காதல் வயப்படுதல் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றது. ஐயம், தெளிவு சங்க இலக்கியத்தில் கூறியது போல், பெருங்கதைக் காப்பியத்திலும் காணமுடிகின்றது. குறிப்பறிதல் பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் ஒப்பக் கூறுகின்றன. காதல் மனவுறுதி சங்க இலக்கியத்தில் காணப்படுவது போல் பெருங்கதைக் காப்பியத்திலும் காணப்படுகின்றது. இடந்தலைப்பாடு, தோழி கூட்டுவித்தல், நெஞ்சொடு கிளத்தல் போன்ற அகப்பொருள் துறைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் இடம்பெறுவதை அறியமுடிகிறது

இரவுக்குறி, அலருக்குப் பயப்படுதல், அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரைவு, வரைவு கடாதல், உடன்போக்கு போன்ற அகமரபுக்கூறுகள் சங்க இலக்கியத்திலும் பெருங்கதையிலும் ஒத்துப்போகின்றன. உடன்போக்கில் சென்ற தலைவியை எண்ணி வருந்தும் செவிலியின் நிலை, நற்றாயின் நிலையினைப் பற்றி சங்க இலக்கியத்தில் கூறுவது போன்று பெருங்கதையிலும் கூறப்படுகின்றது.

ஒப்பனை - கூந்தல் ஒப்பனை, நக ஒப்பனை, வண்ணப்பொடிகள் ஒப்பனை, தொய்யில், வாசவெண்ணெய், இவைகள் சங்க இலக்கியத்தில் கூறப்படுவது போன்று பெருங்கதையிலும் காணப்படுகின்றது.

பரத்தையர் வாழ்வுநிலை பற்றி சங்க இலக்கியமும் பெருங்கதையும் கூறியுள்ள கருத்துகள் பெரும்பாலும் ஒப்புமையுடையனவாக உள்ளன.

‘சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்’ என்னும் அக இலக்கணம் பெருங்கதையில் இல்லை. எனினும் பிற அக இலக்கிய மரபுக்கூறுகள் தழுவல் நூலாகக் கருதப்பெறும் அக்காப்பியத்துள் இடம்பெற்றிருப்பது தமிழ் இலக்கிய மரபை ஒதுக்கிவிட்டு புதிய படைபாக்கம் சாத்தியப்படாது என்னும் கொங்குவேளிரின் உள்ளப்பாங்கை வெளிப்படுத்துகின்றது.

'பெருங்கதையில் மணம்' என்னும் இயலில் பின்வரும் உண்மைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பெருங்கதையில் களவு மணம் நிகழ்கிறது, கூடவே பெயர் சுட்டும் மரபும் காணப்படுகின்றது. இது அகப்பொருள் மரபில் ஏற்பட்ட நெகிழ்வு ஆகும். சங்க அகப்பாடல் மரபினோடு ஒப்புமையுடைய சடங்குகளாகப் பெருங்கதையில் திருமணத்திற்கு நன்னாள் பார்த்தல், மணமக்களை வாழ்த்துதல், மங்கல நீர் கொண்டு வருதல் போன்றவற்றைக் கூறலாம்.

சங்க அகப்பாடல் மரபினோடு மாற்றம் உடைய சடங்குகளாகப் பெருங்கதையில் அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், பொரியிடுதல், சதுர்த்தி நோன்பிருத்தல், உடன்மயிர் களைதல், நெய்யேற்றுதல் சடங்கு முதலானவற்றைக் கூறலாம். இது பிற பண்பாட்டுத் தாக்கத்தினால் ஏற்பட்டுள்ளது.

'பெருங்கதையில் அகமரபுக்கூறுகளின் வெளிப்பாட்டு உத்திகள்' என்னும் இயலில் விளக்கியுரைக்கப்பட்ட கருத்துகளின் சாரமாகப் பின்வருவன அமைகின்றன. ஆக்குவோனின் படைப்பாற்றலும், தனித்தன்மையும் ஒவ்வொரு கூறிலும் வெளிப்படும் போது புலமை வன்மை தெரிகின்றது. அதனை நுனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது. உத்தி என்பதற்கு அகராதியும், நிகண்டுகளும் விளக்கம் தந்துள்ளன. 'உந்து' என்னும் அடிப்படைச் சொல் பல்வேறு பொருள்நிலைகளைக் கொண்டுள்ளது. இதன் திரிபே 'உத்தி' ஆகும். அணிகளில் சிறந்ததாகவும், முதன்மையானதாகவும் எல்லா அணிகளுக்கும் அடிப்படையானதாகவும் அமைவது உவமை ஆகும். தொல்காப்பியர், பரிமாற்கலைஞர், ச.வே.சு முதலியோர் இவ்வுமைக்கு விளக்கம் அளித்துள்ளனர்.

சங்க இலக்கியங்களில் கூந்தலின் வேறு பெயர்களாக அளகம், கூந்தல், பித்தை, முச்சி, ஓதி, கூழை, கதுப்பு, குழல் போன்றவை கூறப்படுகின்றன. ஆற்றின் கருமையான அறல் (அறல் - மென்மையான மணல்) போன்ற கூந்தல், கருமுகில் போன்ற கூந்தல், நறுமணமுடைய கூந்தல், இருங்கூந்தல் (கருங்கூந்தல்) என்று கூறப்படுகின்றது. கரிய இருண்ட கூந்தல், நிறத்தால் மேகத்திற்கும், நீல மணிக்கும், கரிய வண்டுகளுக்கும், கரிய மைக்கும், இருளுக்கும் உவமிக்கப்பட்டது. கூந்தலில் சுருள்களும் மடிப்புகளும் ஆற்று அறலுக்கு உவமிக்கப்பட்டன. அவர்களின் அடர்ந்த கூந்தல் மயிலின் தோகைக்கும், பொன் அணியால் வகிர்க்கப்பட்ட ஓதி மின்னல்

பாயும் மேகத்திற்கும் உவமிக்கப்பட்டுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் உவமிக்கும் உத்தியைக் கையாண்டுள்ளார். சங்க இலக்கியம் கூறுவது போன்று பெருங்கதை ஆசிரியரும் கூந்தல், முகம், நுதல், புருவம், கண், மூக்கு, வாய், தோள், வயிறு, இடை, கை, நகம், விரல், கொப்பூழ், தொடை, கணைக்கால் போன்றவற்றை உவமித்துள்ளார்.

பெருங்கதையில் அமையும் வருணனைகள் உயர்வு நவிற்சியாக அமைந்துள்ளன. சங்க அகப் பாடல்களில் இத்தகு மிகையான உயர்வு நவிற்சிகள் இல்லை. படைத்து மொழியும் உயர்வு நவிற்சி காப்பிய இலக்கியத்தின் மூலம் கிடைத்த புதிய வரவு எனலாம்.

காப்பிய மாந்தரின் அழகினை வருணிப்பது புலனெறி வழக்கமாகும். சிறந்தவற்றை எல்லாம் ஓரிடத்தில் கொண்டுவந்து சேர்த்துக் கூறுதல் என்னும் மரபை பெருங்கதை ஆசிரியர் நன்கு உணர்ந்துள்ளார். இவ்வருணனையில் அமையும் உவமை, கற்பனை முதலானவை சங்க அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள அதே தன்மையைக் கொண்டுள்ளன.

மேற்குறிப்பிடப்பட்ட கருத்துகளை மீளாய்வு செய்து பார்க்கையில் இந்த ஆய்வேடு பின்வரும் உண்மைகளைத் தெளிவுபடுத்துவதை அறியலாம்.

- ❖ சங்க இலக்கிய அகமரபுகளும், பெருங்கதை இலக்கிய அகமரபுகளும் மனித வாழ்வின் நிகழ்வாக அமைந்துள்ளன. அகமரபு, காலத்திற்கேற்ப மாற்றம் கொண்டுள்ளமையைக் காணமுடிகின்றது.
- ❖ சங்க அகமரபில் பெயர்சுட்டா மரபு, பெருங்கதை இலக்கிய அகமரபில் பெயர் சுட்டும் மரபாக மாற்றமடைந்துள்ளது. சங்க இலக்கிய அகமரபுகள் பெருங்கதை இலக்கிய அகமரபுகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன.
- ❖ சங்ககாலத்திலும் பெருங்கதை இலக்கியக் காலத்திலும் மாறாமல் இடம்பெற்றுள்ள அகமரபுகளும் உண்டு. காலத்தின் மாற்றத்தினால் ஒருசில அகமரபுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

- மரபுகள், நம்பிக்கைகள், சமூகப்பின்னணி போன்றவற்றை மொழிபெயர்க்கும் போது தமது மொழி மரபுகள், நம்பிக்கைகள், சார்ந்ததாகவே படைப்பாளர்கள் அல்லது மொழிபெயர்ப்பாளர்கள் அமைப்பார்கள் என்று உறுதிபடக் கூறலாம்.

தழுவல் காப்பியமாகிய பெருங்கதைக் காப்பியம் காதல், திருமணம், பிரிவு போன்ற 'சங்க அகப்பொருள் கூறுகள் பலவற்றைக் கொண்டிருக்கிறது. அந்த அகப்பொருள் கூறுகள் பெருங்கதையில் இடம்பெற்றுள்ள பாங்கு தமிழின் அகக்கோட்பாட்டை வலிமையுறச் செய்கிறது.

இவற்றையெல்லாம் விரிவாகவும், நுணுகியும் ஆராய்வதன் மூலம் தமிழ் இலக்கிய மரபுகளின் நீட்சியையும் தொடர்ச்சியையும் இனங்காணமுடிகின்றது.

இந்த ஆய்வினையடுத்து,

'பெருங்கதைக் காப்பியத்தில் புறப்பொருள் மரபுகள்' குறித்து ஆய்வு மேற்கொள்ள வாய்ப்புள்ளது. பிற தழுவல் காப்பியங்களையும் பெருங்கதையையும் அகப்பொருள் மரபுகள் நோக்கில் ஒப்பிட்டு ஆய்வு செய்யவும் இயலும்.

பெருங்கதைக் காப்பியத்தை தொல்காப்பியச் செய்யுளியல் கருத்துகளின் அடிப்படையில் அணுகவும் வாய்ப்புள்ளது. இத்தகு மேலாய்வுகள் தமிழ் இலக்கிய மரபுகள் காலந்தோறும் அடைந்துவரும் மாற்றங்களைக் கண்டுணரப் பேருதவிபுரியும் எனலாம்.